KALKI
17.1.88
ரூ. 2.

# கல்கி

மேல்மருவத்தூர்:

## ஆதிபராசக்தி அருள் பெருகட்டும்!



“தினமும் மூணு வேளை கேரமில்க் கொடுங்க, சரியாயிடும்!”




“குழந்தைகளே... இன்னிக்கு
கேரமில்க் சாப்பிட்டிங்களா!”






பாரிஸின் தரமான தயாரிப்புகள்




HTA 7077

# சிரிப்புப் பொங்கட்டும்!



ஒருவர்: நல்லவேளை! நம்ம அரசர் நாலு கல்யாணம் செஞ்சுக்காம இருந்தாரே...!

மற்றவர்: ஏன் அப்படி சொல்றே?

முதலாமவர்: அப்படி பண்ணியிருந்தா, இப்ப நாடு நாலாக அல்லவா பிரிந்திருக்கும்!

— க. இளங்கோ.

"ஏழுமணிக்கு மாபெரும் பொதுக் கூட்டம் நடைபெறுமின்னு விளம்பரம் செய்தாங்களே..! இப்போ... கருத்தரங்கம் நடைபெறுமின்னு மைக்லே சொல்றுங்களே ஏன்...?"

"கூட்டத்துக்கு வந்ததே மொத்தம் எட்டு பேருதான் அதனாலே கருத்தரங்கம் நடத்துறுங்க."

— சித்தமல்லி ஜெகந்நாதன்.





"இந்தப் பாலத்துக்கு "மூணு தலை முறைப் பாலம்னு" பேர் எப்படி வந்தது...?"

"தாத்தா மந்திரியா இருக்கும் போது திட்டம் போட்டார். அவரோட மகன் மந்திரியானதும் அடிக்கல் நாட்டினார். பேரன் மந்திரி திறந்து வச்சார்...!"

அரசியல்வாதி: தேர்தலில் நிற்கும்போது, 'ரோடு போடுவேன், தெருக்குழாய் போடுவேன்'னு வாக்குறுதி கொடுத்தது வாஸ்தவம்தான். அதுக்காக, அந்த ரோட்டில் பஸ் விடுங்க, குழாயில் தண்ணீர் விடுங்கன்னு வந்து கேட்டால் நான் என்ன பண்ணுவேன்...?

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா.



# லாபம்: 100 சதவிகிதம்!



* ஒவ்வொரு பூவுக்கும் பைசா......

**'எ**ன்னடா விவசாயம்!' என்று சலித்துப் போயிருந்தார் வெங்கிடபதி. பத்து ஏக்கரில் கரும்பும், நெல்லும் சாகுபடி செய்து, என்னதான் மகசூல் எடுத்தாலும் கையில் காசே தங்கவில்லை. மனம் சோர்ந்திருந்தது. அந்தச் சமயத்தில், விவசாயப் பல்கலைக் கழகத்தைச் சேர்ந்த சம்பந்தமூர்த்தி என்பவர் வெங்கிடபதியிடம் மூன்று கனகாம்பரச் செடிகளைக் கொடுத்து, "இவை டெல்லி கனகாம்பரச் செடிகள், உங்கள் வீட்டில் வைத்து வளருங்கள்" என்றார். வெங்கிடபதியும் செடிகளை நட்டுவிட்டு மனைவியின் பொறுப்பில் அவற்றை விட்டு விட்டார்.

சீக்கிரமே மூன்று செடிகளும் பூத்துக் குலுங்க ஆரம்பித்தன. பூக்களை வீடு வீடாகச் சென்று விற்றதில் கிடைத்த பணத்தைக் கொண்டு வெங்கிடபதியின் மனைவி, வீட்டின் அன்றாடச் செலவுகளைச் சமாளித்து வந்தார். பளிச்சென்ற ஆரஞ்சு நிறத்தில் இருந்த டெல்லி கனகாம்பரத்துக்கு, வெங்கிடபதி வசித்த கூடப்பாக்கம் கிராமத்துப் பெண்களிடையே ஏகக் கிராக்கி ஏற்பட்டது.

அப்போதுதான் விழித்துக் கொண்டார் வெங்கிடபதி. அருகே இருந்த பாண்டிச்சேரிக்குச் சென்று பூ மார்க்கெட்டை அலசினார். அங்கே சோகை பிடித்த ரோஸ் நிறத்தில் நாட்டுக் கனகாம்பரம்தான் இருந்ததேயொழிய டெல்லி கனகாம்பரம் கண்ணில் படவேயில்லை. ஒரு தீர்மானத்துடன் ஊர் திரும்பிய வெங்கிடபதி மனைவியின் வளையல்களை பாங்கில் அடகு வைத்துப் பத்தாயிரம் ரூபாய் பெற்றுக் கொண்டு டெல்லி கனகாம்பரம் செடிகளை வாங்கிப் பயிரிட்டு அமோக லாபம் பெற ஆரம்பித்தார்.

**'மு**ற்போக்கு விவசாயி' என்று நாளிதழ்கள் பாராட்டிய வெங்கிடபதியைக் கூடப்பாக்கம் சென்று சந்தித்தோம். பாண்டிச்சேரியிலிருந்து பன்னிரண்டாவது கிலோ மீட்டரில் பஸ்ஸை விட்டு இறங்கி, விசாரித்துக் கொண்டு, பெருமாள் கோயிலை அடுத்துள்ள வீட்டை அடைந்தோம். அங்கே ஒரு சிறிய திண்ணை மாநாடு கூடியிருந்தது. இரண்டு மூன்று வெளியூர் ஆசாமிகளுக்குக் கனகாம்பரம் பயிரிடுதல் பற்றிச் சொல்லிக் கொண்டிருந்தார் வெங்கிடபதி. சமீப காலமாகவே தினமும் வெங்கிடபதியைத் தேடி வெளியூர் விவசாயிகள் வருவதாக அறிந்தோம். தினமும் முப்பது கடிதங்களாவது வருகின்றனவாம். "எல்லாவற்றையும் படிக்கக் கூட நேரமிருப்பதில்லை!" என்று சிறிது பெருமை தொனிக்கக் கூறிய அவரிடம், அவரது வெற்றிக் கதையை விவரமாகச் சொல்லும்படி கேட்டோம். அவரும் ஆரம்பம் முதல் கூறினார்:

"நான் முதன் முதலில் பத்தாயிரம் ரூபாயை எடுத்துக் கொண்டு செடி வாங்கப் போன போது ஒரே இடத்தில் செடிகள் கிடைக்கவில்லை. சுற்றி அலைந்து ஒரு செடி பத்து ரூபாய் மேனிக்கு ஆயிரம் செடிகளைப் பல்வேறு இடங்களில் வாங்கிக் கொண்டு திரும்பினேன். பூச்செடியை நம்பிப் பணத்தை முதலீடு செய்ததில் என் மனைவிக்கு என்னிடம் ரொம்பக் கோபம். ஒரு மாதம் அவள் என்னிடம் முகம் கொடுத்துப் பேசவில்லை.

* உயிரூட்டப்பட்ட இலை.



"இனி பின்வாங்க முடியாது என்ற

நிலையில் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு, பத்து சென்டு நிலத்தைச் செடிக்குத் தேவையான வகையில் செம்மண்ணும், மணலும் கலந்திட்டுத் தொழுவுரமிட்டுப் பண்படுத்தினேன்! செடிகளை நட்டேன். சீக்கிரமே டெல்லி கனகாம்பரமும் (இதைச் சௌந்தர்யா கனகாம்பரம் என்றும் சொல்வார்கள்) காந்தி கனகாம்பரம் எனப்படும் மஞ்சள் நிறக் கனகாம்பரமும் பூத்துக் குலுங்கின. மூன்றே மாதங்களில் கடனைத் திருப்பிச் செலுத்தி வளையல்களை மீட்டு விட்டேன்! அப்புறம் என்ன...? தொடர்ந்து லாபம் வந்து கொண்டேயிருக்கிறது. பூக்களுக்குக் கிராக்கி அதிகமாகியிருக்கிறது. தேவைக்கேற்ப உற்பத்தி பண்ண முடியவில்லை. விழுப்புரம், சென்னை மார்க்கெட்டுகளுக்கு இன்னும் டெல்லி கனகாம்பரம் செல்லவில்லை. எனவே, நூறு சதவிகிதத்திற்கு மேல் லாபம் தரக்கூடிய இந்தக் கனகாம்பர விவசாயத்தில் இறங்கும் விவசாயிகள் இவ்வூர் மார்க்கெட்டுகளைப் பிடிக்கலாம்'' என்றார்.

"நூறு சதவிகிதம் லாபமா...?'' என்று வியப்புடன் கேட்டோம்.

"ஆமாம் சார், ஒரு சின்னக் கணக்குப் போடுங்களேன்...'' என்று நமக்கு வேலை கொடுத்தார் வெங்கிடபதி. "ஒரு ஏக்கரில் ஆறாயிரம் செடிகள் வைக்கலாம். ஜூலை, ஆகஸ்டுதான் பூ சீசன் என்றாலும் வருடம் முழுவதும் பூத்துக் கொண்டேயிருக்கிறது. செடி ஒன்றுக்குத் தினமும் ஐம்பது பூக்களாவது பூக்கும். ஆறாயிரம் செடிகளில் மூன்று லட்சம் பூக்கள். ஒரு கிலோ எடைக்குப் பதிமூன்றாயிரம் பூக்கள் நிற்கும் என்பதால் ஒரு ஏக்கரில் நாளொன்றுக்குச் சுமார் இருபது கிலோ பூ விளையும். ஒரு கிலோ பூவுக்குச் சாதாரண நாட்களில் நூறு ரூபாய் கிடைக்கிறது. (பண்டிகை, கல்யாண சீசனில் விலை அதிகம்) இருபது கிலோவுக்கு இரண்டாயிரம் ரூபாய்!—இது மிகக் குறைந்தபட்சக் கணக்கு... மேலும் பூக்களைக் கிடங்கில் போட்டு நாள்பட வைத்து விற்க முடியாது என்பதால் அவற்றுக்கு வரி கிடையாது."

* வெங்கிடபதி



* Mist Chamber.

என்றார் வெங்கிடபதி.

ஆச்சரியத்திலிருந்து மீண்டு, ஒருவாறு சுதாரித்துக் கொண்டு அவரிடம் கேட்டோம்: "டெல்லி கனகாம்பரத்தைப் பெரிய அளவில் பயிர் செய்து வியாபாரத்தில் ஈடுபட்ட முதல் நபர் நீங்கள்தானா?"

"இல்லை! காஞ்சிபுரம் அருகே களக்காட்டூரில் தியாகராஜ முதலியார் 1952 லேயே இதைப் பயிர் செய்து அமோகப் பலன் கண்டுள்ளார். ஆனால், அவரால் செடிகளை இனவிருத்தி செய்ய முடியாததால் அவை நாளாவட்டத்தில் அழிந்து போயின. ஒரு செடியின் ஆயுள் நான்கைந்து வருடங்கள்தான்'' என்றார்.

"செடிகளின் இனவிருத்திக்கு நீங்கள் என்ன செய்கிறீர்கள்?'' எனக் கேட்டோம்.

"செடிகளிலிருந்து கிளைகளைக் கிள்ளி எடுத்துச் செம்மண், மணல் கலவை நிரம்பிய பிளாஸ்டிக் பைகளில் அவற்றுக்கு 'உயிர் ஊட்ட' வேண்டும். இக்'கன்றுகள்' நாற்பத்

* தேடி வரும் விவசாயிகளுக்கு விளக்குகிறார் வெங்கிடபதி.



தைந்து நாட்களுக்குக் கட்டுப்படுத்தப்பட்ட மிதமான சீதோஷ்ண நிலையில் இருக்க வேண்டும் என்பதால் **Mist Chamber** என்ற ஓர் அறையை உருவாக்கி, அதனுள் அவற்றை வைக்கிறோம். அவ்வப்போது தண்ணீர் தெளித்து, வேர் விடும் வரை பாதுகாக்கிறோம். பிறகு பூமியில் நடுகிறோம்'' என்று விளக்கிய வெங்கிடபதி, தற்போது பூ வியாபாரத்தில் மட்டுமின்றிக் கனகாம்பரச் செடிகள் வியாபாரத்திலும் இறங்கியுள்ளார். கையில் ஒரு லட்சம் செடிகளுக்கு 'ஆர்டர்' வைத்துள்ளார். நாற்பத்தைந்து நாட்களில் முப்பதாயிரம் செடிகள் தயாராகின்றன அவர் பண்ணையில்! செடி ஒன்றுக்கு ஐந்து ரூபாய் வரை கிடைக்கிறது.

'[illegible]ன் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற நல்லெண்ணத்துடன் கனகாம்பரம் பயிரிடும் முறையைப் பலருக்குச் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருக்கிறார் வெங்கிடபதி. கூடப்பாக்கம் சுற்று வட்டாரத்து விவசாயிகள் பலர் இந்தச் சாகுபடியில் இறங்கி நல்ல லாபம் சம்பாதிக்க ஆரம்பித்துள்ளனர். வெங்கிடபதியின் மகனும் அரை ஏக்கரில் கனகாம்பரம் பயிர் செய்து அமோகமாக இருக்கிறார்.

அதிகாலையில் பூப்பறித்துத் தந்து நூறு கிராமுக்கு நாற்பது பைசா என்று கூலி பெறும் பள்ளிக் குழந்தைகளும், செடிகளை வைத்து விற்கத் தொட்டிகள் செய்து தரும் குயவர்களும் கூட வெங்கிடபதியை வாழ்த்துகின்ற அளவுக்கு வருமானம் பெறுகின்றனர்.

தமக்கு முதன் முதலில் கடனளித்து உதவிய வள்ளலார் வங்கியையும், செடிகளின் இனவிருத்தி முறையைக் கற்றுக் கொடுத்த விவசாய இணை இயக்குனர் (தற்போது பாண்டிச்சேரி பல்கலைக் கழகத்தில் பணிபுரிபவர்) நடராஜனையும் நன்றியுடன் குறிப்பிட்டார் வெங்கிடபதி. விவசாயத்தில் பட்ட மேல் படிப்பை முடித்துள்ள ஒரு நண்பரின் துணையுடன் கனகாம்பரத்தை இனவிருத்தி செய்யும் வழிகளில் புதிய ஆராய்ச்சிகளை மேற்கொள்ளப் போகிறாராம்.

எட்டாவதுவரையே படித்துள்ள வெங்கிடபதி, வெள்ளை மனத்துடன், "பாருங்கள் சார்! நான் எவ்வளவு கஷ்டமான நிலைமையிலிருந்து முன்னேறியிருக்கேன்!'' என்று தமது பாங்க் பாஸ் புத்தகங்களை 'ஆரம்ப முதல் இன்று வரை பிரித்துக் காட்டிய போது, 'வாழ நினைத்தால் வாழலாம்' என்ற பாட்டுதான் நினைவு வந்தது.

**— தில்லப்பா**

புகைப்படங்கள்: **எட்வர்ட்**

## நீங்கள் கேட்டவை — தராசு

* கிருத்திகா, விருதுநகர்.

? கணிதமேதை இராமானுஜம் பற்றி கல்கியில் ஏன் வெளியிடவில்லை?

! தீபாவளி மலரில் அற்புதமான கட்டுரை ஒன்று இடம் பெற்றுள்ளது. கடன் வாங்கியாவது படித்து விடுங்கள்!

* க. இளங்கோ, நந்தியநல்லூர்.

? தமது சிலை உடைக்கப்பட்டது பற்றிக் கலைஞரின் கவிதை?

! கலக்கமடையாமல் கவிதை பாடிய மனத்துணிவு பாராட்டத்தக்கது. சிந்திக்காமல் செயல்பட்ட 'சின்னத்தம்பி' கூடக் கவிதையைப் படித்துச் சிலிர்த்திருப்பான்.

* பி. எஸ். வாசன், ஈரோடு.

? இ. காங்கிரஸ் இனிமேல் ஆதரிக்கப் போவது அ. தி. மு. க. வையா? தி. மு. க. வையா?

! இனிமேலாவது அவர்கள் தங்கள் கட்சியை ஆதரித்து வளர்த்தால் நல்லது — அவர்களுக்கும் தமிழகத்துக்கும்.

* ஆர். ஜே. பாலன், சிவகங்கை.*

? எம்.ஜி.ஆர். மறைவு கேட்டு இறந்தவர், தற்கொலை செய்து கொள்ள முயன்றவர் ஆகியோர் குடும்பங்களுக்கு அரசு பணம் தரலாமா? அ.தி.மு.க. கட்சி அல்லவா தர வேண்டும்?

! எம். ஜி. ஆர். கட்சித் தலைவர் மட்டுமல்ல; ஆட்சித் தலைவரும் கூட என்று இதனை அரசு நியாயப்படுத்தலாம். ஆனால் பொதுவாகத் தற்கொலை முயற்சிகளுக்குச் சன்மானம் அளிப்பது என்பது சரியானதல்ல. ஆட்சி, கட்சி இரண்டுமே இதனைச் செய்யக் கூடாது.

* ஆர். கே. அருள்செல்வன், விக்கிர பாண்டியம்.

? ஆந்திராவில் நக்ஸலைட்டுகள் உயர் அதிகாரிகளைக் கடத்தி அரசைப் பணிய வைத்து விட்டனரே?

! பணிந்து போனதுதான் அந்தச் சூழ்நிலையில் புத்திசாலித்தனம். ஆனால் இதனால் நக்ஸல்பாரி இயக்கம் முன்னிலும் பலப்பட்டிருக்கிறது என்பதையும் மறுப்பதற்கில்லை. நக்ஸலைட்டுகளை ஒழிப்பதன் மூலம் அந்த இயக்கத்தை ஒடுக்க முடியாது. இயக்கத்துக்கான காரணங்கள் என்ன என்பதைக் கண்டறிந்து அவற்றைக் களைந்தால்தான் மேன்மேலும் இளைஞர்கள் அந்த இயக்கத்தில் சேர்வதைத் தவிர்க்க முடியும்.

* கோ. மணி, சென்னை — 15.

? "எம். ஜி. ஆர். மறைந்து விட்டார்; தமிழ்நாடு அனாதையாகிறது" என்று வானொலியில் செய்தி வாசிக்கப்பட்டது சரியா?

! சரிதான்; அந்தச் சந்தர்ப்பத்தில் அப்படி எழுத, பேச கவித்துவ லைசென்ஸ் உண்டு. அதை அப்படியே முழு உண்மையாக எடுத்துக் கொள்ளக் கூடாது. கல்கி தலையங்கத்தில் கூட இதுபோன்ற சில வரிகளை நீங்கள்

* திமிங்கிலத்தைக் காத்தார்!



# திமிங்கிலத்தைப் பிரதமர் காப்பாற்றியிருக்கிறாரே?

* சிலை உடைப்புக் கவிதை!





* தமிழகம் அனாதையாயிற்று?



* முதல் பெண் முதல்வர்!



* சபலச் சித்தர் ஆனாரா?

படித்திருப்பீர்களே!

* பாரதி பா. மு. தாசன், போடிநாயக்கனூர்.

**? லட்சத் தீவு கடலில் உயிருக்குப் போராடிக் கொண்டிருந்த ஒரு திமிங்கிலத்தைப் பிரதமர் துணிச்சலுடன் கடலுக்குள் பாய்ந்து காப்பாற்றியிருக்கிறாரே?**

! வேறு யாராவது செய்திருந்தால் அவருக்குக் குடியரசு தினத்தன்று பராக்கிரம விருது அளித்துக் கௌரவித்திருக்கலாம். ஆனால் நாட்டின் பிரதமர் இப்படி உணர்ச்சி வசப்படுவதும் ஆபத்தை விலைக்கு வாங்குவது போல் நடந்து கொள்வதும் நல்லதல்ல. நிற்க, பிரதமரை விட அதிகத் துணிச்சலுடன் செயல்பட்டிருக்கிறார் புகைப்படக் கலைஞர் ஜீவன் ஜோஸ். பிரதமருடன் ரகசியமாக லட்சத்தீவுகளில் விடுமுறை கொண்டாடி விட்டுத் திரும்பிய அமிதாப் பச்சனைக் கொச்சின் விமான நிலையத்தில் அவருடைய எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல் புகைப் படங்கள் எடுத்திருக்கிறார்! ஒரு ரகசியத்தை அம்பலப்படுத்தியதுடன் நாட்டின் சர்வ சக்தி வாய்ந்த பிரதமரையே பகைத்துக் கொண்டிருக்கிறார்! அடேயப்பா, குண்டு தைரியம்தான்!

* சுவாதி செந்தில் குமார், திருமருகல்.

**? தமிழ் நாட்டின் முதல் பெண் முதலமைச்சர் பற்றி?**

! முதல் கோணல் முற்றும் கோணலாகாமல் இருந்தால் சரி!

* ஜி. ஜெயமூர்த்தி, சுவாமிமலை.

**? கலைஞர் கருணாநிதி சிலையை உடைத்தது ஆளும் கட்சிக்காரன் என்று சொல்கிறார்களே, உண்மையா?**

! அவ்வாறிருந்தால் வியப்பதற்கில்லை. பார்க்கப் போனால் சமூக விரோதிகளுக்குக் கருணாநிதி சிலையை உடைப்பதால் என்ன லாபம்? கடைகளைக் கொள்ளையடித்ததில் தான் லாபம். ஆளும் கட்சிக்காரர்களைத் தான் அதீதமான துயரம் திடீரெனத் தாக்கி, சிந்தனையை மழுங்கச் செய்து, தாறுமாறாக நடந்து கொள்ள வைத்திருக்கிறது. கட்டுப்பாடு இழந்து சாலை சிக்னல் விளக்குகளை உடைத்ததும், கடைகளின், கட்டிடங்களின் கண்ணாடிகளை உடைத்ததும் எல்லாம் தலைவரை இழந்த தாங்கொணா ஏமாற்றத்தின் வெளிப்பாடே!

* இரா. வளையாபதி, தோட்டக்குறிச்சி.

**? தமிழகத்தினைத் தொடர்ந்து ஆந்திராவிலும் அரசியல் நெருக்கடி ஏற்படத் தொடங்கியுள்ளதே?**

! ஏழு அதிகார துஷ்பிரயோகக் குற்றச் சாட்டுக்களில் உண்மை இருப்பதாக எண்ண இடமிருப்பதாகக் கூறியுள்ள உயர்நீதி மன்றம், இதனை 'இடைக்காலத் தீர்ப்பு' என்றும் சொல்கிறது! இந்த இடைக்காலத் தீர்ப்பை எதிர்த்து உச்சநீதி மன்றம் போகவும் என். டி. ஆருக்கு அனுமதி மறுக்கப்பட்டுள்ளது! இதே நேரத்தில் மத்திய அரசு என். டி. ஆர். மீது வழக்குத் தொடுக்க வேண்டும் என்றும், விசாரணைக் கமிஷன் நியமிக்கப்பட வேண்டும் என்றும் கோரும் இரு ரிட் மனுக்களை உயர்நீதி மன்றம் நிராகரித்தும் உள்ளது. எல்லாவற்றையும் சேர்த்துப் பார்க்க, இது ஒரு முரண்பாடான, குழப்பமான அவசரத் தீர்ப்பு என்றே எண்ண வேண்டியிருக்கிறது. தீர்ப்பு வழங்கிய நீதிபதிகளில் ஒருவரது வயது பற்றிய வழக்கு உச்ச நீதிமன்றத்தில் உள்ளதைச் சுட்டிக் காட்டி ஓர் உள்நோக்கம் கற்பிக்கவும் இந்தத் தீர்ப்பு இடமளித்துள்ளது. இவை ஒருபுறமிருந்தாலும், 189 குற்றச்சாட்டுக்களில் ஆதாரமேயில்லை என்று நீதிமன்றம் தள்ளுபடி செய்திருந்தாலும், பாக்கி ஏழு குற்றச்சாட்டுக்களில் தாம் அதிகார துஷ்பிரயோகம் ஏதும் செய்யவில்லை என்பதற்கு என். டி. ஆரால் வலுவான சாட்சியம் சமர்ப்பிக்க முடியவில்லை என்பதும் உண்மையே. எனவே, சட்டப் பாயிண்ட் எப்படியானாலும் தார்மிக ரீதியில் என். டி. ஆர். ராஜினாமா செய்து, தாம் குற்றமற்றவர் என்பதனை நிரூபித்த பின் மீண்டும் பதவியில் அமர்வதே உகந்தது. இல்லையெனில் 'கொள்கைச் சித்தர் சபலச் சித்தர் ஆன கதை' என்ற உதய மூர்த்தியின் (ஆ. வி.) தலைப்பு என். டி. ஆருக்குப் பொருந்தி விடும்!

*** ரூ. 15 பரிசு பெறுபவர்:**

**ஆர். ஜே. பாலன்,**<br>
**61, காமாட்சி அம்மன் கோவில் தெரு,**<br>
**சிவகங்கை**<br>
**— 623 560.**

# மைக்கேல் ராஜ்



குடும்பக் கதை என்றால் சொட்டச் சொட்டக் கண்ணீர்.

'மசாலா' என்றால் திகட்டத் திகட்டச் சண்டை என்று குகநாதன் தன்னைச் சுற்றி ஒரு வட்டம் போட்டுக் கொண்டு விட்டார் போலும்.

மைக்கேல் ராஜ் — மற்றுமொரு ராபின் ஹுட்.

ஏற்கெனவே 'நான் சிகப்பு மனிதன்' முதல் 'நாயகன்' வரை எத்தனையோ படங்களில் கொள்ளையடிக்கிறவர்களே கதாநாயகனாகப் போற்றப்பட்டு விட்டார்கள். மக்களும் அந்தந்தப் படங்களின் திரைக்கதை அமைப்பு, நடிகர்கள், டைரக்டர்கள் ஆகிய பல விஷயங்களை மனத்தில் வைத்துப் பார்த்து ரசித்தும் விட்டார்கள்.

அதையெல்லாம் கவனித்துப் பார்க்காமல் அதே ரீதியில் இன்னொரு படத்தைப் பண்ணினால் எப்படி சார்?

ரகுவரனுக்கு நோஞ்சான் உடல்வாகு. ஒரு மீசையை ஒட்ட வைத்துக் கையில் பாட்டிலைக் கொடுத்து விட்டால் மட்டும் பெரிய வில்லன் அல்லது பெரிய கதாநாயகன் என்று 'பயம்' வந்து விடுமா என்ன? 'ஜாம் பஜார் ஜக்கு' தான். ஹலோ ரகுவரன், சிரித்துக் கொண்டே கழுத்தறுக்கிற மாதிரி ஒரு ரோல் பண்ணுங்கள் சார். 'கொன்னுட்டான்யா மனுஷன்' என்று சொல்கிற மாதிரி எடுபடும்.

வர வர ஷாலினி அலுத்துப் போக ஆரம்பித்து விட்டார்(ள்). 'பிஞ்சிலேயே பழுத்தது' பெயர் நிரந்தரமாக ஒட்டிக் கொள்ளப் போகிறது. அந்த ஆட்டம், பாட்டம், கெஞ்சல், கொஞ்சல் எல்லாமே ஜானகி குழந்தைக் குரலில் பாடுகிற மாதிரியான ஓர் உணர்வை வரவழைத்து விடுகிறது. இருப்பினும், இருப்பினும் இன்னொரு ஷாலினியை இந்தத் திரையுலகம் இன்னும் முத்துக் குளித்துக் கண்டுபிடிக்கவில்லை என்பதால்— சபாஷ் ஷாலினி!

ஷரத்பாபு. சாதுபாபு. அவர் உயரத்திற்கு. அந்த ஆகிருதிக்கு அவர் முகத்தில் வழியும் மென்மை ஓர் ஆச்சரியம். கொள்ளையர் தலைவனாக வேஷமேற்றபோதும்!

கண்ணழகி மாதுரிக்கு இந்த படத்தில் ஏங்குகிற ரோல். ஏங்குகிறார். ஏங்க வைக்கிறார்.

சந்திரபோஸ், நிறைய உழைத்திருக்கிறார். என்னிடம் நிறைய சரக்கிருக்கிறது என்று தெரியப்படுத்துகிறார்.

படத்தில் சில அழகான, நெகிழ்ச்சியான காட்சிகள் இருக்கத்தான் செய்கின்றன.

ஆனால் கடைசி நிமிடப் பரபரப்பில் சுற்றிலும் போலீஸ் இருக்க மேன்—ஹோலில் ரகுவரன் இறங்கி, எப்படி வெளிப்பட்டார் என்று தெரியாமல் விக்கிரமாதித்தப் புத்திரராக வெளியேறி, டிஷ்யூம், டிஷ்யூம், ஃப்ளாஷ், ஃப்ளாஷ், படார், படார் என்று கைகலந்து என்னென்னவோ ஆகி —

நம்முடைய கேள்வி:

எல்லாமே விழலுக்கு இறைத்த நீரோ?

— ஜெயமன்மதன்

---

அவர்: "எடிட்டிங் ஆகிக்கிட்டு இருக்கிற நம்ப பிலிம் சுருளை எலிகடிச்சுடுச்சுங்க....!"

தயாரிப்பாளர்: அப்ப சரி, ஒரு 'மசாலா படம்'னு தைரியமா விளம்பரப்படுத்திடுங்க...!

— எஸ். ராமன்.




இன்னொரு ஒப்பந்தம் பண்ணிக்குவோமா?
அதுக்கென்ன, பேஷா பண்ணிக்குவோம்!




அவன் கெடக்குறான் நீதிபதி! நான் 'சூப்பர் நீதிபதி'! நீங்க ஒரு தப்பும் பண்ணலேன்னு நான் சொல்றேன்! நீங்க தர்மராஜா!


மோசடி ஒப்பந்தங்கள்
ஈழத் தமிழர்




# கல்கி

1988 ஜனவரி 17
மலர்: 46 இதழ் 25
பிரபவ தை 3




## ஜானகி Vs ஜெயலலிதா

நந்தவனத்திலோர் ஆண்டி — அவன்
நாலாறு மாதமாய்க் குயவனை வேண்டிக்
கொண்டு வந்தான் ஒருதோண்டி — அதைக்
கூத்தாடிக் கூத்தாடிப் போட்டுடைத்தாண்டி!

"அ. இ. அ. தி. மு. க. இனி இணைய முடியாதபடி பிளவுபட்டு விட்டது'' என்று கூறும் நெடுஞ்செழியன், "நாங்கள்தான் அசல் அ. இ. அ. தி. மு. க.'' என்றும் சத்தியம் பண்ணுகிறார். வீரப்பன் பிரிவோ, அ. இ. அ. தி. மு. க. அமைச்சரவையையே உருவாக்கி விட்டது!

ஆளுனரைக் குறை கூறுவதில் அர்த்தமில்லை. அவரை விமர்சிப்பவர்கள், நெடுஞ் செழியனை முதல்வராக நீடிக்க ஆளுனர் வாய்ப்பளித்திருந்தால் என்ன நடந்திருக்கும் என்பதை யோசிக்க வேண்டும். இப்போது நெடுஞ்செழியன் கோஷ்டி குறை கூறுவதற்குப் பதில் அப்போது வீரப்பன் பிரிவு குறைகூறிக் கொண்டிருக்கும் என்பதோடு, எதிர்ப்பு வன்முறையாகக் கூட வடிவெடுத்திருக்கும். அமைச்சரவையை டிஸ்மிஸ் செய்து தேர்தல் வரை ஜனாதிபதி ஆட்சிக்கு வழி வகுத்திருந்தாலோ, அகில இந்தியாவிலும் உள்ள, காங்கிரஸ் அல்லாத இதர கட்சித் தலைவர்கள் ஒட்டு மொத்தமாக ஆளுனரையும் பிரதமரையும் ஜனநாயகத்தைக் கொன்று விட்டதாகப் பழித்திருப்பார்கள். வீரப்பன் கோஷ்டியால் பெரும்பான்மையை நிரூபிக்க முடிந்தது என்பதும் நெடுஞ்செழியன் கோஷ்டியால் முடியவில்லை என்பதும் நிதர்சன உண்மைகள். ராகவானந்தம் கூட்டிய கூட்டம் சரியா, ஜெயலலிதா கூட்டிய கூட்டம் சரியா என்பது கட்சி விவகாரம். கட்சியின் விதிமுறைகளில் குழப்பங்கள் இருந்தால் அதற்கு ஆளுனர் எப்படிப் பொறுப்பாக முடியும்? அதிகபட்ச ஆளும் கட்சி எம். எல். ஏக்களின் ஆதரவு பெற்ற ஜானகியை அமைச்சரவை அமைக்கச் சொன்னதும் குறிப்பிட்ட காலக் கெடுவுக்குள் சட்டசபையிலும் மெஜாரிடியை நிரூபிக்கச் சொன்னதும் பிரத்யட்ச, பகுத்தறிவு நோக்கில் ஆளுனர் செய்த முறையான காரியங்கள்.

கட்சி மாறுவதைத் தடை செய்யும் சட்டம் உள்ளதால் இனி சட்டசபையில் ஜானகியை ஆதரிக்காமல் போனால் எம். எல். ஏ. பதவியை இழப்பது சாத்தியமே. ஒட்டு மொத்தமாகப் பிரிந்து புதிய கட்சியாக அறிவித்தால் எம். ஜி. ஆருக்குத் துரோகம் செய்த கும்பலாக முத்திரை குத்தப்படலாம். காங்கிரஸில் இணைய முடிவெடுத்தாலோ அங்குள்ள வைஜயந்தி மாலா, ஜெயலலிதாவை வரவேற்பாரா; மூப்பனார், நெடுஞ்செழியனுக்கு உயர் அந்தஸ்து கொடுத்துக் கௌரவிப்பாரா என்பன கேள்விக் குறிகள்!

சாணக்கிய தந்திரத்துடன் நடந்து கொண்டிருப்பவர் வீரப்பனே. தாம் போட்டியிட்டால் போதிய ஆதரவு கிட்டாமல் போகக் கூடும் என்பதாலும் கட்சியை உடைத்ததாகவும் கருதப்படும் என்பதாலும் ஜானகியை முன் நிறுத்தி, அவரைக் கொண்டே ஒற்றுமைக்கு உருக்கமான அறிக்கையும் விடச் செய்தார். பொம்மை முதல்வராக ஜானகியும் உண்மை முதல்வராகத் தாமும் இருக்கலாம் என்று கூட அவர் ஒருவேளை கருதியிருக்கலாம். ஆனால் ஜானகி இந்த வலையில் சிக்குவாரா, அல்லது தமது தனித்தன்மையை நிலைநிறுத்திக் கொள்வாரா? எப்படிப்பட்ட முதல்வராக விளங்குவார்? தமிழகத்துக்குப் பெருமை சேர்ப்பாரா, தலைகுனிவை ஏற்படுத்துவாரா? விடைகளை அறிய நாடே காத்திருக்கிறது!

சட்ட சபையில் சிறுபான்மையாக இருப்பதால் தி. மு. க.வுக்கு இல்லாத மவுசும் முக்கியத்துவமும் கணிசமான பலம் பெற்றுள்ள இ. காங்கிரஸுக்குத் திடுமென ஏற்பட்டிருக்கிறது. ஆனால் பரிதாபம் என்னவெனில், இ. காங்கிரஸ் இந்நிலையைத் தனக்குச் சாதகமாகத் திறம்படப் பயன்படுத்திக் கொள்ளப் போவதாகத் தோன்றவில்லை. 'யாராவது ஆண்டுவிட்டுப் போகட்டும்; ஈழப் பிரச்னையில் மத்திய அரசுக்கு ஆதரவு தந்தால் போதும்; பதிலுக்கு நாமும் அவர்களை ஆதரிப்போம்' என்ற ரீதியில்தான் நடந்து கொள்கிறது.

இதற்கிடையில் ஜெயலலிதா ஊர் ஊராகச் சென்று வீர கர்ஜனை புரியத் தயாராகிறார்; அவர் பிரிவு எம். எல். ஏக்கள் பெங்களூர், பம்பாய், இந்தோர் என்று கண்ணாமூச்சி விளையாடுகிறார்கள்! 'அவர்களை எப்படிக் கவிழ்ப்பது? நம்மை எப்படிக் காத்துக் கொள்வது?' என்ற போட்டியினிடையில் தமிழக நலனையும் தமிழன் நலனையும் கவனிக்க இவர்களுக்கு நேரம் எங்கே இருக்கப் போகிறது?

தேர்தல் வந்து புதிய, நிலையான அரசு உருவாகும் வரை, மக்கள் நலன் புறக்கணிக்கப் பட்டுக் கொண்டேதான் இருக்கும்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# நிர்க நிழல்

## 25

**வாஸந்தி**

படகின் சப்தத்திற்குப் போட்டியாக ஜயசீலனின் இதயம் அடித்துக் கொண்டது. அவனும் பிரபுவும் முன்பு பதுங்கிப் பதுங்கி வந்த நிதான 'தொளக், பொளக்' சப்தமில்லை இது. மோட்டார் வைத்த மீனவப் படகு. வேகமாகத்தான் சென்றது. ஆனால் இதில் கிளம்புவது கூடப் பெரிய பாடாகப் போயிற்று. சமாதான உடன்படிக்கை வந்த பிறகும் அகதிகளைத் திருப்பி அனுப்பும் வேலை நிதானமாகத்தான் ஆகும் என்றார்கள். போராளிகள் ஆயுதச் சரண் செய்ய வேண்டும். போர் நிறுத்தத்திற்குப் பிறகு தமிழர் பகுதியில் பூரண சகஜ நிலை வர வேண்டும். இடைக்கால நிர்வாக அமைப்பு ஏற்பட்டு, அதற்குப் பிறகு திரும்பி வரும் அகதிகளின் புனர் வாழ்வு வேலைகள் ஆரம்பிக்கப்படும். ஸ்ரீலங்கா அரசு பச்சைக் கொடி காட்டிய பிறகு இந்திய அரசு அகதிகளை அனுப்பத் துவங்கும் —

ஜயசீலனுக்குக் காத்திருந்து பொறுமை போய் விட்டது. தினம் ஒரு செய்தி வந்து கொண்டிருந்தது, இலங்கையிலிருந்து.

"அங்கே பூரணமாய் சகஜநிலை வந்த பிறகு தான் போக முடியும். அதுவரை இங்கேயே நிற்க வேண்டியதுதான்" என்றாள் புனிதா.

சூடு பட்டதை இந்த ஜன்மத்தில் இவர்கள் மறக்க மாட்டார்கள் என்று ஜயசீலன் ஆயாசப்பட்டான். போர் நிறுத்தம் ஏற்பட்டிருக்கும் கால கட்டத்தைப் பயன்படுத்திக் கொண்டு இங்கிருந்து நாமாக நழுவத்தான் வேண்டும்என்று முடிவுக்கு வந்து தயாராகையில், திடீரென்று ஜோஸப் நோய்வாய்ப்பட்டான். சோதனை போல் டாக்டர்கள் டைஃபாய்ட் என்றார்கள். ஜுர வேகத்தையும் அதன் உச்சத்தையும் கண்டு புனிதா நடுங்கிப் போனாள். அந்த நிலையில் ஜயசீலனுக்கே கிளம்ப மனசு வரவில்லை. ஒரு வாரமாக ஜோஸப்புக்கு ஜுரமில்லை. புனிதாவே அவனைக்கட்டாயப்படுத்திக்கிளம்பச்சொன்னாள்.

"சீலியாவைக் கண்டுபிடிக்க உனக்கு எத்தனை துடிப்பு இருக்கும்னு எனக்குத் தெரியும் ஜயசீலன்!

அவனுக்குள் திடீரென்று ஒரு பலவீனம் புகுந்து நெஞ்சை அடைத்தது. இயல்பான மனித உணர்வுகளுக்கு முக்கியத்துவம் கொடுப்பதே இப்பொழுது அபசாரம், சுயநலம் என்று மனசு கூசிற்று.

"மகேஸ்வரி கிளப்பிவிட்ட பூதத்தை நம்பிப் போகிறேன் புனிதா. கண்டுபிடிச்சா சந்தோஷம். இல்லேன்டா வேறு நிறைய வேலை இருக்கு அங்கே செய்ய."

புனிதா நிலத்தைப் பார்த்தபடி கேட்டாள்.

"அங்கே சகஜ நிலைமை வந்ததென்டால் வேறு நாட்டிலே இருக்கிற நம்ம ஆட்கள் வழுக்கிடுவார்கள்தானே?"

"நிச்சயம் புனிதா!" என்றான் அவன் சங்கடத்துடன்.

அவளை நினைக்கும் போது இப்பவும் சங்கடம் ஏற்பட்டது. அவளைப் போல் எத்தனை பெண்கள் இருப்பார்கள்! எத்தனை குழந்தைகள், இளைஞர்கள், யுவதிகள்! எப்படிப்பட்ட காலகட்டத்தில் பிறந்த அதிர்ஷ்டக்கட்டைகள்!/

பத்து நாட்களுக்கு முன்பு மகேஸ்வரியைப் போலீஸ் பிடித்துக் கொண்டு போயிற்று. ஒரு பெரிய கடத்தல் வழக்கில் கையும் களவுமாகப் பிடிபட்டார்கள் அவளும், அவளுடைய சினேகிதனும். அவளுடைய சினேகிதன் யார் என்று கடைசி வரை தெரியவில்லை. மகேஸ்வரியின் பெற்றோர்களைச் சமாதானப்படுத்துவதற்குள் போதும் போதும் என்றாகிவிட்டது.

"ஏனய்யா, அதான் சமாதானம்வந்துட்டதே, இன்னும் ஏன் முகத்தைத் தொங்கப் போட்டுக்கிட்டு உட்கார்ந்திருக்கே?"

ஜயசீலன் சுயநினைவு வந்து நிமிர்ந்து பார்த்தான். மீனவர் சங்கத்தலைவர் நடராஜன் தமது கட்டபொம்மன் மீசையைச் செல்லமாகத் தடவியபடி அவனைப் பார்த்துச் சிரித்தார். முன்பு பிரபுவினால் ஆன பரிச்சயம். மண்டபம் ரெஜிஸ்தர் ஆபீஸ் குமாஸ்தா இவரிடம் எப்படியாவது ஜயசீலனை யாழ்ப்பாணக் கரைக்குக் கொண்டு சேர்த்து விடும்படி கெஞ்சியபோது, "நீ அந்த டில்லி பத்திரிகைக்காரனுடைய சினேகிதன் இல்லே?" என்ற அடையாளத்தோடுதான் இப்போது ஏற்றிக் கொள்ளப்பட்டிருக்கிறான்.

ஜயசீலன் சங்கடத்துடன் சிரித்துத் தொலைவைப் பார்த்தான்.

"என்னவோ நம்ப முடியல்லே ஐயா!" என்றான் முகத்தைத் திருப்பாமல். "நேரிலே போய்ப் பார்த்தால்தான் தெரியும்."

"சமாதானம் வந்துட்டது எங்க விஷயத்திலே கண் கூடாத் தெரியுது. இப்ப மீனவப் படகு பயமில்லாம போகுது!"

ஜயசீலன் சிரித்தான்.

"பின்னே, அந்தச் சௌகர்யம் கூட இந்த உடன்படிக்கையாலே ஏற்பட வேண்

டாமா?''

''இலங்கைத் தமிழர்களுடைய பாதுகாப்புக்காகத்தானப்பா இந்த உடன்படிக்கை! எத்தனை பேர் செத்துக்கிட்டிருந்தீங்க? இப்ப அதெல்லாம் நின்னுதா, இல்லேயா?''

''அது சரி!''

# வேண்டும்

''பின்னே எதைப் பத்தி உனக்கு யோசனை? அது போதாதா முதல் படிக்க?



''இந்த அமைதியெல்லாம் தற்காலிகத்துக்கு என்கிற யோசனைதான் ஐயா. இந்தியப் படை அங்கிருக்கும் வரைதான். அதற்குப் பிறகு?''

நடராஜன் அலட்சியமாக மீசையை முறுக்கினார்.

''உங்க போராளிக் கும்பல்கள் நடந்து கொள்கிற விதத்திலே இருக்கு அது! ஏதாவது தகராறு பண்ணிக்கிட்டிருக்காங்க; தினமும் பேப்பர்லே வருது. கிடைச்சிருக்கிற சந்தர்ப்பத்தைப் பயன்படுத்தி இடைக்கால நிர்வாக சபைக்கு ஒருவழியா ஒப்புதல் தரமாட்டாங்களோ! புதுப் 'புது கண்டிஷன் போட்ட வண்ணம் இருக்காங்க. ஆயுதச் சரணும் பண்ணி முடியல்லே. இந்தியாவை நாங்க பகைச்சுக்க விரும்பல்லே, ஒத்துழைக்கிறோம்னு பகிரங்கமா சுது மலையிலே முழங்கல்லே? இப்ப பின்வாங்கறாங்க. ஒருத்தரை ஒருத்தர் பழிவாங்கற கொலைகள் வேறே. ஆயுதச் சரண் செஞ்சா, ஸ்ரீலங்கா ராணுவம் பின்னால் அடிக்கலாம் என்கிற பயத்தை விட மற்ற இயக்கக்காரன் தொலைச்சுப்புடுவான் என்கிற பயம்தான் அதிகம்னு எனக்குத் தோணுது. அப்படித்தானே?''

''எனக்குத் தெரியல்லே ஐயா!''

''என்ன தெரியல்லே? நீங்கள்லாம் விட்டுக் கொடுக்க மாட்டீங்க! நீயே ஒரு புலியா இருப்பே! இந்த உடன்படிக்கையிலே உன் கையெழுத்தை வாங்கல்லே, சரிதான். இதுக்கு முந்தி உன்னையும் வெச்சுக்கிட்டுப் பேச்சு வார்த்தை நடத்தினதெல்லாம் உருப்பட்டதா? இதுக்கு முந்திப் பெங்களூரிலே நடந்த மாநாட்டிலேயே இந்த உடன்படிக்கையைப் பத்தி விளக்கி உன் சம்மதம் வாங்கியாச்சு! பிறகு இப்ப என்ன புதுசாக் குழப்பறே?''

ஜயசீலன் நடராஜனை சுவாரஸ்யத்துடன் பார்த்தான். அவரது ஆவேசம் வேடிக்கையாக இருந்தது. கூடவே பாவம், இவர்களுக்கெல்லாம் இலங்கைத் தமிழர் பிரச்னை ஒரு சோர்வூட்டும், அலுப்பைத் தரும் விஷயமாகப் போய்விட்டது என்று அனுதாபமேற்பட்டது.

ஜயசீலன் பதில் சொல்லாமல் கடலைப் பார்த்தான்.

''சரி, நீயே முக்கியஸ்தன். இடைக்கால நிர்வாக சபைக்குப் பெயர்ப் பட்டியல் கொடுன்னு. அதிலேயும் முரண்டு. 'இவன் வேண்டாம், அவன் வேண்டாம், எல்லாரும்

என்னுடைய ஆட்களாகவே இருக்கணும் — எப்படியாவது ஒரு வழிக்கு வந்தா சரின்னு அதுக்கும் சரின்னு சொல்லியாச்சு. ஆனா இன்னும் தகராறு செய்யறே.''

ஜயசிலன் பேசவே பேசாமல் உட்கார்ந் திருந்தான். நடராஜனுடைய கேள்விக்கெல் லாம் பதிலே இல்லை என்பது போல.

"இதெல்லாம் எனக்கு ரொம்ப சிறு பிள்ளைத்தனமாப் படுது. ஆயுதத்தை ஏந்தினதிலேலே மீசை முளைக்காதவன் கூடப் பெரியவனாகிவிட்டான்! புத்தி சொல்லக் கூடிய பெரியவங்க பதுங்கியிருக்காங்க!''

அவனிடம் எதற்கும் பதிலில்லாததால் பேசாமல் இருந்தான்.

"எங்கே உன் சினேகிதன், டில்லி பத்தி ரிகைக்காரன்?'' என்றார் நடராஜன்.

"இல்லிக்குப் போனதாக் கேள்விப்பட டேன், ஐயா.''

"அந்த ஆளுக்கு ஓர் இடத்திலே கால் நிக்குமா?''

பிரபுவின் ஞாபகத்தில் ஜயசிலன் தனக் குள் புன்னகை செய்து கொண்டான். சிலி யாவைப் பற்றித் தெரிந்து கொள்ள அவனுக்கு எத்தனை ஆர்வம்! நல்லவன்! அவனுடைய விலாசம் கூடக் கேட்டு வாங்கிக் கொள்ளவில்லை. மீண்டும் அவன் இலங்கையில் சுற்றிக் கொண்டிருந்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.

"யாரைப் பார்க்க இப்படிப் பறந்தடிச்சுக் கிட்டுப் போறே?''

அவன் சிரித்தான்.

"எங்கே ஐயா, ரொம்ப நிதானமாத் தானே போறேன்?''

நடராஜன் அவனைச் சில விநாடிகள் கூர்ந்து பார்த்தார்.

"குடும்பமெல்லாம் யாழ்ப்பாணத்திலே இருக்கா?''

இல்லையென்று தலையாட்டினான். "நான் இப்ப ஒண்டி ஆள்.''

"அப்ப நிதானமாப் போக வேண்டியது தானே!''

"எனக்கு வேலையிருக்கு அங்கே'' என் றான் அவன் சுருக்கமாக.

நல்லவேளையாக அவர் மேற்கொண்டு எதையும் கேட்கவில்லை. தொலைவில் கரை தெரிந்தது. மீண்டும் கரை திரும்புவமா என்கிற ஐயத்துடன் அங்கிருந்து புறப்பட்டது நினைவுக்கு வந்தது. படகு கரை யைத் தொட்டு, அவன் நிலத்தில் கால் வைத்த தும் நடராஜனின் கையைப் பற்றி, "நன்றி ஐயா, இந்த உதவியை நான் மறக்க மாட் டேன்!'' என்றான்.

"ஆ, இருக்கட்டும்!'' என்று சிரித்தார் நடராஜன். "இது ஒரு சந்தோஷமான காரியம்தானே! அமைதிக்காக உங்களாலே முடிஞ்ச வேலையைப் பாருங்க!''

அவன் மீண்டும் நன்றி சொல்லிக் கரை யோரத்தைக் கடந்து ஊருக்குள் நுழைந்தான். தெருக்களில் நிறைய நடமாட்டம் இருந்தது. முன்பு விமானத் தாக்குதலால் ஏற்பட்ட இடிபாடுகளுக்கிடையே குழந்தைகள் ஓடி ஒளிந்து விளையாடிக் கொண்டிருந்தார்கள். அவர்களது கலீர் சிரிப்பொலி புதிதாகக் கேட்பது போல் அவனுள் புத்துணர்ச் சியை ஏற்படுத்திற்று. கடைத்தெருக்களில் சொந்தக்காரர் திரும்பி வராததால் சில கடைகள் மூடப்பட்டிருந்தாலும் அநேகம் கடைகள் திறந்திருந்தன. ஆண்களும் பெண்களும் பயமில்லாமல் தெருக்களில் நடப்பது ஆச்சரியமாக இருந்தது. மூன்று மாதங்க ளுக்கு முன் நினைத்துக் கூடப் பார்க்க முடி யாத நிலை அல்லவா இது! இந்த ஊரில் அவனுக்கு யாரையும் தெரியாது. உடனடி யாக யாழ்ப்பாணத்திற்குச் செல்ல வேண் டும் என்று அவன் நினைத்துக் கொண்டான். பேருந்துகள் எதையும் காணோம். நடந்தே தான் செல்ல வேண்டி வரும். இரவு எங்கே யாவது தங்கி, காலையில் நடையைத் தொடர வேண்டும்.

கடைத்தெருவில் ஒரே ஒரு தேநீர்க் கடை இருந்தது. ஒரு பழைய கண்ணாடிப் பெட் டிக்குள் சில பொறைகளும், வடைகளும் இருந்தன.

"இந்தியக் காசுதான் இருக்கு. வாங்கு வீரா?'' என்றான் அங்கிருந்த பொடியனைப் பார்த்து.

"வாங்குவோம்'' என்றான் பொடியன். "இந்திய ராணுவம் இருக்கும் வரையில் இது இந்திய இராஜ்யம்தானே?''

பொடியன் முகத்தில் சிரிப்பில்லை.

"ஒரு கப் கோப்பியும் இரண்டு பொறை யும் கொடுங்கள்.''

இந்தியக் காசை வாங்கிக் கொண்டு, "இந்தியாவிலிருந்து வந்தீரா?'' என்றான் பொடியன்.

"ஓம். இங்கே எப்படியிருக்கு நிலைமை?''

"இலங்கை ராணுவத்தைக் கண்டு இனி பயமில்லை!''

"ஓ. அது பெரிய விஷயம்தானே!''

"ஆ, ஒண்டும் விளங்க இல்லை.''

அவனுடைய குரலில் இருந்த அலுப்பு வயதுக்கு மீறினதாக இருந்தது.

"ஏன்?''

பொடியன் மெல்லிய குரலில் கேட் டான்: "நீங்கள் இலங்கையை விட்டுப் போய் எவ்வளவு காலம் ஆச்சு?''

"கன காலம் ஆச்சு!''

"அப்ப இங்கிருக்கும் விஷயம் விளங் காது உமக்கு!'' — பொடியன் இன்னும் குரலைத் தாழ்த்திக் கொண்டான். "இந்தியப் படை இங்கே வந்திருக்கும் நோக்க மென்ன?''

"இங்கே அமைதி காக்க!''

"அப்படி எண்டு பேச்சு! இங்கே ஆட்சி செய்ய வந்திருக்கிறதாகக் கதைக்கிறார்கள் ஜனங்கள்.''

"அது வீணான பயம்!'' என்றான் ஜய சிலன், லேசான புன்னகையுடன்.

"இல்லே! அதுதான் உண்மை!'' என்றான் பொடியன் தீவிரத்துடன். "தினமும் போரா ளிக் கும்பல்கள் ஒன்றையொன்று கொன்று குவித்துக் கொண்டிருக்கு; இந்தியப் படை





# சுவைத்து மகிழ்ந்து வளர்ச்சி அடைந்திடும் வழி-ஃபாரெக்ஸ்®

| குழந்தையின் உயரம் மற்றும்* எடையை சோதித்திடுங்கள் | ஆண் குழந்தை | | பெண் குழந்தை | |
|---|---|---|---|---|
| | எடை (கிலோ) | உயரம் (செ.மீ.) | எடை (கிலோ) | உயரம் (செ.மீ.) |
| 3 மாதம் | 5.2 | 59.1 | 4.9 | 58.4 |
| 6 மாதம் | 6.7 | 64.7 | 6.1 | 63.7 |
| 9 மாதம் | 7.3 | 68.2 | 6.9 | 67.0 |
| 12 மாதம் | 8.4 | 73.9 | 7.8 | 72.5 |

* இது இந்தியக் குழந்தை மருத்துவ ஆராய்ச்சிக் கழகத்தால் வழங்கப்பட்டது.
இது இந்தியக் குழந்தைகளுக்கு மட்டுமே சராசரியாகும். குழந்தையின் வளர்ச்சி உங்கள் டாக்டரின் திருப்திக்கேற்ற வகையில் இருந்தால் போதும்.

வண்ணமய பாப்பா— பராமரிப்பு வழிகாட்டி இலவசமாய் பெற்றிட இதை அனுப்புங்கள் இங்கே: க்ளிண்டியா லிமிடெட் (FPD/51) டாக்டர் அன்னி பெஸண்ட் ரோட், ஒர்லி, பம்பாய்-400 025..




உங்கள் குழந்தை பரிபூரண அபிவிருத்தியும் வளர்ச்சியும் அடைந்திட போஷாக்கு நிறைந்த ஃபாரெக்ஸ் அளியுங்கள்.

**ஃபாரெக்ஸ்®**

சுவைத்து மகிழ்ந்து வளர்ச்சி அடைந்திடும் வழி

26/203

அதைக் கவனிக்காமல் நிற்கிறது. அவர்களை சண்டை போட்டு ஒழித்துக் கொள்ளட்டும் என்று எண்ணம் அதற்கு. ஆயுதச் சரண் ஒன்றுதான் முக்கியம் என்கிறது. எல்லா ஆயுதத்தையும் வாங்கிக் கொண்டு கடைசியில் அதுவேதான் நம்மை ஆட்சி செய்யப் போகிறது. தமிழனுக்கு என்ன ஐயா தலைவிதி? மாற்றானுடைய ஆதிக்கத்துக்குள்ளேயே இருக்கணும் என்டு?''

ஜயசீலன் தன்னுடைய வியப்பைக் காண்பித்துக் கொள்ளாமல் எழுந்தான். இந்தப் பொடியன் இப்பொழுது முன்னணியில் இருக்கும் கும்பலின் உளவாளியாய் இருக்கலாம்.

அவன் விருவிருவென்று சாலையில் நடந்தான். அங்கங்கே இந்திய ராணுவத் தலைகள் தெரிந்தன. பெண்களும் குழந்தைகளும் பயமில்லாமல் அவர்களுடன் சிரித்துப் பேசுவதை அவன் கவனித்தான்.

இந்திய அமைதி காக்கும் படையின் ட்ரக் ஒன்று வந்தது. அவன் ஒதுங்கி நின்றான்.

டிரக் சற்று நிதானப்பட்டு, அதிலிருந்து ஒரு வீரன் தமிழில், "எங்கே போகணும்?" என்றான், ஜயசீலனிடம்.

"யாழ்ப்பாணம்!''

"ஏறிக்க. இது அங்கேதான் போகுது!''

"நன்றி ஐயா!'' என்று அவன் முன்னால் நகர்ந்தான்.

"ஆயுதம் வெச்சிருக்கியா? கையைப் பிரிச்சுக் காண்பி.''

அவர்கள் சோதனை செய்து முடித்ததும் அவன் ஏறிக் கொண்டான். சுமார் இருபது வீரர்கள் இருந்தார்கள்.

"யாரையும் நம்ப முடியறதில்லே'' என்றான் தமிழன். "ஆயுதமில்லேன்னு கையைத் தூக்கிக்கிட்டு வர்றாங்க. கிட்ட நெருங்கினா கைக்குள்ளே மூடி வெச்சிருக்கிற வெடியை எறியறாங்க. ஆரம்பத்திலே நாங்க நிறைய ஏமாந்து போனோம். இப்ப அதிக ஜாக்கிரதையா இருக்கோம்! எங்கேர்ந்து வர்றே?''

"மண்டபத்திலேர்ந்து இன்னிக்குத்தான் திரும்பினேன்.''

"சரிதான். நீயே பார்த்துக்க, நடக்கற கூத்தை. நேத்து பத்திக்கோலாவிலே ஏகப்பட்ட பேரைப் புலிகள் தாக்கியிருக்காங்க. எங்களுக்கெதிரா எங்கே பார்த்தாலும் பிரசாரம் செய்யறாங்க. வழியெல்லாம் கண்ணிவெடி வெச்சு எங்களுக்கு ஆபத்து ஏற்படுத்தறாங்க. அட, எங்களுக்கு என்னப்பா தலையிலெழுத்து இங்கே வந்து சாகணும்னு? உதவிக்கு வந்த ஆளை எதிரியா பாவிச்சா எப்படி? நாங்களும் மனுஷங்கதானே?''

ஜயசீலன் பதில் சொல்லவில்லை. மற்ற வீரர்கள் ஹிந்தியில் ஏதோ தங்களுக்குள் காரசாரமாகப் பேசிக் கொண்டார்கள்.

டிரக்கிலிருந்தவர்கள் எல்லாருமே களைப்பில் தூங்கிப் போனார்கள். யாழ்ப்பாணத்தை அடைந்தபோது நன்றாக இருட்டிப் போயிருந்தது. ஆஸ்பத்திரி வீதி வந்ததும், "நான் இறங்கிக்கறேன்'' என்று நன்றியுடன் ஜயசீலன் இறங்கிக் கொண்டான்.

சீலியாவின் பெற்றோர்கள் இருக்கும் ஸ்டான்லி வீதியை நோக்கி வேகமாக நடக்க ஆரம்பித்தான். தெருவில் இந்த நேரத்திலும் ஜன சந்தடி இருப்பது ஆச்சரியமாக இருந்தது. இது ஒரு நல்ல அறிகுறி என்று தோன்றிற்று. மன்னாரில் கண்ட பொடியனும், இந்திய ராணுவ வீரனும் மனத்திலிருந்து விலகிக் கொண்டார்கள். புதிய எதிர்பார்ப்புடன், படபடக்கும் நெஞ்சுடன் அவன் சீலியாவின் வீட்டுக் கதவைத் தட்டினான். கதவு திறந்தது. அவனுக்குப் பரிச்சயமில்லாத முகம்.

"செல்வநாயகம் இருக்காரா?'' என்றான் அவன் தயக்கத்துடன்.

"இல்லையே, நீங்க யாரு?''

"அவருக்குத் தெரிஞ்சவன்.''

"வெளியூர் போயிருந்தீரா?''

"ஆமாம், இந்தியாவுக்கு!''

"அதான், விஷயம் தெரியல்லே உமக்கு!''

"என்ன விஷயம்?''

"இரண்டு பேரும் இப்ப இல்லே.''

அவன் அதிர்ந்து அவரைப் பார்த்தான். "எப்படி? எப்ப?''

"இதுக்கெல்லாம் காரணத்துக்கு எங்கே போறது தம்பி?''

அதிர்ச்சியிலிருந்து அவனால் மீள முடியவில்லை. "அவங்க மகள்? இங்கே வந்தாளா?''

ஒரு வினாடி அவனை அவர் சந்தேகத்துடன் பார்த்தார். "யாரும் வரல்லே தம்பி!'' என்று கூறிவிட்டுக் கதவைச் சாத்தினார்.

அவன் சற்றுநேரம் ஏதும் செய்யத் தோன்றாமல் ஸ்தம்பித்து நின்றான். பிறகு இயந்திர கதியில் நல்லூர் வீதிக்கு நடந்தான். கந்தசாமி கோவிலில் ஏதோ பரபரப்புத் தெரிந்தது. சிறிய கும்பல் இருந்தது. அவன் அருகில் சென்றான். சிவப்புப் புலிக் கொடிகள் தெரிந்தன. "சாகும் வரை மாவீரனின் உண்ணாவிரதம்'' என்ற பிரகடனத்தின் கீழ் ஒருத்தன் படுத்திருந்தான்.

(தொடரும்)

"எது எதுக்குத்தான் இறப்பு விழாக் கொண்டாடறதுன்னு ஒரு விவஸ்தையே இல்லாமப் போச்சுங்கிறியே ஏன்...?''

"பின்னே...? பேங்குல கணக்குத் திறக்கறதுக்குக் கூட தலைவரை அழைச்சுத் திறப்பு விழாக் கொண்டாடி போஸ்டர் ஒட்டறாங்கன்னுப் பார்த்துக்கோயேன்...''

— கரடிகுளம் ஜெயாபாரதிப்ரியா.





பதி[illegible] பசாவுக்குத் தலைவலி மாத்திரை.

# உயிர் காக்கும் மருந்துகள் நஞ்சாகும் போது...

நாகர்கோவிலிலிருந்து திருவனந்தபுரம் போகும் வழியில் குமரி மாவட்டத்தில் உள்ள கிராமம் பிராக்கோடு. கடந்த நவம்பர் மாத இறுதியில் இவ்வூர் திடீரென்று செய்திகளில் அடிபட்டது — இங்குள்ள ஒரு பள்ளியில், மாணவர்களுக்கு டைபாய்டு தடுப்பு ஊசி போடப்பட்டபோது, 165 மாணவர்கள் மயக்கமுற்றனர்; அவர்கள் குழித்துறை அரசு மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டனர், என்பதே அச்செய்தி.

மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டவர்களுள் நூறு பேர் உடனடியாகக் குணமடைந்து திரும்பினர்; ஏனைய அறுபத்தைந்து பேருக்குத் தொடர்ந்து சிகிச்சை அளிக்கப்பட்டு வருகிறது என்று நாளிதழ் செய்தி கூறியதால் அந்த அறுபத்தைந்து மாணவர்களின் நிலை என்ன? சம்பவத்துக்குக் காரணம் என்ன? என்பதைக் கண்டறிய பிராக்கோடு சென்றோம்.

சம்பவம் நடந்த பிராக்கோடு ஆரம்பப் பள்ளி தலைமை ஆசிரியர் ரத்தினத்தையும், அதே பள்ளியில் பணிபுரியும் அவரது மனைவி ஆரோக்கிய மேரியையும் சந்தித்தோம். நவம்பர் இருபத்தேழாம் தேதி நடந்தவற்றை விவரித்தார் ரத்னம்:

"பத்தேகால் மணி சுமாருக்கு நான்காம் ஐந்தாம் வகுப்பு மாணவர்களுக்கு ஊசி போட ஆரம்பித்தோம். பன்னிரண்டு மணி வரை எந்தவிதப் பிரச்னையும் இல்லை. பன்னிரண்டரை மணிக்கு ஒன்றிரண்டு பையன்களுக்குத் தலை சுற்ற ஆரம்பித்தது. மத்தியானத்துக்குப் பிறகு நிறைய மாணவர்கள் வகுப்பில் அங்கங்கே படுத்து விட்டனர். ஆசிரியர்கள் அவர்களுக்கு விசிறியும் காப்பி கொண்டு வந்து கொடுத்தும் உதவினார்கள். இதற்கிடையில் நாங்கள் குளிவிளை ஹெல்த் சென்டருக்குத் தகவல் தெரிவித்து அங்கிருந்து டாக்டரை வரவழைத்தோம். அதற்குள் செய்தி பரவி, பொது மக்களும் பெற்றோர்களும் திருவிழாக் கூட்டம் போலக்

கூடிவிட்டனர். குளிவிளேயிலிருந்து வந்த லேடி டாக்டர் மாணவர்களேப் பரிசோதித்து விட்டுக் கவலேப்படும்படியாக எதுவும் இல்லே என்றுதான் கூறினர். ஆனல் குழந்தைகளின் பெற்றேர்கள் அதை நம்பும் மன நிலேயில் இல்லே. அவர்களுக்கு இருந்த கோபத்தில் என்னேத் தனியாக ஓர் அறையில் தள்ளி விட்டனர். நான் ஒரு பையனே வரவழைத்து ஒரு ஜீப்புக்கும் வானுக்கும் ஏற்பாடு செய்து, பாதிக்கப்பட்ட மாணவர்களேக் குழித்துறை ஆஸ்பத்திரிக்கு அழைத்துப் போக ஏற்பாடு செய்தேன். குழித்துறை ஆஸ்பத்திரியில் மாணவர்களேப் பரிசோதித்து விட்டு குளுகோஸ் தண்ணீர், பி. காம்ப்ளெக்ஸ் மாத்திரை, மற்றும் ஓர் இஞ்செக்ஷன் கொடுத்தார்கள். கொஞ்சம் கொஞ்சமாகத் தெளிந்த மாணவர்கள் எல்லோரையுமே இரவு ஒரு மணிக்குள் அவரவர் வீடுகளுக்குக் கொண்டு சேர்த்து விட்டோம்'' என்ருர்.

''இதற்கு முன் இது போன்ற சம்பவம் நடந்ததுண்டா?'' என்றேம்.

''இருபத்தைந்து வருஷங்களாக நான் இங்கே வேலே பார்க்கிறேன். எல்லா வருஷமும் தடுப்பு ஊசி போடுவது வழக்கம்தான். ஆனல் இதுவரை ஒரு முறைகூட இந்த ஆண்டு நடந்ததைப் போன்ற சம்பவம் நடந்ததில்லே. ஊசி மருந்தை ஹெல்த் அசிஸ்டெண்ட் ரத்தினசாமியிடமிருந்து வாங்கிப் பார்த்து விட்டுத்தான் மாணவர்களே அனுப்பினேன். மருந்தில் எக்ஸ்பைரி தேதி '89 என்று குறிப்பிட்டிருந்தது; இரண்டு நாட்கள் முன்னதாகப் பக்கத்தில் உள்ள வாவறை என்ற ஊரில் இதே தடுப்பூசி போடப்பட்டிருந்ததால் தயங்காமல் அனுமதித்து விட்டேன்'' என முடித்தார்.

குழித்துறை மருத்துவ மனேக்குச் சென்றேம். சம்பவம் நடந்த அன்று பணியில் இருந்த ஸிஸ்டர், ''நூறு நூத்தம்பது பேர் ஒண்ணும் வரலீங்க; அறுபத்தஞ்சு எழுபது பேர்தான் வந்தாங்க; எல்லாரும் அன்னிக்கே டிஸ்சார்ஜ் ஆகிப் போய்ட்டாங்க.... யார் சொன்னது உங்களுக்கு...?'' என்று நம்மைக் கேட்டார்.

இதற்குள் டாக்டர் அம்மாள் வந்தார்.

''பத்திரிகையா? நான் ஒண்ணும் சொல்ல மாட்டேன்..'' என்று ஒதுங்கிக் கொள்ள முயன்றவரை ''ஒண்ணும் தவறு நடக்கலேன்னு ஏன் பயப்பட வேண்டும்...?'' என்று சமாதானப்படுத்திய போது தம் பெயரை வெளியிடாமல் பேசச் சம்மதித்தார்.

''பசங்களுக்கு TAB அதாவது Anti Typhoid ஊசி போட்டிருக்காங்க. அதுல அறுபத்தஞ்சு பசங்க பள்ளியில மயக்கமாயிட்டாங்கன்னு இரண்டு ட்ரிப்பா வான்ல இங்கே கூட்டி வந்தாங்க. பசங்க ஆஸ்பத்திரிக்குள்ள நடந்தேதான் வந்தாங்க...

''மயக்கமாயிருக்கலியா?''

''இல்லேங்க. லேசான ஜுரம் இருந்தது. காலரா DPT ஊசி போட்டால் கூட இப்படி சிலருக்கு வரும். காய்ச்சலுக்கு 'பாரசிடமால்' மாத்திரை கொடுத்தோம். சில பிள்ளேகளுக்கு விடமின் ஸி மாத்திரையும் கொடுத்தோம்.''

''Antidote எதுவும் கொடுக்கலேயா?''

''அதுக்கு அவசியமில்லேங்க. ஒவ்வாமைக்கான அறிகுறி எதுவுமே இல்லே. யாரையுமே 'அட்மிட்' பண்ணிச் சிகிச்சையளிக்கலே; எல்லோரும் அவுட் பேஷண்ட்தான்'' என்றவர் ''அரசாங்கத்தின் 'Expanded Immunization' திட்டத்துல இதுமாதிரி தடுப்பூசி போடறது சகஜம்தான். இந்தத் திட்டத்தின் கீழ் ஒவ்வொரு ஆரம்ப சுகாதார நிலேயத்துக்கும் ஒரு குறியீடு தரப்பட்டிருக்கும். அதன்படி குறிப்பிட்ட எண்ணிக்கையினருக்கு ஊசி போடப்படணும்...'' என முடித்தார்.

நாகர்கோவில் சென்று, மாவட்ட சுகாதார அதிகாரி டாக்டர் சொக்கலிங்கத்தைச் சந்தித்தோம். ''சாதாரண விஷயத்தைப் பரபரப்பான செய்தியாக்கித் திரித்துக் கூறும்'' நாளிதழ்களேக் குறித்துத் தமது வருத்தத்தைத் தெரிவித்துக் கொண்ட பிறகு அவர் பேசினர்:

பிராக்கோடு பள்ளிக்கும் குழித்துறை மருத்துவ மனேக்கும் போய்ப் பார்த்தேன். ''நான் அறிந்த வரையில் ரத்தச் சோகை இருந்த ஒரு பையன் மட்டுமே முதலில் மயக்கமுற்றன். அதைப் பார்த்து விட்டு மற்ற மாணவர்களே ஆசிரியர்களே படுக்கச் சொன்னர்கள். யாருக்குமே பெரிய அளவில் சிகிச்சை தேவைப்படவில்லே. ஆனும் கட்சிக்கு அவப்பெயர் தேடித்தரவே இது போன்ற 'செய்திகள்' பரப்பப்படுகின்றன'' என்ருர்.



தடுப்பு ஊசி போடப்பட்ட மாணவர்கள்



* ரத்தினம்



* ஜஸ்டிஸ் லெண்டின்

டிடியூட்டை அணுகினோம். இயக்குனர் டாக்டர் சாரதா சண்முகசுந்தரம், குறிப்பிட்ட மருந்து கசௌலி (ஹிமாசல் பிரதேஷ்) சென்ட்ரல் ரிசர்ச் இன்ஸ்டிடியூட்டிலிருந்து வந்ததாகவும் அதனை ஆய்வு செய்து கொண்டிருப்பதாகவும், முடிவு வெளியாக இன்னும் ஒரு மாதம் ஆகும் என்றும் தெரிவித்தார்.



* சம்பவம் நடந்த பள்ளிக்கூடம்.

''எதற்குத் திடீரென்று குலப்புரம் பள்ளி மாணவர்களுக்குத் தடுப்பு ஊசி போடப்பட்டது?'' என்று கேட்ட போது,

''கை வசம் ஸ்டாக் இருந்தது. போட்டோம்'' என்றவர், மூன்று பாட்டில் ஊசி மருந்தை 'சீல்' வைத்துச் சென்னை கிங் இன்ஸ்டிடியூட்டுக்கு ஆய்வுக்கு அனுப்பியுள்ளதாகவும், அம் மருந்தை உபயோகிக்க வேண்டாம் என்று சம்பந்தப்பட்ட சுகாதார நிலையங்களுக்குத் தந்தி கொடுத்துள்ளதாகவும் தெரிவித்தார்.

நாகர்கோவில் அரசு மருத்துவ மனையைச் சேர்ந்த டாக்டர் (பெயர் குறிப்பிட விரும்பவில்லை) ஒருவரை இச் சம்பவம் பற்றிக் கேட்டபோது ஒன்றிரண்டு மாணவர்களுக்குத் தடுப்பு ஊசி போட்டதால் மயக்கம், வாந்தி ஏற்பட்டிருக்கலாம்; அதைப் பார்த்த மற்ற மாணவர்கள் 'சைகலாஜிகலாக'ப் பாதிக்கப்பட்டிருக்கலாம் என்றார்.

ஓர் ஆரம்ப சுகாதார நிலையத்திற்குச் சென்று விசாரித்தோம். அங்கிருந்த டாக்டர் (மீண்டும் சாரி! பெயரைப் போடாதீர்கள்) ''ஊசியை டாக்டர் போட மாட்டார்; 'ஹெல்த் விசிட்டர்' தான் போடுவார். ஊசி மருந்து தனியாரிடம் வாங்கப்படுவதில்லை; அரசாங்கத் தயாரிப்புதான். மருந்துகளைச் சரியான முறையில் பாதுகாப்பாக வைக்க வேண்டும். ரயிலில் வரும் மருந்து பார்சல் ஸ்டேஷனில் வெட்ட வெளியில் கிடப்பதுண்டு. அதனால் மருந்தின் தரத்தில் பாதிப்பு ஏற்பட்டிருக்கலாம்'' என்றார்.

சென்னை திரும்பி, கிண்டி, கிங் இன்ஸ்

''தடுப்பு ஊசி மருந்தின் வீரியத்தை WHO ஆலோசனைப்படி முன்பிருந்ததைக் காட்டிலும் இரண்டு மடங்காக்கியுள்ளோம். சாதாரணமாக இந்தத் தடுப்பூசியால் ஆபத்தான விளைவுகள் ஏற்படாது. வறட்சி அல்லது தொடர்ச்சியான மழை போன்றவற்றால் கிராமப்புறக் குழந்தைகளின் உடல் நிலை சற்று மோசமாகவே இருக்கும். அந்தச் சமயங்களில் இந்த ஊசிகளைப் போடுவதால் இத்தகைய விளைவுகள் உண்டாவது சாத்தியம்தான்'' என்றும் கூறினர்.

நாளிதழ் செய்திகள் மிகைப்படுத்தப்பட்டிருந்தன என்றே ஒப்புக் கொண்டாலும் இந் நிகழ்ச்சி சில பாடங்களை நமக்குப் புகட்டியுள்ளது என்பதை மறுக்கவே முடியாது. மருந்துகள் பற்றிய அறிவும் அவற்றின் சக்தி பற்றிய பிரக்ஞையும் பொது மக்களிடையேயும் சரி, சுகாதார அலுவலர்களிடையேயும் சரி போதிய அளவு இல்லை என்ற முடிவுக்கே வரவேண்டியுள்ளது.

மருந்துகள் உயிர் காக்க ஏற்படுத்தப்பட்டவை. அவற்றைத் தவறாக உபயோகிப்பதாலோ அவற்றின் தரம் குறைந்தாலோ அவையே நஞ்சாகி விடுகின்றன. சாதாரண தலைவலிக்காக மாத்திரை வாங்கிச் சாப்பிடும் பழக்கம் பலரிடையே பரவலாக உள்ளது. ஒரே சமயத்தில் இரண்டு மாத்திரைகளைக் கூடச் சாப்பிட்டு விடுகின்றனர். இவ்வாறு தொடர்ந்து செய்தால் மாத்திரையில் உள்ள ஆஸ்பிரினால் ரத்த நாளங்கள் பாதிக்கப்பட்டு உயிருக்கே ஆபத்து ஏற்படலாம் என்பது பலருக்குத் தெரியாது.

பம்பாய் ஜே. ஜே. மருத்துவ மனையில் பதினென்கு நோயாளிகள் அநியாயமாக இறந்து போன செய்தி சமீபத்தில் இந்தியாவையே அதிர்ச்சியில் ஆழ்த்தியது. இந்த நோயாளிகளுக்குக் கை கால் வீக்கத்திற்குச் சாதாரணமாகத் தரப்படும் கிளசரீன் என்ற மருந்து தரப்பட்டது. அந்த மருந்தில் கலந்திருந்த di – ethylene glycol என்ற நச்சுப் பொருள் சிறுநீரகத்தைத் தாக்கி உயிர்களைப் பலி வாங்கியது! மருந்தைத் தயாரித்தது மஹாராஷ்டிரா அரசாங்கத்திடம் லைசென்ஸ் பெற்ற ஒரு நிறுவனம்தான்! நீதிபதி லென்டின் தலைமையில் இச்சம்பவத்தை விசாரித்த கமிஷன், மஹாராஷ்டிர மாநில உணவு, மற்றும் மருந்துகள் நிர்வாகத் துறையின் செயல்பாட்டில் ஏராளமான ஊழல்கள் நடந்துள்ளதைக் கண்டுபிடித்தது.

எனவே, தயாரிப்பாளருக்கு லைசென்ஸ் வழங்கிக் கண்காணிக்கும் அரசாங்கத்தின் கையில்தான் மருந்துகளின் தரக் கட்டுப்பாடே இருக்கிறது. போலி மருந்துகளும் தரக் குறைவான மருந்துகளும் தயாரிக்கப்படாமல் தடுப்பது அந்தந்த மாநில அரசாங்கத்தின் பொறுப்பே. ஆனால் இன்றைய நிலையில் லஞ்ச ஊழல்களுக்கு அப்பாற்பட்ட நேர்மையான அரசாங்கம் எங்குதான் இருக்கிறது!

இந்தியாவில் தயாரிக்கப்படும் மருந்துகளில் நாற்பது சதவிகிதம் மஹாராஷ்டிராவில்தான் தயாராகின்றன. இவை இந்தியா முழுவதிலும் பயன்படுத்தப்படுகின்றன. அதனால் ஒரு மாநிலத்தில் நடக்கும் எந்தத் தவறுமே நாடளாவிய பாதிப்பை ஏற்படுத்தக்கூடிய வாய்ப்பு இருக்கிறது.

**ச**மீபத்தில், தமிழக அரசு கூட்டுப் பொதுத் துறை மற்றும் ஜாயின்ட் செக்டார் நிறுவனங்களிடமிருந்து மருந்துகள் வாங்கும் முறையை மாற்றி, தனியார் நிறுவனங்களை ஆதரிப்பது என்ற முடிவுக்கு வந்துள்ளது. அரசாங்க மருத்துவ மனைகளில் சோதனையிட்ட போது மருந்துகளின் தரம் திருப்திகரமாக இல்லாதது கண்டறியப்பட்டதே இத்தகைய முடிவு எடுக்கக் காரணம்.

சென்னை, கிண்டியில் உள்ள அங்கீகரிக்கப்பட்ட மருந்துகள் ஆய்வுக் கூடம் ஒன்றின் மீது ஒழுங்கு நடவடிக்கை எடுக்கப்பட்டு, சீல் வைக்கப்பட்டது. ஆனால் சில மாதங்களுக்குள் அவ்வுத்தரவை மீறிச் சில 'உயர்மட்ட' அதிகாரிகள் ஆய்வுக் கூடத்தை மீண்டும் திறக்க உத்தரவிட்டுள்ளனர். இந்த ஆய்வுக் கூடத்தில் ஆய்வு செய்யப்பட்டு நற்சான்றிதழ் பெறும் மருந்துகளின் தரம் எப்படியிருக்கும் என்று கூறத் தேவையில்லை.

தரக் கட்டுப்பாட்டுப் பிரச்னை ஒருபுறமிருக்க இன்னொரு பக்கத்தில், தேவைக்கு அதிகமாக மருந்துகள் உற்பத்தி செய்யப்பட்டுக் குழப்பத்தை உண்டுபண்ணுகின்றன. 1974இல் இந்திய அரசாங்கம் ஏற்படுத்திய ஹாதி கமிட்டி இந்திய மருந்து தயாரிப்புத் தொழில் துறையை ஆராய்ந்து, 116 வகை மருந்துகள் மட்டுமே இந்தியாவுக்கு அவசியமாகத் தேவை என்று கண்டறிந்தது. ஆனால், தற்போது இந்தியாவில் சுமார் ஏழாயிரம் நிறுவனங்கள் சுமார் முப்பதாயிரம் வகை மருந்துகளைத் தயாரித்து வருகின்றன. இவற்றுள் அத்தியாவசியமாய்த் தேவைப்படும் மருந்துகளுக்கு இன்னும் தட்டுப்பாடுதான்!

போதாக்குறைக்குச் சர்வதேச மருந்து தயாரிப்பு நிறுவனங்கள் வேறு இந்தியா போன்ற பின்தங்கிய நாடுகளில் தங்கள் சரக்குகளைக் கொண்டு வந்து அநியாய விலைக்குத் தள்ளி விடுகின்றன. இவற்றுள் பல இந்திய சூழலுக்கு ஒவ்வாதவை; அமெரிக்கா போன்ற முன்னேறிய நாடுகளில் தடை செய்யப்பட்டவை. டாக்டர் வின்செண்ட் பணிகுளங்கரா என்ற வழக்கறிஞர், இந்திய அரசு ஹாதி கமிட்டியின் சிபாரிசை மீறியதற்காக இந்திய சுப்ரீம் கோர்ட்டில் மனு தாக்கல் செய்துள்ளார். வழக்கு இன்னும் முடியவில்லை.

**மே**ற்கூறிய பிரச்னைகளில் கருத்தறிய மத்திய, மாநில அரசுகளின் மருந்துக் கட்டுப்பாட்டுத் துறை உயர் அதிகாரிகளைச் சந்தித்தோம். மாநில அளவிலான உயர் அதிகாரி கூறினர்:

''தமிழ் நாட்டில் எல்லா வசதிகளுடனும் கூடிய மருந்துக் கட்டுப்பாட்டுத் துறை இயங்குகிறது. இந்தியாவிலேயே நமது மாநிலம் தான் மருந்துகள் தாக்கட்டுப்பாட்டில் முன்னணியில் உள்ளது. மத்திய மருந்துகள் கட்டுப்பாட்டுத் துறையின் கீழ் ஐந்து மாநிலங்களுக்கு ஆறு ஆய்வாளர்கள் நியமிக்கப்பட்டுள்ளனர். இந்த 'மேன்மை தங்கிய' ஆய்வாளர்கள் மாநில அரசு ஆய்வாளர்களின் பணியில் குறுக்கிடுகிறார்களே தவிர, மாநிலங்களுக்கிடையே நிகழும் குற்றங்களைக் கண்டுபிடிப்பதில்லை. சமீபத்தில் பஞ்சாப், தில்லி, ஹரியானவிலிருந்து ஏராளமான ஆக்ஸிடாஸின் மருந்து (இது தாய்ப் பால் சுரப்பதற்கு அளிக்கப்படுவது) தமிழ் நாட்டுக்குக் கொண்டு வரப்பட்டுப் பதுக்கி வைக்கப்பட்டு, மாடுகளின் பால் உற்பத்தி

''நாம் எடுக்கிற படத்தோட கதாசிரியரை மாத்திடணும்.''

''என்னாச்சு... ஏன்?''

''நாம் சொன்ன இங்கிலீஷ் படத்தையெல்லாம் பார்க்காமல் அவரே சுயமாக் கதை எழுதறாராம்..!''

— எஸ். ஆர். ஜி. எம். கோபி.





> 10 அவுன்ஸ் பீர், 2 அவுன்ஸ் ஒயின், 1 அவுன்ஸ் விஸ்கி — இம்மூன்றிலும் உள்ள ஆல்கஹாலின் அளவு ஒன்றே தான். ஆகவே எந்த மதுவகையை அருந்தினாலும் பாதிப்புகள் ஏற்படுவது நிச்சயம். குடிபோதையிலுள்ள ஒருவர் குளிர்ந்த நீரில் குளிப்பதாலோ, காப்பி, மோர் குடிப்பதாலோ தெளிவடைய முடியாது. 1 கோப்பை மது கல்லீரலால் எரிமாற்றம் அடைவதற்கு குறைந்தபட்சம் 45 நிமிடங்கள் ஆகும். வாகனம் ஓட்ட வேண்டுமானால் மது அருந்தாமலிருப்பது மிக அவசியம்.
>
> — யுனைடெட் இந்தியா; டி. டி. கே. மருத்துவமனை சுற்றறிக்கை.

யைப் பெருக்க முறைகேடாக உபயோகிக்கப்பட்டது. அந்த வாயில்லா ஜீவன்களின் வாழ்வோடு விளையாடலாமா? மத்திய அதிகாரிகளின் மெத்தனம்தான் இதை அனுமதித்தது. இந்த ஆய்வாளர்கள் பதினைந்து இருபது வருடங்கள் வரை இடமாற்றம் செய்யப்படாமல் ஒரே ஊரில் பணிபுரிவதால் அவர்கள் அங்கங்கே தொடர்புகள் ஏற்படுத்திக் கொண்டு விருப்பு வெறுப்புகளை வளர்த்துக் கொண்டு விடுகிறார்கள்."

மத்திய அரசு உயர் அதிகாரி இதை மறுத்தார். "மத்திய அரசின் இப்பிரிவு அரசியல் தலையீடுகளுக்கு அப்பாற்பட்டது. மாநில அரசுகள் தத்தமது இலாகாக்களைச் சரிவர இயங்கச் செய்ய வேண்டும். மருந்துக் கட்டுப்பாடு அதிகாரிகள் மருந்துத் துறையில் பயிற்சி பெற்ற நாணயஸ்தர்களாக இருக்க வேண்டும். மாநில அரசுகள் எல்லாம் மருந்துக் கட்டுப்பாடு விஷயத்தில் ஒரே விதமாகச் செயல்படாததால்தான் பிரச்னைகள் எழுகின்றன" என்றார்.

தேவைக்கு அதிகமாகச் சில மருந்துகள் உற்பத்தி செய்யப்படுவது உண்மைதான் என ஒப்புக் கொண்ட அவ்வதிகாரி, "அனாவசியத் தயாரிப்புகளை ஆராய்ந்து, நீக்குவதற்காக ஒரு குழு அமைக்கப்பட்டுள்ளது. 1983 முதல் செயல்படும் இக் குழு அநூறு தயாரிப்புகளைத் தடை செய்துள்ளது" என்றார்.

"சர்வதேச மருந்து தயாரிப்பு நிறுவனங்கள் தங்கள் தயாரிப்புகளை இந்தியாவில் அனாவசியமாகக் கொண்டு வந்து குவிக்கின்றன என்பது உண்மையல்ல. மிகுந்த ஆராய்ச்சிக்கும் யோசனைக்கும் பிறகே ஒரு மருந்தை இந்தியாவுக்குள்ளே அனுமதிக்கிறோம். மேலை நாடுகளில் தடை செய்யப்பட்ட சில மருந்துகள் இங்கே உபயோகத்தில் இருக்கின்றதை மறுக்க முடியாது. ஆனால் அவை நம் சூழல்களுக்கு ஏற்றவையாக உள்ளன. உதாரணமாக வயிற்றுப் போக்கைக் குணப்படுத்தப் பயன்படுத்தப்பட்ட ஒரு மருந்து கண் பார்வையைப் பாதிக்கிறது என்று அயல் நாட்டில் திடீரென்று ஒரு பரபரப்பு ஏற்பட்டது. அதே மருந்து பல வருடங்களாக இந்தியாவில் பயன்படுத்தப்பட்டது — எந்தவிதமான எதிர்மறை விளைவும் இல்லாமல். இந்திய டாக்டர்களே அதனைத் தடை செய்ய அவசியம் இல்லை என்று கூறிவிட்டனர்" எனக் கூறிய அவர் தொடர்ந்து, "மற்றொரு விஷயத்தையும் தெளிவு படுத்த விரும்புகிறேன். தரக் குறைவான மருந்துகளுக்கும் போலி மருந்துகளுக்கும் இடையே வேறுபாடு உள்ளது. தரக் குறைவான மருந்துகளால் உயிருக்கு ஆபத்தோ எதிர்மறை விளைவோ ஏற்படாது. போலி மருந்துகள்தான் உண்மையில் அபாயகரமானவை. போலி மருந்துகள் பெரும்பாலும் லைசென்ஸ் பெறாத 'தயாரிப்பாளர்களால்' உற்பத்தி செய்யப்படுகின்றன. இது ஒரு சட்டம் ஒழுங்குப் பிரச்னை — பரிசோதனையின் போது பதினாறு முதல் பதினைந்து சதவிகிதம் தயாரிப்புகள் தரக் குறைவாக உள்ளனவே என்று நீங்கள் வாதாடலாம். ஆனால் ஒரு விஷயத்தை மறந்துவிடுகிறீர்கள்... தயாராகும் எல்லா மருந்துகளுமே பரிசோதிக்கப்படுவதில்லை. ஓர் ஆய்வாளர் ஆய்வு நடத்தும் போது சந்தேகத்திற்குரிய மாதிரிகளை மட்டுமே தேர்ந்தெடுத்து ஆராய்ச்சிக்கூடத்துக்கு எடுத்துப் போய் ஆராய்கிறார். இவ்வாறு சந்தேகத்துடன் தேர்ந்தெடுக்கப்படும் மாதிரிகளில்தான் பதினைந்து சதவிகிதம் வரை தரக்குறைவாக இருக்கின்றனவேயொழிய மொத்த உற்பத்தியில் பதினைந்து சதவிகிதம் அல்ல" என்று முடித்தார்.

"சாதாரண மருந்துகள் கூடத் தவறான பிரயோகத்தால் ஆபத்து விளைவிக்கக் கூடுமே; அதற்குத் தீர்வு என்ன?" என்று அவரைக் கேட்டோம்.

"எந்த மருந்தையும் டாக்டர் பிரிஸ்கிரிப்ஷன் இருந்தால்தான் வாங்கலாம்" என்று விதி செய்வது சுலபம் ஆனால், அப்படிச் செய்தால் பதினைந்து பைசா தலைவலி மருந்து வாங்க, டாக்டருக்குப் பதினைந்து ரூபாய் கொடுத்து பிரிஸ்கிரிப்ஷன் பெற வேண்டிய நிலை வந்து விடும்" என்றார்.

ஒட்டுமொத்தமாகப் பார்க்கையில் மருந்துகளை நிர்வகிக்கும் தற்போதைய முறையை மேம்படுத்த வேண்டியது மிக அவசியமானது என்று தெரிகிறது. அதோடு பொது மக்களிடையே மருந்துகளின் முறையான உபயோகம் பற்றி ஒரு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்த வேண்டியதும் மிகவும் அவசியமாகிறது.

— சாருகேசி

புகைப்படங்கள்: கேசவன் ஸ்டுடியோ

# ஆகவே, செக்ஷன் 302படி...

மார்கழி நகர்ந்த பின்பும் அதன் நிழல் இன்னும் நகராமல், நகரம் முழுவதும் பனியின் முற்றுகை. மரங்கள் தங்கள் இலைகளில் புள்ளி புள்ளியாய்ச் சேமித்து சொட்டுச் சொட்டாய்ச் செலவழித்துக் கொண்டிருந்தன. காற்றுப் பல்லக்கில் குளிர் பவனி வர... உள்ளே வரலாமா என்று வானத்தின் கதவை லேசாகத் தட்டிக் கொண்டிருந்தது சூரியன்.

அலாரம் அடித்ததும் கை நீட்டி அதன் கொண்டையைத் தட்டி விட்டு அடுத்த கட்டிலில் படுத்திருந்த வித்யா சாகரின் தோளைத் தொட்டு அசைத்தான் துரை.

''டேய்... வித்யா... எந்திரி. அலாரம் அடிச்சிடுச்சி''

''யாரைக் கேட்டு அடிச்சிச்சி?'' என்று முனகி விட்டுப் போர்வையை இழுத்துச் சுத்தமாக முகத்தை மூடிக் கொண்டு புரண்டான்.

''ஏண்டா இடியட், உங்கக்காவை ரிசீவ் பண்ணணும்னு நீதானே அலாரம் வச்சே? எந்திரிச்சா எந்திரி, இல்லேன்னு போ. பாவி, என் தூக்கத்தையும் கெடுத்து...''

வித்யா சாகர் சட்டென்று எழுந்தான். டைம்பீசில் மணி பார்த்தான்.

''மை காட். பல் விளக்கக்கூட நேரமில்லே. நான் போறதுக்குள்ளே ரயில் வந்துடும்.'' அவசர அவசரமாகக் கொடியில் தொங்கின பேண்ட்டை அணிந்தான். ''துரை, உன் பர்சிலேர்ந்து அஞ்சு ரூபா எடுத்துக்கறேன்'' சட்டையைப் பரபரப்பாய் அணிந்ததில் பட்டன்களை மாற்றிப் போட்டு விட... பிறகு கழற்றி, மறுபடி சரியாய்ப் போட்டுக் கொண்டான். ''இன்னிக்குப் பத்து நிமிஷம் ரயில் லேட்டா வரணும் கடவுளே'' சுவரில் மாட்டியிருந்த சின்ன கண்ணாடியில் குனிந்து நின்று தலை சீவிக் கொண்டான். ''டேய், போய்ட்டு வர்றேன். கதவைச் சாத்திக்க. உன் செருப்பு போட்டுட்டுப் போறேன்''

துரை தூக்கக் கலக்கத்தில், ''ம், ம்'' என்ற போது, வித்யா சாகர் மாம்பலம் ஸ்டேஷனில் இருந்தான். இவனைப் போலக் காத்திருந்தவர்களில் ஒருவரைத் தேர்ந்தெடுத்து, ''ராக்ஃபோர்ட் இன்னும் வரலையே?'' என்றான்.

''இன்னும் வரலே. பதினஞ்சு நிமிஷம் லேட்டாம்.''

அப்பாடா என்று சிகரெட் வாங்கி அங்கேயே பற்ற வைத்துக் கொண்டு, பாக்குப் பொட்டலம் வாங்கிக் கொண்டு ஒரு சிமெண்ட் பெஞ்சில் போய் உட்கார்ந்து கொண்டான்.

வானம் கொஞ்சம் கொஞ்சமாகத் தைரியம் பெற்று இருட்டை எதிர்க்க ஆரம்பித்திருந்தது. பாப்கார்ன் பொறிப்பது போல் பக்கத்து மரத்திலிருந்து பறவைகள் சப்தம். விடிந்தது தெரியாத ஒரே ஒரு பொட்டைச் சுவர்க் கோழி விட்டு, விட்டுக் குரல் கொடுத்துக் கொண்டிருந்தது. பச்சை, சிவப்பு வெளிச்சங்களுடன் மீனம்பாக்கம் நோக்கித் தாழப் பறந்தது ஓர் அலுமினியக் கழுகு.

சிகரெட்டை ஆழமாக இழுத்து, புகை வெளியேற்றினான். ரயில் வரும் பாதையைப் பார்த்தான். அடுத்த டிராக்கில் ஒரு மின்சார ரயில் பீச் நோக்கி வந்து நிற்க... அடுத்த பிளாட்பாரத்தின் கும்பல் முழுக்க ஏறிக் கொண்டது. ரயில் கடக்கையில் லேடீஸ் கம்பார்ட்மெண்ட்டில்

பட்டுக்கோட்டை பிரபாகர்

ஜன்னல் ஓரம் அமர்ந்திருந்த பெண்கள் இருவர் இவனைப் பார்த்துச் சிரித்த மாதிரி இருந்தது. சரியாய்ப் பார்ப்பதற்குள் அடுத்த பெட்டி. அடுத்த பெட்டி என்று ரயில் போய் விட்டது.

தூரத்தில் மலைக்கோட்டை எக்ஸ்பிரசின் முகம் தெரிய.. வித்யா சாகர் சிகரெட்டைச் செருப்பில் நசுக்கி விட்டு அவசரமாய்ப் பாக்கு பிரித்துப் போட்டுக் கொண்டு எழுந்தான். ஸ்டேஷனின் ஷெட் கடந்து ரிசர்வ்ட் பெட்டி நிற்கும் இடத்திற்கு நடந்து வந்து நின்று கொண்டான்.

ரயில் வந்து நின்றதும் பரபரப்பாய் ஒவ்வொரு வாசலிலும் இறங்குபவர்களைப் பார்க்க... அடுத்த கம்ப்பார்ட்மெண்ட்டில் ஜன்னல் வழியாகக் கை நீட்டி. ''வித்யா'' என்று அக்காவின் குரல் வர...

ஏற்கெனவே இறங்கி நடந்த ஓர் இரட்டைப் பின்னல் திரும்பிப் பார்க்க..., ''உங்களை இல்லேங்க. நீங்க போங்க'' என்று இவன் நடந்து...

இரண்டு பெரிய சூட்கேஸ்கள், ஒரு தோள் பையுடன் இறங்கினாள் நிவிதா.

''வாக்கா.'' என்று ஒரு சூட்கேசையும்,



பேக்கையும் வாங்கிக் கொண்டான், "கொஞ்சம் கறுத்த மாதிரி தெரியுது?"

"முகம் கழுவினா சிவந்துடுவேன். எப்படி இருக்கேடா? வெய்ட்டா இருக்கும். போர்ட்டரைப் பிடியேன்"

"இது ஒரு வெய்ட்டா? நீ வா. அம்மா எப்படி இருக்காங்க?"

"நல்லா இருக்காங்க."

"முருகேசு?"

"மீசை ஒதுக்கிட்டான் வித்யா. எனக்குத் துணைக்கு வர்றேன்னான். வேணாம்னுட்டேன்."

"ஏன், வந்தா என்ன? பார்த்து நாளாச்சு."

"ஆனுவல் லீவுல வரச் சொல்லியிருக்கேன். ஏன், சார் ஒரு தடவை திருச்சி வந்து எல்லாரையும் பார்த்துட்டு வந்தால் குறைஞ்சி போய்டுவீங்களோ?"

"நான் ஒண்ணும் குறைய மாட்டேன்க்கா. நிதி நிலைமை அப்படி."

"என்னடா ஆச்சி? பிரைவேட் கம்பெனிக்கும் அப்ளை பண்ணிக்கிட்டிருக்கியா, இல்லையா? நான் ஒரு கட்டிங் எடுத்து அனுப்பினேனே, எழுதிப் போட்டியா?"

"நம்ம கதை அப்புறம் பேசிக்கலாம் சாவகாசமா. சொல்லு, பஸ்ஸில போயிடலாமா, ஆட்டோவா?"

"மூணு லக்கேஜை வச்சிக்கிட்டு... எப்படி பஸ் சரியா வரும்? ஆட்டோவில் போய்டலாம்."

டிக்கெட்டுகளைக் கொடுத்து விட்டு வெளியே வந்து ஆட்டோவில் அமர்ந்தார்கள்.

"சைதாப்பேட்டையில எங்கே சார்?" என்றான் டிரைவர்.

"பாலம் தாண்டி வேளச்சேரிக்குப் பிரியற ரோட்டுக்கிட்டேப்பா. பாரதி வொர்க்கிங் விமன்ஸ் ஹாஸ்டல்."

"தெரியும் சார்."

ஆட்டோ புறப்பட்டது.

"ரூம் வசதியா இருக்குமா வித்யா?"

"அப்படித்தான் சொல்லக் கேள்வி. ஹாஸ்டல்ல இடம் கிடைக்கிறதே பெரிய பிரச்னை. நான் ரூமைப் பார்க்கணும்னு எப்படி கேக்கறது? அதுலயும் லேடீஸ் ரூம். உனக்கு மூணு பேர் தங்கற ரூம்லதான் அலாட் பண்ணியிருக்காங்க. மாசம் நூறு ரூபா. முந்நூறு ரூபா டெபாசிட் கட்டணும். மூணு ஃப்ளோர்ஸ். ஒவ்வொரு ஃப்ளோர்லயும் எக்ஸ்டென்ஷன் போன். வார்டனுக்குக் கொஞ்சம் காது மந்தம். தண்ணி வசதி எப்படின்னு கேட்டேன். எங்க ஹாஸ்டல்ல தண்ணியடிக்கிற பொண்ணுங்க யாரும் இல்லேன்னு சண்டைக்கு வந்துட்டாங்க. அப்புறம் ஆஃபீஸ் ரூம்ல முழுங்கால் வரைக்கும் கவுன் போட்டுக்கிட்டு ஒரு பொண்ணு கிளார்க்கா இருக்கு. இப்ப போறப்ப பேர் விசாரிக்கணும்."

"ஏண்டா மெட்ராஸ்ல இதான் பொழைப்பா உனக்கு?"

"சும்மா பார்ட் டைமா.." என்று சொல்லிச் செல்லமாய் மண்டையில் குட்டு வாங்கிக் கொண்டான் வித்யா சாகர்.

"ரெண்டு மூணு புத்தக பதிப்பகங்களிலே போய் ப்ரூஃப் திருத்தறதா எழுதியிருந்தியே. இப்ப போய்க்கிட்டிருக்கியா?"

"பின்னே? அதானே ஜீவனம். அதுக்கும் போட்டி இருக்குக்கா. ஒரு நாள் வேலை இருக்கும். ஒரு நாள் இருக்காது. ஒரு நாள் ஃபுல் மீல்ஸ். ஒரு நாள் டீயும், பன்னும். தினம், தினம் நம்பிக்கை தேய்ஞ்சிக்கிட்டே இருக்குக்கா."

"போடா முட்டாள். உன்னோட திறமைக்கும், அறிவுக்கும் நீ எப்படி எல்லாம் வரப் போறே தெரியுமா? இந்தக் கஷ்டம் எல்லாம் உன் மனசுக்கு உரம்னு நினைச்சுக்கோ. இந்தப் புலம்பல் எல்லாம் வேணாம். எப்பவும் போல சின்சியரா முயற்சி பண்ணிக்கிட்டே இருக்கணும். தெரிஞ்சிதா?"

நிவிதா தோள் பையின் ஜிப்பை இழுத்து, உள்ளிருந்து பிளாஸ்டிக் பெட்டி எடுத்தாள். அதைத் திறந்து கைக் கெடிகாரம் எடுத்து, "இந்தா, உனக்காகத்தான் வாங்கிட்டு வந்தேன்" என்றாள்.

"என்க்கெதுக்குக்கா?"

"நேரம் பார்க்கத்தான். பிகு பண்ணிக்க வேணாம். கையைக் காமி"

அவன் இடது கையை எடுத்து, கட்டி விட்டாள், "நல்லா இருக்கா?"

"ம்" என்றான் சந்தோஷமாய்.

ஆட்டோ நிற்க, இறங்கிக் கொண்டார்கள். நிவிதா பணம் கொடுத்து விட்டு அந்தப் பெண்கள் விடுதியை நிமிர்ந்து பார்த்தாள்.

"இங்கேர்ந்து மவுண்ட் ரோடு பக்கம் தானே வித்யா?"

"பக்கமா? நீ நின்னுக்கிட்டிருக்கிறதே மவுண்ட் ரோடுதான். உன் ஆஃபீசுக்கு இந்த பஸ் ஸ்டாப்பிலதான் ஏறணும். மூணு நிமிஷத்துக்கு ஒரு பஸ். சாந்தி தியேட்டர் ஸ்டாப்ல இறங்கிக்க வேண்டியதுதான். தன் பில்டிங்லதானே உன் ஆஃபீஸ்?"

"ஆமாம்."

உள்ளே வந்து அலுவலகம் என்கிற சிறிய அறையில் இருந்த பெண்ணிடம் அறிமுகப் படுத்திக் கொண்டதும், அவள் லெட்ஜர் புரட்டிப் பார்த்து, பணம் வாங்கி, ரசீது கொடுத்துவிட்டு, "ஒரு நிமிஷம் உக்காருங்க. வார்டன்கிட்டே சொல்லிட்டு வர்றேன். அவங்களைப் பார்த்துட்டு ரூமுக்குப் போகலாம்" என்று எழுந்து சென்றாள்.

"அக்கா அவ பேரு மேரியா, மரியாவா? மோதிரத்தில் 'எம்' போட்டிருக்கு."

"உதை வாங்கிட்டுத்தான் போகப் போறே நீ."

"இனிமேல் நான் லஞ்சம் வாங்கவே மாட்டேன்!"

"திருந்திட்டீங்களா?"

"அட நீ வேறே! நாளைக்கு நான் ரிடயர் ஆகப் போகிறேன்!"

— அ. பெ. ரவி.




# 'பொங்கல் பரிசு யாருக்கு?'

மேற்படி காசோலையில் உங்கள் பெயர் எழுதப்பட வேண்டுமா? அப்படி யானால் இந்தத் தொடர்கதையைக் கவனமாகப் படித்து வரவும். கதை முடியச் சில வாரங்கள் இருக்கும்போது பட்டுக்கோட்டை பிரபாகர் கேட்கும் சில எளிய கேள்விகளுக்குத் தபால் கார்டில் சரியான பதில்களைத் தந்துவிட்டால் போதும். பரிசு உங்களுக்கே! ஒருவருக்கு மேல் சரியான விடைகள் எழுதினால் இருக்கவே இருக்கிறது குலுக்கல் வாய்ப்பாடு!

வார்டனைச் சந்தித்தார்கள். "சத்தமா பேசுங்க" என்றார். சத்தமாய் பேச... "ஏன் இப்படி கத்தறீங்க?" என்றார். ரூல்ஸ் அண்ட் ரெகுலேஷன்ஸ் என்று ஒரு முழ நீளத்தில் ஓர் அட்டை கொடுத்தார். கண்ணியமாய் இருக்க வேண்டும் என்றார்.

வெளியே வந்தார்கள்.

"இதான் எல்லை. இதுக்கு மேல நான் உள்ளே வர முடியாது. அப்போ நீ உன் ரூமுக்குப் போய், குளிச்சிட்டு ஆஃபீஸ் போறே. நான் சாயங்காலம் உன் ஆபீசுக்கு வர்றேன். என் ரூமுக்கு அழைச்சிக்கிட்டுப் போய்க் காமிக்கிறேன். சரியா?"

"சரி."

"கேக்கணும்னு இருந்தேன். இந்த டிரான்ஸ்ஃபர்ல உனக்குச் சம்பளம் கூடுமா?"

"அதெல்லாம் இல்லே. சிடி அலவன்ஸ் கிடைக்கும். திருச்சில வெறும் சேல்ஸ் ஆபீஸ்தான். மொத்தம் பத்தே பேர்தான். இங்கே ரீஜனல் ஆபீஸ்ல இருநூத்தி சொச்சம் பேர் வேலை பார்க்கறாங்க. இங்கே ப்ரமோஷனுக்குச் சான்ஸ் உண்டு. அதனால் தான் ரெண்டு வருஷமா போராடி டிரான்ஸ்பர் வாங்கினேன்."

"அந்த இருநூத்தி சொச்சத்தோட நானும் ஓர் ஓரத்தில உக்காந்துக்கிறேனே... உன் மேனேஜரைப் பார்த்துக் கொஞ்சம் சிபாரிசு செய்யேன்."

"மேனேஜர் என் மாமாப் பையன் பாரு. நான் சொன்னதும் செய்யறதுக்கு. சரி. அப்போ சாயங்காலம் ஆபீஸ் வாசல்ல வெய்ட் பண்றே. அஞ்சு மணிக்கு ஆஃபீஸ் முடியுது. என்னைக் காக்க வச்சிடாதே."

"சரி, நீ கேட்டுக்கிட்டு வர்றியா?"

"என்ன?"

"மரியாவா, மேரியான்னு..."

"ராஸ்கல்!" என்று கையை ஓங்க...

சிரித்துக் கொண்டே வெளியேறினான் வித்யா சாகர்.

**சா**க்லேட் கலர் அம்பாஸிடர் தன் பில்டிங்கின் போர்ட்டிகோவில் நுழையும் முன்பு மியூசிகல் ஹாரன் அடித்தது. நின்றதும் ப்ரீஃப்கேசுடன் ஷியாம் இறங்கிக் கொண்டு, "பார்க் பண்ணிடு" என்றான்



# புண்ணிய காரியங்களை ஸங்கிராந்தியில் ஏன் அனுஷ்டிக்க வேண்டும்?

மேஷம் முதலிய பன்னிரெண்டு ராசிகளில் கிரமமாக மாதந்தோறும் சஞ்சரிக்கும் ஸூரிய பகவான், ஒரு ராசியிலிருந்து வேறு ராசிக்கு பிரவேசிக்கின்ற சமயம் ஸங்கரமணம் ஸங்கிராந்தி என்று சொல்லப்படுகிறது. அந்தப் புண்ணிய காலங்களில் செய்கிற ஸ்நானம், தானம், ஹவ்யம், கவ்யம், முதலிய புண்ணிய காரியங்களுக்கு ஏழு வருஷம் ஸூரியன் நல்ல பலன்களைக் கொடுக்கிறார். ஆகையால் புண்ணிய காரியங்களை அவசியம் அனுஷ்டிக்க வேண்டும்.

தேவலர்: ஸங்கராந்தி சமயம் ஸூக்ஷ்மமானது. நம்மால் அறிய முடியாதது. ஆகையால் ஸ்ங்கரமணத்திற்கு முன்பு முப்பது பின்பு முப்பது நாழிகைகள் புண்ணிய காலமாகும்.

| ராசி | ஸங்கிரமணத்தின் நாமதேயம் | (ப்ருஹஸ்பதி வாக்குப்பலன்) புண்ணிய காலம் | புண்ணிய பலன் |
|---|---|---|---|
| மகரம் | உத்திராயணம் | பின் இருபது நாழிகை | கோடி புண்ணியம் |
| கும்பம் | விஷ்ணுபதீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மீனம் | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மேஷம் | விஷீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| ரிஷபம் | விஷ்ணுபதீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| மிதுனம் | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| கர்கடகம் | தக்ஷிணாயனம் | முன் இருபது நாழிகை | கோடி புண்ணியம் |
| சிம்மம் | விஷ்ணுபதீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| கன்னி | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| துலா | விஷீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| விருச்சிகம் | விஷ்ணுபதீ | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |
| தனுசு | ஷடசீதி | முன்பும், பின்பும் பத்து நாழிகை | ஆயிரம் புண்ணியம் |

ஸம்க்ஷேப தர்மசாஸ்திரம்

டிரைவரிடம்.

லிஃப்ட்டுக்காக மூன்று விநாடிகள் காத்திருந்து. வந்து. திறந்ததும், ஆபரேட்டர் ஸ்டூலில் இருந்து எழுந்து. "குட் மார்னிங் சார்" என்றான்.

நான்காவது ஃப்ளோரில் வெளிப்பட்டதும் எதிரே பிரும்மாண்ட அலுமினிய பார்டர் போட்ட கண்ணாடிக் கதவுகளின் மத்தியில் 'மீரஜ் எலெக்ட்ரிகல்ஸ் லிமிடெட் — ரீஜனல் ஆஃபீஸ்' என்று ஆங்கில தங்க எழுத்துக்கள் பளபளத்தன.

ஷியாம் வருவதைப் பார்த்து உள் பக்கம் நின்றிருந்த பியூன் கதவைத் திறந்து. அவன் உள்ளே வந்ததும், பிரீஃப்கேஸை வாங்கிக் கொண்டு பின்னாலேயே நடந்தான்.

குட்மார்னிங் சார் — ஷியாம் — குட் மார்னிங் சார் — இரண்டு — குட் மார்னிங் சார் — பக்கங்களிலும் — குட் மார்னிங் சார் — ஏராள — குட் மார்னிங் சார் — மேஜைகளுக்கு — குட் மார்னிங் சார் — மத்தியில் — குட் மார்னிங் சார் — கார்ப்பெட்டில் — குட் மார்னிங் சார் — நடந்து — குட் மார்னிங் சார் — 'ரீஜனல் மேனேஜர் — எஸ். ஷியாம்குமார்' என்று எழுதப்பட்டிருந்த அறைக்குள் நுழைந்தான்.

பியூன் பிரீஃப் கேஸை மேஜை மேல் வைத்து விட்டு, ஏர்கண்டிஷனரை ஆன் செய்து விட்டு, ஓசை இல்லாமல் கதவைச் சாத்திக் கொண்டு வெளியேறினான்.

ஷியாம் டையின் முடிச்சைக் கொஞ்சமாகத் தளர்த்திக் கொண்டு தன் ஆள் விழுங்கிக் கறுப்புக் குஷன் நாற்காலியில் அமர்ந்ததும் இண்டர்காம் அழைத்தது.

"யெஸ்."

"திருச்சி சேல்ஸ் ஆஃபீஸ்லேர்ந்து டிரான்ஸ்ஃபராகி மிஸ் நிவிதா இங்கே வந்திருக்காங்க. ஒரு மரியாதைக்காக ஷி வாண்ட்ஸ் டு மீட் யு சார்!"

"வரச் சொல்லுங்க!"

வைத்ததும், ஒலித்த டெலிபோனை எடுத்து, "நான்தான். சொல்லு. பெங்களூர்லேர்ந்து நேத்து நைட்டே வந்துட்டனே.. இல்லை. தங்கலை. சேச்சே. உன்கிட்ட சொல்றதுக்கென்னப்பா? இங்கயா? என் ஆஃபீஸ்லயா? போடா! நீ வேற. பதினெட்டு பேர் லேடீஸ் இருக்காங்கப்பா. எதுவும் ரெண்டாவது தரம் பார்க்க முடியாது. திராபை! போன மாசம் டெல்லில ரீட்டான்னு... சரி.. காலேலேயே இந்தப் பேச்சா?.ஈவினிங் மீட் பண்ணிப் பேசலாமே, வச்சிடவா?"

வைத்துவிட்டு எங்கேஜ்மெண்ட் டைரியைப் புரட்டினபோது, "மே ஐ கமின் சார்!" என்று குரல் கேட்டது.

"யெஸ்" என்று நிதானமாக நிமிர்ந்த ஷியாம், புன்னகையுடன் உள்ளே நுழைந்த நிவிதாவைப் பார்த்து... அந்த முதல் விநாடியே தடுமாறினான்.

அந்தத் தடுமாற்றமே இந்தக் கதையின் ஆணிவேர்.

(தொடரும்)



# கல்யாணம்

இன்னிக்கி எனக்குக் கல்யாணம்; வயசு என்ன தெரியுமோ? அறுபது.

"ஓஹோ! அறுபதாம் கல்யாணமாங் கறேளா?"

அதுதான் இல்லேன்னேன். முதல் கல் யாணம்தான்.

என் காதற் கிழவிக்கு வயசு ஐம்பது!

அவளை நான் முதல் முதல்லே சந்திச் சதே ஒரு சுவையான கதை.

ஏதோ வேலையாக அவள் தந்தையைப் பார்க்க அவர்கள் வீட்டுக்குப் போனேன். அவர்கள் மாடியில் குடியிருந்தார்கள். மாடிப்படி தென்படவில்லை. என் அவசரம், சுற்றிப் போய்ப் பின் பக்கத்தில் பார்க்கத் தோன்றவில்லை. நிமிர்ந்து பார்த்தேன். இவள் நின்று கொண்டிருந்தாள்.

"இந்த வீட்டுக்கு மாடிப்படி எங்கிருக்கு?" என்றேன்.

"இந்த வீட்டுக்கு மாடிப்படியே கிடை யாது. ஏணிதான். வைக்கிறேன்; வறீங்களா?"

என் முகத்தில் அசடு அடை அடையாக அப்பியிருக்க வேண்டும். அவள் சிரித்தபடி "மாடிப்படி பின்னாடி இருக்கு. அப்படி சுத்தி வாங்க" என்று வழி காட்டினாள்.

பின்னர் தன் தந்தைக்கும் எனக்கும் காப்பி எடுத்து வந்தவள்,

"அப்பா இவரைக் கொஞ்சம் வம்புக் கிழுத்துட்டேன்" என்றாள்.

"என்ன பொண்ணும்மா நீ" என்று பெரு மூச்சுவிட்ட அவர், "கிருஷ்ணன்! இவள் என் பெண் சிவகாமி. ரொம்ப குறும்புக்காரி. ஒரு குழந்தையாயிடுத்து. இன்னமும் இவ ளுக்கு விளையாட்டுப் புத்தி போகலே. என்ன சொன்னா உங்களை?" என்றார்.

"பரவாயில்லே சார். ஏதோ தமாஷ் பண் ணினாங்க" என்றேன்.

அவள் திருமணமானவளென்பது மனத் தில் உவ்வா முள்ளாகக் குத்தியது.

— பாரதி —

பெண்களில் வித்தியாசமானவள்' சிவகாமி. நெஞ்சிற்கும் நாவிற்கும் நேரான பாலம். நெஞ்சு நினைப்பதை நாக்கு டக்டக்கென்று சொல்லாக உதிர்த்து விடும். அவளுடைய கள்ளமற்ற மனமும் நினைத்ததைச் சொல்லும் நேர்மையும் மேன்மையான எண்ண ஓட்டமும் என்னைக் கட்டிக் கட்டி இழுத்ததால் அவளைச் சந்திப்பதற்காகவே பலமுறை அவள் வீட்டிற்குப் போயிருக்கிறேன்.

ஒரு முறை அலுவலக வேலையாகப் பத்து நாட்கள் வெளியூர் போய் விட்டுத் திரும்பியவன், வெகு ஆவலாகச் சிவகாமியைக் காண விரைந்தேன்.

''எப்ப வந்தீங்க?'' என்றவளின் முகத்தைப் பார்த்துத் தூக்கிவாரிப் போட்டது. முகம் வீங்கி, கன்னத்தில் விரல் விரலாகப் பதிந்திருந்தது.

இடுப்பிலிருந்த குழந்தையைக் காட்டி, ''இவன் அப்பாவுக்கு வாய் வார்த்தையில் பேச வராது'' என்று சிரித்தாள்.

புழுதியிலெறியப்பட்டுவிட்ட மற்றுமொரு நல்ல வீணை.யிவள் என்ற எண்ணத்தில் மனம் ரணமாக, பேசாமல் எழுந்து வந்து விட்டேன்.

''போயிட்டு வறேன்'' என்று சிவகாமி கணவனுடன் ஊருக்குப் புறப்பட்டதும் மனமும் மாலை நேரங்களும் வெறிச்சோடி 'ஓ' வென்று தனிமை கப்பிக் கொண்டது.

'சாயங்காலம் சிவகாமியிடம் சொல்லி, அவள் ரியாக்ஷனைப் பார்க்க வேண்டும்' என்று; எண்ணங்களையும் பார்த்தவை, கேட்டவைகளையும் மனத்தில் தேக்கி வைத்துக் கொள்ளும் பழக்கத்தை மெல்ல மெல்ல மறந்தேன்.

விரைவில் அவளுடைய தந்தைக்கும் மாற்றலாகி விடவே, அவர்களுடைய தொடர்பே அற்றுப் போய் விட்டது.

'சிவகாமியின் நினைவால்' என்று பொய் சொல்ல மாட்டேன். ஆனால், ஏனோ கல்யாணம், குடும்பம், குடித்தனம், என்றெல்லாம் நாட்டமே இல்லாமல் போய் விட்டது. முழுக் கவனமும் செய்து வந்த தொழிலில் திரும்பவே, தொழில் சக்கைப்போடு போடத் துவங்கியது.

இன்று நான் ஊரில் ஒரு முக்கிய புள்ளி; பிரபலஸ்தன். வண்டி வைத்திருக்கிறேன். அழகான வீடிருக்கிறது. குரல் கொடுத்தால் ஓடிவர உண்மையான ஊழியர்களிருக்கிறார்கள்.

செல்வத்தின் செழிப்பு உடலில் மிதமிஞ்சிப் பிரதிபலித்து விடக் கூடாது என்று எச்சரிக்கையாகத்தானிருந்தேன். அப்படியிருந்தும் இளந்தொந்தி போட்டு விட்டது!

எப்படியிருந்தா என்ன? என் சிவகாமி என்னை நேசிக்கிறாள்! பாசத்தைக் கொட்டுறாள்!

திருமணங்கறது நெருக்கமானதொரு தோழமைதான்; சேர்ந்து சிரிக்க, நல்ல விஷயங்களை இணைந்து அனுபவிக்க, இனிய கணங்களை இரண்டறக் கலந்து, ரசிக்க மனம் டற. இதயங் பலவீனப்பட்டுப் பயப்படற போது நெஞ்சிலிருக்கிறதை அப்படியே திறந்து கொட்ட — இதுக்கெல்லாம்தான் கல்யாணம்; உடற் கவர்ச்சிங்கறது ஒரு குறுகிய கால ஆதிக்கம்தான் என்பதையெல்லாம் இந்தக் காலத்தில் ரொம்பப் பேர் தெரிஞ்சிண்டிருக்காங்க; ஆனாலும் இன்னமும் அஞ்ஞானமா 'ஐய்ய இந்த வயசிலயா கல்யாணம்' என்கிறவர்களும் உண்டு.

பல வருஷங்களுக்குப் பிறகு, ஒரு நாள் மார்க்கெட்டில் காய்கறி வாங்கிண்டிருந்த போதுதான் சிவகாமியைச் சந்தித்தேன்.

''இந்தக் கீரைக் கட்டுல புல்லு, தழை, களிமண் எல்லாம் போக எவ்வளவு கீரை தேறும்?'' என்றது ஒரு குரல். தொடர்ந்து பெண்களின் கலீரென்ற சிரிப்பொலி. ''ஐய்யே இன்னாதாயி அப்பிடிக் கேட்டுட்டே'' என்கிற கீரைக்காரியின் முறையீடு.

எனக்குள்ளே, காய்ந்து இறுகிப் போயிருந்த ஊற்றுக் கண்ணொன்று பசுரென்று திறந்து, குபுகுபுன்னு ஏதோ ஒண்ணு உடம்பெல்லாம் பாயறாப்பல ஓர் உணர்வு, நடுக்கம், பரவசம், பரபரப்பு; மூச்சு வேகம் வேகமாவர, வேர்வையில் சட்டை தொப்பமா நனைஞ்சிடுத்து.

குரல் சிவகாமியினுடையது தான். இருந்தாலும் உறுதி பண்ணிக்கிறதுக்கு அவளை நோக்கி நடந்தேன். அவளே திரும்பினாள்.

''நீங்க கிருஷ்ணன் இல்லே?''

''எப்படி இருக்கீங்க சிவகாமி?''

அடுத்த சந்திப்பில், நாங்கள் பிரிந்த சில வருடங்களுக்குள்ளேயே கணவனை இழந்தது பற்றி, குழந்தைகளை வளர்க்கத்தான் உத்தியோகம் தேடிண்டது பற்றி, குழந்தைகள் வளர்ந்து சுதந்திரமான பிறகு கடமைகளெல்லாம் முடிஞ்சது என்று ஓய்வு கோரிப் பெற்றது பற்றி, ஏதோ ஒரு உந்துதல்ல இந்த ஊருல செட்டிலானது பற்றி — எல்லாம் சொன்னாள் சிவகாமி.

அடுத்தடுத்துச் சந்தித்தோம்; கருத்துக்கள் பரிமாறிக் கொண்டோம். சில சமயம் என்னுடைய தொழில் பிரச்னைகளைக் கூட அவளிடம் சொல்லுவேன். பெண்கள் பேதைமையுடையவர்கள் என்று யார் சொன்னது என்று முகம் சுளிக்குமளவிற்குத் தெளிவாக யோசனைகள் சொல்வாள். நான் அவளுக்குக் 'கிருஷ்' ஆனேன். ஆனால் நான் அவளைப் பேர் சொல்லி அழைப்பதை விட்டு விட்டேன்.

போன மாசம், தன் குழந்தைகளைப் பார்க்கப் போனவள் ஏறத்தாழ ஒரு மாசம் கழிச்சுத் திரும்பினாள். வந்ததும், தன்னை 'டெரெஸ் கார்டன் ரெஸ்தரா'னில் சாயங்காலம் சந்திக்கும்படி ஃபோன் பண்ணினாள். சாயங்காலம் எனக்கு ஒரு மீட்டிங் இருந்தது. அதை அட்ஜஸ்ட் பண்ணிண்டு நேரம் ஃபிக்ஸ் பண்ணிண்டோம்.



ரெஸ்தரானில் காத்திருந்தாள் சிவகாமி. முகத்தில் வழக்கமான சிரிப்பிருந்தாலும் ஒரு சின்ன அயர்வும் இருந்தாற்போல் தோன்றியது. "வாங்க கிருஷ்" என்றாள் என்னைப் பார்த்ததும்.

"எப்படி இருந்தது டிரிப்பெல்லாம்?"

"நன்றாயிருந்தது.

"எப்படியிருக்காங்க பசங்கள்ளாம்?"

"நன்னாயிருக்காங்க"

"உங்களைத் தங்களோட தங்கச் சொல்லலியா?"

"சொன்னாங்க சொன்னாங்க"

"பின்னே நீங்க.....?"

"ப்ச!"

அவள் அலுப்பு எனக்குள் ஒரு சின்ன சந்தோஷத்தை ஏற்படுத்தியது. ஆனாலும் மனத்தின் ஒரு மூலையில சின்னக் குற்ற உணர்வும் தலை நீட்டியது.

"எதுக்கு அலுப்பு?"

இந்தக் கேள்வி என் குற்ற உணர்வை அமுக்கவா — அவள் மனசை ஆராயவா — நிஜமா எனக்கே தெரியாது.

"என்ன போங்க! எல்லாம் பிறர் மெச்சறதுக்காகவும், உலக சம்பிரதாயத்துக்காகவும் என்னைக் கூப்பிடறதுகளே ஒழிய உண்மையிலே எனக்காக, என்னை விரும்பிக் கூப்பிடறதாத் தோணலே. இந்த 'வந்துடு வந்துடு' எல்லாம் போய்ச் சேர்ந்துக்கற வரைக்கும் தான். அப்புறம் சாணிச் சுருளை யாயிடுவேனோ, எனக்குன்னு ஓர் ஆத்மா — ஒரு சுய கௌரவம் இருக்குங்கறதை நானே மறக்கும்படியான நிலைமை ஏற்பட்டுடுமோன்னு பயமாயிருக்கு...."

அவள் கண்களில் இலேசான பளபளப்பு

"எங்க பசங்க நல்லா படிக்கறதுக்கு டிவிதான் காரணம்."

"டி. வி. யில் அப்படி என்ன இருக்கு?"

"நல்லா படிக்கலேன்னு டிவி நாடகத்தை முடியும் வரை பார்க்கணும்'னு பயமுறுத்தி வச்சிருக்கேன்..."

— உரா. ராஜேந்திரன்.

"கிருஷ்"

"ஊம்"

"இந்தச் சமைக்கிறது சாப்பிடறது. படிக்கறது எழுதறது. பாட்டுங்கற பேர்ல காட்டுக் கூப்பாடு போடறது. அங்கே வாங்க இங்கே வாங்கன்னு அலைக்கழிச்சு உங்களைச் சந்திக்கறது — இதெல்லாம் போரடிச்சுப் போச்சு"

"அதனால?"

"ஏதாவது புதுசா செய்யணும் போலருக்கு"

"புதுசான்னா....?"

"புதுசா விபரீதமா ஏதாவது செய்யணும் போலிருக்கு. இந்த மூணாவது மாடியிலேர்ந்து 'டுமால்'னு குதிச்சுடணும் போலிருக்கு.

அவள் நாற்காலியைத் தள்ளிக் கொண்டு எழுந்தாள். மறுகணம் அவள் கீழே நடைபாதையில் கையும் காலும் கோணா மாணான்னு முகம் நசுங்கல் நசுங்கலாக நசுங்கி, கறுப்பும் இளஞ்சாம்பல் நிறமும் கலந்த அவள் மோதிரச் சுருள் முடில இரத்தச் சிவப்பு ஏராளமாக அப்பி... "ஐய்யோ" கை நடுங்கி, காப்பிக் கோப்பை நடுங்கி, சட்டை மேல் காப்பி சிந்தி விட்டது!

"என்னாச்சு?"

கீழே விழுந்துட்ட கர்சீஃபை எடுத்துக் கொண்டு நாற்காலியில் உட்காரப் போன அவள் கண்களை மலர்த்தினாள்.

"நல்ல வேளை" நான் மனசுக்குள் சொல்லிண்டேன்.

"என்னாச்சு கிருஷ்? ஏன் இப்படி வேர்த்து ஊத்தறது?" என்றபடி என் சட்டையைப் பார்த்தாள்.

"அடடா சட்டையில் காப்பி சிந்திடுத்தே! இந்தாங்க துடைச்சிக்குங்க காஞ்சிடுத்துன்னா கறை விடாது"

கைக்குட்டையைத் தண்ணீர் டம்ளரில் முக்கி எடுத்து நீட்டினாள்.

"என்ன அவசரம்? மீட்டிங்குக்கு இன்னும் நிறைய நேரமிருக்கே?" கையை உயர்த்தி மணி பார்த்தாள்.

இளம் கீரைத் தண்டைப் போல மொழு மொழுன்னிருந்த அந்த மணிக்கட்டை 'ஆஹா'ன்னு ரசனையோடு ரசிச்சேன்.

"இல்லே, காப்பி குடிக்கிறதுக்கு அவசரம்னா நான் இரும்பிக்கறேன் ஸாஸர்லவிட்டு உறிஞ்சிடுங்க; ஸாஸர்லேர்ந்து புர் புர்னு உறிஞ்சற அநாகரீகத்தை என்னால் தாங்கிக்க முடியாதுப்பா."

"அதில்லே... அதுக்கில்லேம்மா... நீ வந்து என் வீட்டில் என்னோட இருந்துடு"

மனசிலிருந்ததை அவசரக் குடுக்கை நாக்கு துப்பிவிட்டது. குபீர்னு பயத்துல உடம்பு நடுங்கிவிட்டது எனக்கு.

"என்னது!"

விரியோ விரின்னு அவள் கண்கள் விரிய 'ஐயோ ஐயோ! அழகு அழகு!'ன்னு அங்கலாய்ச்சுது என் மனசு.

"ஓதைப்பேன்'

வெலவெலத்துப் போய் ஒரு கால் பின்



# தளபதி திடமதி

## பரிசு ரூ. 400!

மாறிவரும் அரசியல் சூழ்நிலைகளுக்கு ஏற்ப நமது ஆஸ்தான ஜோக்கர் விட் அடிப்பார். சமுதாயப் பிரச்னைகள் குறித்தும் அறிவுக்கொழுந்தான கருத்துக்களைத் தெரிவிப்பார். பொதுக் கூட்டத்தில் பேசுவது போலவோ, உரையாடலாகவோ ஜோக் அமைந்திருக்கலாம். கீழே உள்ள கூப்பனில் எழுதி அனுப்புங்கள். உறை மீது "தளபதி திடமதி" என்று குறிப்பிடுக. முதல் துணுக்குக்குப் பரிசு ரூ. 25/— ஒருவரே எழுதிய துணுக்குகள் சில அடுத்த பல இதழ்களில் பிரசுரமானால் ஒவ்வொரு முறையும் பரிசு இரட்டிப்பாகும். அதிகபட்சப் பரிசு ரூ. 400/—.

கூப்பன்:

கல்கி 17.1.88 இதழ் — முடிவு தேதி: 26.1 .88.

தளபதி திடமதி: "..............................

..............................

..............................

..............................

..............................

..............................

..............................

..............................

..............................

.............................."

என் பெயர்: ..............................



விலாசம்: ..............................

..............................

னுல் யாராவது இருக்காளோன்னு திரும்பிப் பார்த்தேன் ஒருத்தரையும் காணோம்.

"ஒதைப்பேன்!"

என்னைப் பார்த்துத்தான் விரலை ஆட்டிண்டிருந்தாள்.

"என்ன இப்படி பயங்கரவாதித்தனம்? ஒதைப்பேன் மிதைப்பேன்னு?"

என் குரல் எங்கேயோ காத தூரத்திலேருந்து ஈனமாகக் கேட்டுது.

இந்த மாய்மாலத்துக்கெல்லாம் கொறைச்சலில்லே. நான் என்ன புறம்போக்கா? பராரியா? உங்க வீட்டுல உங்களோட இருந்துடறதாமே! இல்லே நான் உங்களை கிருஷ்னு கூப்பிடறதால் உங்க மேல் எனக்குப் படா 'கிரஷ்'னு நெனப்போ?"

"ஐயோ ஐயோ அது இல்லேம்மா... நீங்க இப்படித் தனியா கஷ்டப்படறதை..."

"நான் தனியா இருக்கேன் கஷ்டமா இருக்குன்னு எப்பய்யா அழுதேன்?"

"ஐயோ ஐயோ அதில்லேம்மா"

"பின்னே எது?"

"அது வந்து... நீ வந்து... இல்லே இல்லே.... நான் வந்து.... வந்து"

"இப்படி நீங்களும் நானும் வந்து வந்து போயிண்டிருந்தால் இங்கே இருக்கிற நாற்காலிக்கெல்லாம் யார் யாரோ வந்துடுவா. சொல்ல வந்ததைச் சுருக்கச் சொல்லுங்களேன் கிருஷ்... ப்ளீஸ்."

"இல்லேம்மா நீங்க தனியா இருக்கேளே... வந்து நான் உங்களைக் கல்யாணம்... இல்லே இல்லே நீங்க என்னைக் கல்யாணம்..."

"யார் சொன்னது நான் தனியா இருக்கேன்னு? எங்க தோட்டத்துப் புளிய மரத்துல ஒரு பிரும்மராக்ஷஸ் இருக்கு."

இப்ப அவ கண்ணில கூத்தாடறது நிச்சயமாக் குறும்புதான். என் நெஞ்சில் டன் டன்னு தைரியம் குவிஞ்சுது.

"பிரும்மராக்ஷஸ் ஒங்கிட்ட பாசமா இருக்காது செக்காமி. இது நான் மனசுக்குள்ளே சிவகாமிக்கு வச்ச செல்லப் பேர். இது வரை இப்படிக் கூப்பிட பயமாயிருந்தது. எனக்கு ஒம்மேல கொள்ளைப் பாசம். அதனால் தயவு செஞ்சு என்னைக் கல்யாணம் பண்ணிண்டு, எனக்கு மலேவியா, என் இல்லத்தரசியா இருப்பியாம்மா?"

விரலைச் சொடுக்கிய சிவகாமி, மேஜை மேல் தாளம் போட்டவாறு,

"ஐயாம் ஃபீஃப்டி யூ ஆர் ஸிக்ஸ்ட்டி" என்று மெல்லிய வீணைக் குரலில் பாட, மேஜையின் அதிர்வில் சர்க்கரைக் கிண்ணம் சன்னமாகச் சர்க்கரை தூவ, 'கிலுங்கிலுங்'குன்னு காப்பிக் கோப்பைகள் நடனமாடுவதைக் கண்டோ அல்லது சிறிது முன்னால் நடந்ததையெல்லாம் கேட்டுட்டதாலயோ அங்கே வந்த ஸர்வர் ஆனந்தமாக, வாய் விட்டுச் சிரித்தார்.

இன்னிக்கு எனக்கும் 'செக்காமி' என்று நான் செல்லமா அழைக்கும் என் சிவகாமிக்கும் கல்யாணம். இதோ புறப்பட்டுக் கொண்டே இருக்கேன் ரெஜிஸ்தரார் ஆபீசுக்கு!

# பொன்னியின் செல்வன்




தமிழகத்தின் சரித்திரத்தில் இராஜ ராஜ சோழர் என்று புகழ்பெற்ற அருள் மொழி வர்மர் இளவரசராயிருந்த சமயத்தில் இலங்கையில் சோழ நாட்டுப் படைகளுக்குத் தலைமை வகித்துப் போர் நடத்திக் கொண்டிருந்தார். அவருடைய தந்தை சுந்தர சோழ சக்கரவர்த்தி நோய் வாய்ப்பட்டுத் தஞ்சையில் படுத்த படுக்கையில் இருந்தார். சுந்தர சோழரின் மூத்த குமாரரும் பட்டத்து இளவரசருமான ஆதித்த கரிகாலர் காஞ்சியில் தங்கியிருந்தார். இரண்டு இராஜ குமாரர்களுக்கும் நடுவில் பிறந்தவரான குந்தவை பழையாறை நகரில் செம்பியன் மாதேவியின் ஆதரவில் இருந்து வந்தார்.

சோழ சாம்ராஜ்யத்துப் பெருந்தரத்து அதிகாரிகளிலே மிக முக்கியமானவர்கள் அண்ணன் தம்பிகளான பழுவேட்டரையர்கள். பெரிய பழுவேட்டரையர் ஏறக்குறையச் சோழ நாட்டின் சர்வாதிகாரி பதவியை வகித்து வந்தார். சம்ராஜ்யத்தின் தன பொக்கிஷமும் தானிய பண்டக சாலையும் அவருடைய வசத்தில் இருந்து வந்தன. சின்னப் பழுவேட்டரையர் தஞ்சைக் கோட்டையின் தளபதி பதவியை வகித்து வந்தார். சுந்தர சோழ சக்கரவர்த்தி பெரிதும் இந்த இரு சகோதரர்களின் ஆதிக்கத்தின் கீழ் இருந்தார்.



பெரிய பழுவேட்டரையர் முதுமைப் பிராயத்தில் நந்தினி என்னும் அழகிய பெண்ணை மணந்தார். நந்தினியும் குந்தவையும் ஒருவரையொருவர் துவேஷித்தனர். ஒருவரையொருவர் அவமானப்படுத்தவும் பழிவாங்கவும் சமயம் பார்த்துக் கொண்டிருந்தார்கள்.

நந்தினியின் தூண்டுதல் காரணமாகப் பெரிய பழுவேட்டரையர் ஒரு பெரிய சதியில் ஈடுபட்டார். சுந்தர சோழரின் இரு புதல்வர்களுக்கும் பட்டமில்லாமல் செய்துவிட்டு, அவருடைய பெரிய தந்தை மகன் மதுராந்தகனைச் சிம்மாசனத்தில் ஏற்றத் தீர்மானித்தார். இதற்குக் கடம்பூர் சம்புவரையர் முதலிய சிற்றரசர்களின் பூரண சம்மதத்தையும் பெற்ருர். காஞ்சியிலிருந்த ஆதித்த கரிகாலர் தம் தந்தையைத் தஞ்சையிலிருந்து காஞ்சிக்கு வரும்படி செய்வதற்காகக் காஞ்சியில் ஒரு பொன்மாளிகை கட்டினுர். அதைத வந்து பார்க்கும்படி தந்தையை வேண்டிக் கொண்டு தஞ்சைக்கு ஓலை கொடுத்து அனுப்பினுர். ஓலையை எடுத்துச் சென்றவன் வந்தியத்தேவன் என்னும் பழைய வாணர் குலத்து வீரன். அவன் வழியில் சம்புவரையர் மாளிகையில் தங்கியிருந்த போது மேற்படி சதியாலோசனையைப் பற்றித் தெரிந்து கொண்

டான். குந்தவை சென்று சுந்தர சோழரிடம் ஓலையைக் கொடுத்த பிறகு பழையாறைக்குப் போய்க் குந்தவை தேவியைக் கண்டான். அவளிடம் தான் அறிந்ததையெல்லாம் சொன்னான். குந்தவை அவனை இலங்கை சென்று தன் அருமைச் சகோதரனை அழைத்து வரும்படி ஏவினாள். வழியில் பல அபாயங்களுக்குத் தப்பி வந்தியத்தேவன் இலங்கை வந்து அருள்மொழி வர்மரிடம் குந்தவையின் ஓலையைக் கொடுத்தான்.




அதே சமயத்தில் இளவரசரைத் தேடிக் கொண்டு இன்னும் சிலரும் வந்து சேர்ந்தார்கள். முதன் மந்திரி அநிருத்தர் ஆழ்வார்க்கடியானிடம் இளவரசர் இலங்கையிலேயே இருத்தல் நலம் என்று சொல்லி அனுப்பினார். தம்பியைக் கையோடு காஞ்சிக்கு அழைத்து வரும்படி ஆதித்த கரிகாலர் பார்த்திபேந்திரனை அனுப்பியிருந்தார். சோழ குலத்தை அடியோடு கருவறுக்கச் சபதம் செய்திருந்த கொலைகாரர் கூட்டத்தைச் சேர்ந்த இருவரும் இலங்கைக்கு வந்திருந்தார்கள்.

அருள்மொழி வர்மர் இலங்கைக்கு வந்த புதிதில் அவர் தண்டு இறங்கியிருந்த இடத்தை ஊமை ஸ்திரீ ஒருத்தி சுற்றிச் சுற்றி வந்து ஓலமிட்டாள். இளவரசர் அவளருகில் சென்று பார்த்தபோது குழந்தைப் பிராயத்தில் தன்னைக் காவேரி நதியில் மூழ்கிப் போய் விடாமல் காப்பாற்றியவள் அவள் தான் என்று அறிந்தார். இளவரசர் தங்கியிருந்த இடம் கொடிய நடுக்கு சுரம் பரவியிருந்த இடம் என்பதை அம்மாதரசி உணர்த்தி அங்கிருந்து போய் விடும்படி எச்சரித்தாள்.

அநுராதபுரத்தின் வீதிகளில் அருள்மொழி வர்மரும் வந்தியத் தேவனும் ஆழ்வார்க்கடியானும் மகாபோதி விஹாரத்திலிருந்து திரும்பி வந்து கொண்டிருந்தபோது அவர்கள் மீது ஒரு பழைய மாளிகையின் முகப்பு இடிந்து விழுவதற்கிருந்தது. அந்தச் சமயத்தில் மேற்கூறிய மூதாட்டி தோன்றிக் கைதட்டி அழைத்து அவர்களைக் காப்பாற்றினாள்.

மூவரும் இளவரசர் வழக்கமாகத் தங்கிய விடுதிக்குச் சென்று படுத்துக் கொண்டார்கள். ஆனால் ஒருவருக்கும் தூக்கம் வரவில்லை. இளவரசர் இலங்கையில் அம்மூதாட்டியைத் தாம் சந்தித்த வரலாற்றை அவர்களுக்குக் கூறினார்.



வந்தியத்தேவன் இலங்கைக்குவந்துசேரப் பேருதவியாக இருந்த ஓடக்காரப் பெண் பூங்குழலி மூலமாகச் சேநாதிபதிக்கு ஓர் அதிர்ச்சி தரும் செய்தி கிடைத்தது. அச்செய்தியை அப்பெண்ணைக் கொண்டே சொல்ல வைக்க முயற்சி செய்தபோது அவள் பயந்து ஓடிக் காட்டுக்குள் மறைந்துவிட்டாள். அவளைப் பின் தொடர்ந்து வந்தியத்தேவன் ஓடினான். அவளை இளவரசரிடம் வந்து பேசும்படி வற்புறுத்தினான். அச்சமயத்தில் அவர்கள் பேசிக் கொண்டிருந்த இடத்துக்கு அருகே புதர் மறைவில் அசைவு ஏற்பட்டது. வந்தியத்தேவன் பூங்குழலியின் கத்தியைப் பிடுங்கி அப்புதரை நோக்கி வீசினான். கத்தி விழுந்த இடத்திலிருந்து ஓர் அலறல் வெளிப்பட்டது. இளவரசரை அபாயம் சூழ்ந்திருப்பதை அறிந்த பூங்குழலி வந்தியத்தேவனுடன் அவரைக்காணச் சென்றாள். அவர் "சமுத்திர குமாரி, என்னை உனக்கு நினைவிருக்கிறதா?" என்று கேட்டார்.

# பொன்னியின் செல்வன்

அமரர் கல்கி

## அத்தியாயம் 43
## "நான் குற்றவாளி!"

"சமுத்திர குமாரி! உனக்கு என்னை நினைவிருக்கிறதா?.'

பொன்னியின் செல்வ! இது என்ன கேள்வி! யாரைப் பார்த்து 'நினைவிருக்கிறதா?' என்று கேட்கிறீர்கள்? ஆயிரமாயிரமாயிரம் ஆண்டுகள் கலந்து பழகிய பின்னர் 'நினைவிருக்கிறதா?' என்று கேட்பது தகுமா? அல்லது தங்களுக்குத்தான் நினைவில்லாமல் போய் விட்டதா? எத்தனை நாள், எத்தனை யுகம் என்னுடைய சின்னஞ்சிறு படகில் தாங்கள் ஏறி வந்திருக்கிறீர்கள்? கடலில், முடிவில்லாத கடலில், எல்லையில்லாத வெள்ளை அலைகளுக்கிடையில், நாம் இருவரும் என் சிறு படகில் ஏறிக் கொண்டு உல்லாச யாத்திரை செய்ததையெல்லாம் மறந்து விட்டீர்களா? திடீரென்று நாலாபுறமும் கரிய இருள் சூழ்ந்து வர, நாம் இருவரும் ஒருவருக்கொருவர் துணையாக, ஒருவர் கரத்தை ஒருவர் பற்றிக் கொண்டு நெடுங்காலம் நின்றதை மறந்து விட்டீர்களா? பயங்கரமான புயற்காற்று அடித்தபோது, மலைமலையாக எழுந்த பேரலைகள் நம்முடைய படகைத் தாக்கி, ஒருகணம் நம்மை வான மண்டலத்துக்கு உயர்த்தி, மறுகணம் பாதாளத்தில் அமுழ்த்தி, இப்படியெல்லாம் அல்லோலகல்லோலம் செய்த நாட்களில், நாம் இருவரும் ஒருவருக்கொருவர் ஆதாரமாக நின்று அக்கொடும் புயலை எதிர்த்து வென்றதை மறந்து விட்டீர்களா? ஒருசமயம் நாம் வான வெளியில் பறந்து பறந்து பறந்து சென்று கொண்டிருந்தோமே, அதை மறந்து விட்டீர்களா? விண்மீன்களைத் தாங்கள் தாவிப் பிடித்து என் தலையில் ஆபரணங்களாகச் சூட்டினீர்களே, அதுவும் மறந்து விட்டதா? பூரண சந்திரனை என் முகத்தருகிலே கொண்டு வந்து, 'இதோ இந்த வெள்ளித் தகட்டில் உன் பொன் முகத்தைப் பார்!' என்று சொல்லிக் காட்டினீர்களே, அதையும் மறந்து விட்டீர்களா? மற்றொரு சமயம் ஆழ் கடலிலே தாங்கள் மூழ்கினீர்கள்; நான் உள்ளம் பதைபதைத்து நின்றேன்; சற்று நேரத்

துக்கெல்லாம் இரண்டு கைகளிலும் முத்துக்களையும் பவழங்களையும் எடுத்துக் கொண்டு வெளிவந்து அவற்றை மாலையாகக் கோத்து என் கழுத்தில் சூட்டினீர்கள்! அதைத் தாங்கள் மறந்து விட்டாலும் நான் மறக்க முடியுமா? அரசே! உச்சி வேளைகளில், நீல நிற நீர் ததும்பிய ஏரிக்கரைகளில், பூங்கொத்துக்களின் பாரம் தாங்காமல் மரக் கிளைகள் வளைந்து வந்து அலங்காரப் பந்தல் போட்ட இடங்களில், பசும்புல் பாய்களில், நாம் ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்த வண்ணம் எத்தனை எத்தனை எத்தனையோ நாட்கள் கழித்தோமே, அதையெல்லாம் மறந்துவிட முடியுமா? அந்த நேரங்களில் மரக்கிளைகளில் நூறு ஜோடிக் குயில்கள் உட்கார்ந்து கீதமிசைத்ததையும், ஆயிரம் பதினாயிரம் வண்டுகள் சுற்றிச் சுற்றி வந்து ரீங்காரம் செய்ததையும், கோடி கோடி பட்டுப் பூச்சிகள் பல வர்ணச் சிறகுகளை அடித்துக் கொண்டு ஆனந்த நடனம் ஆடியதையும் நான் என்றேனும் மறக்க முடியுமா? எத்தனை ஜன்மங்களிலும் மறக்க முடியுமா? என்னைப் பார்த்து 'நினைவிருக்கிறதா?' என்று கேட்டீர்களே, அப்படிக் கேட்கலாமா? நினைவிருக்கிறது, ஐயா, நன்றாக நினைவிருக்கிறது!....

இவ்வாறெல்லாம் சொல்ல வேண்டும் என்று அந்தப் பேதைப் பெண்ணின் உள்ளம் துள்ளித் துடித்தது.

ஆனால் அவளுடைய பவள இதழ்களோ "நினைவிருக்கிறது!" என்ற இரு சொற்களை மட்டுமே முணுமுணுத்தன.

"ஆகா! சமுத்திர குமாரி! நீ வாய் திறந்து பேசுகிறாயே! இந்த அதிசயமான இலங்கைத் தீவிலே உள்ள எத்தனையோ மணிமாட மண்டபங்களின் தூண்களில் அழகிய தேவ கன்னிகைகளின் சிலைகளை அமைத்திருக்கிறார்கள்! ஒரு வேளை அத்தகைய சிலை வடிவமோ நீ என்று நினைத்தேன். நல்ல வேளையாக நீ வாய் திறந்து பேசுகிறாய். இன்னும் சில வார்த்தைகள் சொல்! உன் இனிய குரலைக் கேட்க எனக்கு எவ்வளவோ ஆசையாயிருக்கிறது. நம் சேநாதிபதியிடம் நீ சில விஷயங்களைச் சொன்னாயாம். தொண்டைமான் நதியில் இரண்டு பெரிய மரக்கலங்கள் வந்து மறைவான இடத்தில் ஒதுங்கியிருப்பதாயும் அவை நிறையப் போர் வீரர்கள் வந்திருப்பதாயும் சொன்னாயாம். அது உண்மைதானே, சமுத்திர குமாரி? அந்தக் கப்பல்களை உன் கண்களினால் நீயே பார்த்தாயா?" என்று இளவரசர் கேட்டார்.

"ஆம், ஐயா, என் கண்களினால் பார்த்தேன்!" என்றாள் பூங்குழலி.

"ஆகா! இப்போது கொஞ்சம் உன் குரலைக் கேட்க முடிகிறது. என் செவிகள் இன்பமடைகின்றன. நல்லது; மரக்கலங்களைப் பார்த்ததும் நீ உன் படகை ஒரு குறுகிய கால்வாயில் விட்டுக் கொண்டு போனாய். கப்பல்கள் போகும் வரையிலும் காத்திருப்பதற்காக அடர்ந்த காட்டினுள் புகுந்து மறைவான இடத்தில் படுத்துக் கொண்டிருந்தாய். அச் சமயம் கப்பல்களிலிருந்து இறங்கிய வீரர்கள் சிலர் அங்கே வந்தார்கள். நீ படுத்திருந்த இடத்துக்குப் பக்கத்தில் அவர்கள் நின்று பேசிக் கொண்டார்கள். அவர்கள் பேச்சை ஒட்டுக் கேட்க வேண்டும் என்று நீ விரும்பவில்லை. உன் விருப்பமில்லாமலே அவர்கள் பேச்சு உன் காதில் விழுந்தது. நீ கேட்கும்படி நேர்ந்தது. இவையெல்லாம் நம் சேநாதிபதியிடம் நீ கூறியவைதானே?"

"நடந்ததை நடந்தபடியே கூறினேன்."

"அவர்களுடைய பேச்சைக் கேட்டதும் அதைப் பற்றி உடனே சேநாதிபதியிடம் எச்சரிக்கை செய்ய வேண்டும் என்று உனக்குத் தோன்றியது. வீரர்கள் அப்பால் போன உடனே நீ புறப்பட்டாய்; சேநாதிபதி இருக்குமிடத்தைத் தேடிக் கொண்டு விரைந்து வந்தாய்! எப்படி வந்தாய், சமுத்திர குமாரி?"

"பாதி வழி படகில் வந்தேன்; பிறகு காட்டு வழியில் நடந்து வந்தேன்."

"எங்கே போகும் உத்தேசத்துடன் கிளம்பினாய், அம்மா?"

"சேநாதிபதி மாதோட்ட நகரில் இருப்பார் என்று எண்ணி அங்கே போகும் உத்தேசத்துடன் வந்தேன். வழியில் மகிந்தலையில் இருப்பதாக

அறிந்தேன். சேநாதிபதியைப் பார்த்துச் சொல்வதற்குள் போதும் போதும் என்று ஆகிவிட்டது. எத்தனை பேர் குறுக்கே நின்று தடுப்பது?'' என்று சொல்லிப் பூங்குழலி சேநாதிபதி நின்ற பக்கம் நோக்கினாள். அவளுடைய பார்வையில் கோடை காலத்து இடி முழக்கத்துக்கு முன்னால் தோன்றும் மின்வெட்டு ஜொலித்தது.

''சேநாதிபதியைப் பார்ப்பது என்ன இலேசான காரியமா? இதோ நிற்கும் என் சிநேகிதர் உன்னைப் போலவே சேநாதிபதியைப் பார்க்க முயன்று அடைந்த கஷ்டத்தைக் கேட்டால் நீ ஆச்சரியப்பட்டுப் போவாய். தடைகளைப் பொருட்படுத்தாமல் நீ பிடிவாதம் பிடித்துச் சேநாதிபதியைப் பார்த்துச் சொன்னதே நல்லதாய்ப் போயிற்று. பூங்குழலி! சேநாதிபதியிடம் கூறியதை என்னிடமும் ஒரு தடவை கூறுவாயா? மரத்தின் மறைவிலிருந்து நீ கேட்டாயே, அப்போது அந்த வீரர்கள் எந்த விஷயத்தைப் பற்றிப் பேசினார்கள்?''

''அரசே! அதைச் சொல்வதற்கு என் நா கூசுகிறது.''

''பெரிய மனசு பண்ணி எனக்காக இன்னொரு தடவை சொல்!''

''தங்களைச் சிறைப்படுத்திக் கொண்டு போவதற்காக அவர்கள் வந்திருப்பதாகப் பேசிக் கொண்டார்கள்.''

''யாருடைய கட்டளையின் பேரில் அவ்விதம் வந்தார்கள் என்பது பற்றி ஏதாவது பேசிக் கொண்டார்களா?''

''அதை நான் நம்பவில்லை, ஐயா! பழுவேட்டரையர்களின் சூழ்ச்சியாகத்தான் இருக்க வேண்டும் என்று நினைத்தேன்.''

''உன்னுடைய கருத்தைப் பிறகு தெரிவிக்கலாம். அவர்கள் பேசிக் கொண்டதை மட்டும் சொல், சமுத்திர குமாரி!''

''சக்கரவர்த்தியின் கட்டளை என்று பேசிக் கொண்டார்கள்.''

''ரொம்ப நல்லது; அதற்குக் காரணம் ஏதாவது சொல்லிக் கொண்டார்களா?''

''சொல்லிக் கொண்டார்கள். தாங்கள் இந்த நாட்டிலுள்ள புத்த குருக்களுடன் சேர்ந்து கொண்டு இலங்கை ராஜ்யத்துக்கு மன்னராக முடி சூட்டிக் கொள்ளச் சூழ்ச்சி செய்தீர்களாம்... இவ்விதம் சொன்ன அந்தப் பாவிகளை அங்கேயே கொன்று விட வேண்டும் என்று எனக்குக் கோபமாக வந்தது...''

''நல்ல காரியம் செய்ய எத்தனித்தாய்! சக்கரவர்த்தியின் தூதர்களை எந்தவிதத்திலும் தடை செய்யக் கூடாது என்று உனக்குத் தெரியாதா...? நல்லது; இன்னும் அவர்கள் முக்கியமான விஷயம் ஏதேனும் சொன்னதாக உனக்கு ஞாபகம் இருக்கிறதா?''

''சேநாதிபதிக்கு அவர்கள் எதற்காக வந்திருக்கிறார்கள் என்கிற விஷயம் தெரியக்கூடாது என்றும், தெரிந்தால் தங்களைத் தப்புவிக்க அவர் பிரயத்தனம் செய்யலாம் என்றும் சொன்னார்கள். ஆகையால் தாங்கள் இருக்குமிடம் தெரிந்து கொண்டு நேரில் தங்களிடம் கட்டளையைக் கொடுத்துக் கையோடு அழைத்துப் போக வேண்டும் என்றும் சொன்னார்கள்...''

''ஆகையால் நீ உடனே சேநாதிபதியைத் தேடிக் கொண்டு புறப்பட்டாயாக்கும். எனக்குப் பெரிய உதவி செய்தாய், சமுத்திர குமாரி! சற்று அப்பால் இரு. இவர்களிடம் ஒரு முக்கியமான விஷயத்தைப் பற்றி நான் கலந்து ஆலோசிக்க வேண்டியிருக்கிறது. ஆனால் முன் மாதிரி ரொம்ப தூரம் ஓடிப் போய் விடாதே. மறுபடியும் உன்னைப் பிடித்துக் கொண்டு வருவதற்கு வந்தியத்தேவரை அனுப்பும்படி செய்து விடாதே!''

சமுத்திர குமாரி சற்று நகர்ந்து ஒரு தூணின் அருகில் நின்று கொண்டாள். இளவரசரின் முகத்தைப் பார்க்கக் கூடிய இடத்திலேதான் நின்றாள்.

தேன் குடத்தில் முழுகிய இரு வண்டுகள் மூச்சுத் திணறிக் கொண்டிருந்தன. மெதுவாகச் சமாளித்துக் கரைக்கு வந்த பிறகு தேனைச் சுவை பார்த்துக் களிக்கத் தொடங்கின. பூங்குழலியின் கண்களும் இப்போது அத்தகைய சௌகரியமான நிலையில் இருந்தன. இளவரசரின் முக சௌந்தரியமாகிய தேனை அவை பருகித் திளைத்தன. அவளுடைய உள்ளமோ நெஞ்சுக்குள் கட்டுப்பட்டு நிற்கமாட்டேன் என்று பிடிவாதம் பிடித்துக்

கொண்டிருந்தது. நெஞ்சை வெடித்துக் கொண்டு வெளியேறி வானவெளியெங்கும் பொங்கி நிறைந்துவிட வேண்டும் என்று தவித்துக் கொண்டிருந்தது.



ளவரசர் சேநாதிபதி பூதி விக்கிரம கேசரியைப் பார்த்து, "ஐயா! பரம்பரையாக எங்கள் குடும்பத்துக்குச் சிநேகிதமான குலத்தின் தலைவர் தாங்கள்; என் தந்தையின் உற்ற நண்பர்; தங்களை நான் என் தந்தைக்கு இணையாகவே மதித்து வந்திருக்கிறேன். தாங்களும் என்னைத் தங்கள் சொந்தப் புதல்வனைப்போல் கருதிப் பாராட்டி வந்திருக்கிறீர்கள். ஆகையால் இச்சமயம் என்னுடைய கடமையைச் செய்வதற்குத் தாங்கள் உதவி செய்ய வேண்டும். அதற்குக் குறுக்கே நிற்கக் கூடாது!'' என்றார்.

சேநாதிபதி மறுமொழி சொல்வதற்குள் பார்த்திபேந்திரனைத் திரும்பிப் பார்த்து ''ஐயா! தங்களையும் கேட்டுக் கொள்கிறேன். தாங்கள் என் அருமைத் தமையனாரின் உற்ற நண்பர். என் தமையனாரின் வாக்கைத் தெய்வத்தின் வாக்காக மதித்து நான் போற்றுகிறவன். ஆகையால் தங்களுடைய வார்த்தையையும் மதித்துப் போற்றக் கடமைப்பட்டவன். தங்களைப் பெரிதும் வேண்டிக் கொள்கிறேன். என் கடமையை நான் நிறைவேற்றுவதற்குத் தடை எதுவும் சொல்லக் கூடாது!'' என்றார்.

சேநாதிபதியும் பார்த்திபேந்திரனும் ஒருவரையொருவர் பார்த்துக் கொண்டார்கள். அந்தப் பார்வையின் மூலம் ஒருவருடைய பயத்தை இன்னொருவருக்குத் தெரிவித்துக் கொண்டார்கள்.

சேநாதிபதி இளவரசரைப் பார்த்து, ''இளவரசே! தாங்கள் கூறுவது ஒன்றும் எனக்கு விளங்கவில்லை. வாழ்நாளெல்லாம் நான் போர்க்களத்திலே கழித்தவன். மூடுமந்திரமாகப் பேசினால் தெரிந்து கொள்ள இயலாதவன். தங்களுடைய கடமையைச் செய்யப் போவதாகச் சொல்லுகிறீர்கள். அப்படியென்றால் என்ன? எந்தக் கடமையை என்ன மாதிரி செய்யப் போவதாக உத்தேசித்திருக்கிறீர்கள்?'' என்று கேட்டார்.

''இச்சமயம் என்னுடைய கடமை ஒன்றே ஒன்றுதான். என் தந்தையின் கட்டளையை நிறைவேற்றி வைக்க வேண்டியதுதான். என்னைச் சிறைப் படுத்திக் கொண்டு வரும்படியான கட்டளையுடன் என் தந்தை ஆட்களை அனுப்பி வைத்திருக்கிறார். என்னை அவர்கள் தேடி அலையும்படியாக ஏன் வைத்துக் கொள்ள வேண்டும்? நானே அவர்கள் இருக்குமிடம் சென்று என்னை ஒப்புக் கொடுத்து விடுவேன். அதுவே இப்போது நான் செய்ய வேண்டிய கடமை....''

''முடியவே முடியாத காரியம். என் உடம்பில் உயிருள்ள வரையில் அதை நான் அனுமதிக்க மாட்டேன். தடுத்தே தீருவேன்!'' என்றான் பார்த்திபேந்திரன்.

சேநாதிபதி அவனைப் பார்த்து, ''பதற வேண்டாம்; பொறுங்கள்!'' என்றார். பின்னர் இளவரசரை நோக்கிக் கூறினார்:—

''ஐயா! தங்களுடைய கடமையைப் பற்றிச் சொன்னீர்கள். எனக்கும் ஒரு கடமை இருக்கிறது. அருள் புரிந்து அதைக் கேட்க வேண்டும். கொடும்பாளூர் வேளிர் பெருங்குடியில் இன்று உயிரோடிருக்கும் ஆண்மகன் நான் ஒருவன்தான். மற்றவர்கள் அனைவரும் சோழ சாம்ராஜ்யத்தின் சேவையில் இறந்து போனார்கள். அநேகமாக எல்லாரும் போர்க்களத்தில் மடிந்தார்கள். நானும் ஒருநாள் அவ்விதம் இறந்து போவேன். யார் கண்டது? ஆகையால் என் வார்த்தையைக் கொஞ்சம் பொறுமையுடன் கேட்க வேண்டும். அரண்மனை மாடங்களில் அருமையாக வளர்க்கப்பட்டு வந்த தங்களைச் சென்ற ஆண்டில் தென் திசைப் படைகளின் மாதண்ட நாயகராகச் சக்கரவர்த்தி நியமித்தார். அப்போது என்னைத் தனியாக அழைத்துச் சொன்னார்: 'இளவரசன் என்னை விட்டுப் பிரிவது என் உயிரே உடலிலிருந்து பிரிவது போலிருக்கிறது. ஆயினும் என்னுடைய ஆசைக்காக அவனை நான் அரண்மனைக்குள்ளேயே வைத்து வளர்க்கக் கூடாது. அவன் வெளியேறிப் போக வேண்டியதுதான்; அங்

னைப் போல் வீரன் என்று பெயர் எடுக்க வேண்டியதுதான். ஆனால் அவன் உயிருக்கு ஏதாவது ஆபத்து வந்தால் அதே கணத்தில் என் உயிரும் போய் விடும். அவனுக்கு எவ்வித அபாயமும் நேராமல் பாதுகாக்க வேண்டியது உன் பொறுப்பு!'... இவ்வாறு சக்கரவர்த்தி எனக்குக் கட்டளையிட்டார். சென்ற ஆண்டில் அவ்வாறு கூறிய சக்கரவர்த்தி இப்போது தங்களைச் சிறைப்படுத்திக் கொண்டு வரும்படி கட்டளையிடுவாரா? அவ்வாறு கட்டளையிடும்படியாகத் தாங்கள் என்ன செய்து விட்டீர்கள்? இலங்கைச் சிம்மாதனத்தைக் கைப் பற்றுவதற்குத் தாங்கள் சூழ்ச்சி செய்ததாகச் சொல்வது எவ்வளவு அபத்தம்? இந்த அபவாதத்தை யாராவது நம்ப முடியுமா?.....''

கொடும்பாளூர்ப் பெரிய வேளார் கூறி வந்ததை இதுவரை பொறுமையுடன் கேட்டு வந்த இளவரசர் இப்போது குறுக்கிட்டார்.

''வேறு யாராவது நம்ப முடியாதோ, என்னமோ? ஆனால் என்னால் நம்ப முடியும்!'' என்றார்.

''என்ன சொல்கிறீர்கள், இளவரசே!''

''இலங்கைச் சிம்மாசனத்தைக் கைப்பற்ற நான் சூழ்ச்சி செய்தது உண்மைதான் என்று சொல்கிறேன்.''

வந்தியத் தேவன் இப்போது முன்னால் வந்து ''இது என்ன ஐயா! சற்று முன்பு வரையில் சத்தியம்—தர்மம் என்று சொல்லி வந்தீர்கள். இப்போது இப்படிப் பெரும் பொய் சொல்கிறீர்களே!... சேநாதிபதி! இவர் வார்த்தையை நீங்கள் நம்ப வேண்டாம். நேற்றிரவு புத்த குருக்களின் மகாசபையார் இவருக்கு இலங்கைச் சிம்மாதனத்தையும் கிரீடத்தையும் அளித்தார்கள். இவர் வேண்டாம் என்று மறுதளித்தார். இதற்கு நானும் இதோ நிற்கும் இந்த வைஷ்ணவனும் சாட்சி!'' என்றான்.

பொன்னியின் செல்வர் புன்னகை புரிந்து, ''வந்தியத்தேவரே! ஒரு கேள்வி! சூழ்ச்சி செய்கிறவர்கள் சாட்சி வைத்துக் கொண்டு சூழ்ச்சி செய்வார்களா? நீங்கள் இருவரும் பக்கத்தில் இருந்ததினாலேயே நான் இலங்கைச் சிம்மாசனத்தையும் கிரீடத்தையும் மறுதளித்திருக்கலாம் அல்லவா!'' என்றார்.

வந்தியத்தேவன் அசந்து போனான்! இதற்கு எதிராக அவனால் ஒன்றும் சொல்ல முடியவில்லை.

இளவரசர் மேலும் கூறினார்: ''வாணர்குல வீரரே! உமக்குச் சந்தேகம் இருந்தால் அதோ நிற்கும் வைஷ்ணவரைக் கேட்கலாம். முதன் மந்திரி அநிருத்தப் பிரம்மராயர் அவரிடம் என்ன சொல்லி அனுப்பினார் என்று கேட்டு அறிந்து கொள்ளலாம். 'புத்த குருமார்கள் தங்களுக்கு இலங்கைச் சிம்மாதனம் அளிக்க முன் வருவார்கள். சாட்சியம் வைத்துக் கொண்டு அதை மறுதளிக்கவும்' என்று சொல்லி அனுப்பினாரா, இல்லையா என்று விசாரித்துத் தெரிந்து கொள்ளலாம்!''

இதைக் கேட்டு அங்கிருந்த எல்லாருமே திகைத்துப் போய் நின்றார்கள்.



ளவரசர் சேநாதிபதியைப் பார்த்துச் சொன்னார்:— ''ஐயா! இதைக் கேளுங்கள். இந்த இலங்கையைக் கவர்ந்து ஆள வேண்டும் என்ற பேராசை என் மனத்தில் இருந்தது உண்மை. இந்தப் பேராசையை எனக்கு உண்டு பண்ணியவர் என் தமக்கையார். 'தம்பி! நீ நாடு ஆளப் பிறந்தவன். உன் கையில் சங்கு சக்கர ரேகை இருக்கிறது. இங்கே உனக்கு இடம் இல்லை. ஆகையால் இலங்கைக்குப் போ! இலங்கைச் சிம்மாதனத்தைக் கைப்பற்றிக் கொள்!' என்று இப்படியெல்லாம் இளைய பிராட்டி அடிக்கடி சொல்லி என் மனத்தில் ஆசையை வளர்த்து விட்டார். ஆகையால் நான் குற்றவாளி தான். சக்கரவர்த்தி என்னைச் சிறைப்படுத்திக் கொண்டு வரும்படி கட்டளையிட்டதற்குக் காரணம் இருக்கிறது...''

''கொஞ்சம் பொறுங்கள், இள



வரசே! அப்படித் தங்கள் மனத்தில் எண்ணம் உதித்திருந்தால் அது இந்த இலங்கைத் தீவின் பாக்கியம். அதற்குப் பொறுப்பாளியும் தாங்கள் அல்ல; தங்கள் தமக்கையார் இளைய பிராட்டியும் அல்ல. சுந்தர சோழ சக்கரவர்த்திதான் அதற்குப் பொறுப்பாளி. அவரே என்னிடம் பல முறை சொல்லியிருக்கிறார். தங்களை இலங்கைச் சிம்மாதனத்தில் ஏற்றி வைத்துப் பார்க்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறார். குந்தவை தேவியிடம் இதைப் பற்றி முதன் முதலில் கூறியவரும் சக்கரவர்த்திதான். தங்கள் தந்தையின் விருப்பத்தையே தமக்கையார் தங்களிடம் தெரியப்படுத்தியிருக்கிறார். ஆகையால் தாங்கள் குற்றவாளி அல்ல......"

"சேநாதிபதி! அப்படியானால் என் தந்தையிடம் போவதற்கு நான் ஏன் தயங்க வேண்டும்? அவரிடம் நடந்தது நடந்தபடி சொல்கிறேன். இதோ இருக்கும் இந்த இரண்டு பேரும் எனக்காகச் சாட்சி சொல்லட்டும். பிறகு சக்கரவர்த்தி என்ன கட்டளை இடுகிறாரோ, அதன்படி நடந்து கொள்வது என் கடமை......"

பார்த்திபேந்திரன் இப்போது அனல் கக்கும் குரலில் கூறினான்:— "சேநாதிபதி! ஏதேதோ வெறும் பேச்சுப் பேசிக் கொண்டிருக்கிறோம். இனியும் மூடி மறைப்பதில் பயன் ஒன்றுமில்லை. இளவரசரிடம் உண்மையைச் சொல்லியே தீரவேண்டும். தாங்கள் சொல்கிறீர்களா அல்லது நான் சொல்லட்டுமா!"

"நானே சொல்கிறேன்; பொறுங்கள்!" என்றார் சேநாதிபதி. அக்கம்பக்கம் பார்த்து விட்டுக்கூறினார்:—"இளவரசே! தங்களுடைய களங்கமற்ற உள்ளத்தை மாசுபடுத்த வேண்டாம் என்று நான் எண்ணியது பயன்படவில்லை. ஒரு விரஸமான விஷயத்தைப் பற்றித் தங்களுக்குச் சொல்ல வேண்டியிருக்கிறது. பெரியபழுவேட்டரையர் இந்த முதிய பிராயத்தில் நந்தினி என்னும் பெண்ணை மணம் புரிந்து கொண்டிருப்பது தங்களுக்குத் தெரிந்த விஷயமே. அவள் ஒரு சூனியக்காரி. பயங்கரமான மாய மந்திர வித்தைகள் அவளுக்குத் தெரிந்திருக்கின்றன. அவற்றின் உதவியால் பெரிய பழுவேட்டரையரை அவள் தன் காலடியில் போட்டு வைத்துக் கொண்டிருக்கிறாள். அவள் காலால் இட்ட பணியை இவர் தலையில் ஏந்தி நிறைவேற்றி வைக்கிறார். பழங்குடியில் பிறந்து பல வீரச் செயல்கள் புரிந்த அந்தப் பெரியவருக்கு விதிவசத்தால் இந்த மாதிரி துர்க்கதி சம்பவித்து விட்டது......"




"சேநாதிபதி! இது நான் கேள்விப்படாதது அல்லவே? சோழ தேசத்தில் நாடு நகரமெல்லாம் பேசிக் கொள்ளும் விஷயந்தானே?" என்றார் இளவரசர்.

"அந்த மந்திரக்காரி நந்தினியின் சக்தி இது வரையில் பழுவேட்டரையர்களை மட்டும் ஆட்டி வைத்துக் கொண்டிருந்தது. இளவரசே! மன்னிக்க வேண்டும்! இப்போது அவள் சக்கரவர்த்தியின் பேரிலும் தன்னுடைய மந்திரத்தைப் போட ஆரம்பித்து விட்டாள். அதனால்தான் இத்தகைய கட்டளையை— தங்களைச் சிறைப்படுத்தி வரும்படியான கட்டளையை,— சக்கரவர்த்தி பிறப்பித்திருக்கிறார்!...."

"சேநாதிபதி! எச்சரிக்கை! சக்கரவர்த்தியைப் பற்றிக் கௌரவக் குறைவாக எதுவும் சொல்ல வேண்டாம். என் தந்தையின் உடம்பில் உயிர் உள்ள வரையில் அவர் இடும் கட்டளை எதுவானாலும், எந்த சந்தர்ப்பத்தில் இடப்பட்டாலும், அதுவே தெய்வத்தின் கட்டளையாகும்..."

"அதை நாங்கள் மறுக்கவில்லை. இளவரசே! சக்கரவர்த்தியின் சுதந்திரத்துக்கு மட்டுமன்றி அவருடைய உயிருக்கே அபாயம் வந்து விடுமோ என்றுதான் அஞ்சுகிறோம். நந்தினியைப் பற்றிய முழு உண்மையை நேற்று வரை நானே அறிந்து கொள்ளவில்லை. நேற்றிரவு தான் பார்த்திபேந்திரன் மூலமாகத் தெரிந்து கொண்டேன். அந்தப் பயங்கரமான விஷயத்தைத்

தாங்களும் தெரிந்து கொள்வது அவசியம்.

"மூன்று வருஷத்துக்கு முன்னால் மதுரைக்கு அருகில் வீரபாண்டியனோடு இறுதி யுத்தம் நடந்தது அல்லவா? அப்போது தங்கள் தமையனார் கரிகாலரும் இதோ உள்ள பார்த்திபேந்திரரும் நானும் கலந்தாலோசித்து ஒவ்வொரு காரியத்தையும் செய்து வந்தோம். பாண்டியனுடைய சைனியங்கள் அடியோடு நிர்மூலமாயின. வீரபாண்டியன் முன்னொரு தடவை பாலைவனத்தில் ஓடி ஒளிந்ததுபோல் இப்போதும் ஓடித் தப்பிக்க முயன்றான். அதற்கு இடம் கொடுக்கக் கூடாதென்று நாங்கள் மூவரும் அவனை எப்படியாவது கைப்பற்றத் தீர்மானித்துப் பெரு முயற்சி செய்தோம். இந்தத் தடவை வீரபாண்டியனுடைய தலையைக் கொண்டு போகாமல் தஞ்சாவூருக்குத் திரும்புவதில்லை என்று நாங்கள் மூவரும் சபதம் செய்திருந்தோம். ஆகையால் வேறு யாரையும் நம்புவதில்லையென்று நாங்களே அவனைத் தொடர்ந்து சென்றோம். கடைசியாக ஒரு கோயிலுக்குப் பக்கத்தில் இருந்த குடிசையில் அவன் ஒளிந்திருப்பதைக் கண்டு பிடித்தோம். குடிசைக்கு வெளியில் எங்களைக் காவலுக்கு நிறுத்தி வைத்துவிட்டுத் தங்கள் அண்ணன் கரிகாலர்தான் உள்ளே நுழைந்தார். வீரபாண்டியனைக் கொன்று அவன் தலையை எடுத்து வந்தார். நாங்களும் எங்கள் காரியம் முடிந்துவிட்டதென்று குதூகலமாகத் திரும்பிச் சென்றோம். ஆனால் அந்தக் குடிசைக்குள்ளே ஒரு சிறிய நாடகம் நடந்ததென்பது எங்களுக்குத் தெரியாது. வீரபாண்டியனுக்கு அடைக்கலம் கொடுத்திருந்த பெண் ஒருத்தி குறுக்கே நின்று தடுத்துத் தன் காதலனுக்கு உயிர்ப் பிச்சை கேட்டாள். கரிகாலர் அவளை உதைத்துத் தள்ளிவிட்டு வீரபாண்டியனுடைய தலையைக் கொய்து வெளியே எடுத்து வந்தார். இளவரசே! அவ்விதம் சோழ குலத்தின் ஜன்ம சத்துருவான வீரபாண்டியனைக் காப்பாற்ற முயன்றவள்தான் நந்தினி! அவள்தான் பிற்பாடு எழுபது பிராயத்துக் கிழவரை மணந்து தஞ்சாவூருக்கு வந்து 'பழுவூர் இளைய ராணி' யாக விளங்குகிறாள்! அவள் எதற்காக, என்ன நோக்கத்துடன்,— வந்திருப்பாள் என்பதை நாம் ஊகிக்கலாம் அல்லவா? வீரபாண்டியனுக்காகப் பழிக்குப் பழி வாங்கத்தான் வந்திருக்கிறாள். சோழ குலத்தை அடியோடு நிர்மூலமாக்கி விடுவதற்காக வந்திருக்கிறாள். அவள் அருகில் சென்றவர் யாரும் அவளுடைய மோக வலையில் விழாமல் திரும்புவது கடினம். அதோ நிற்கும் வந்தியத் தேவன் அதற்குச் சாட்சி சொல்லுவான். சோழ குலத்தைப் பூண்டோடு அழித்து விடப் பயங்கர சபதம் எடுத்திருக்கும் கூட்டத்தைப் பற்றி அதோ நிற்கும் வைஷ்ணவன் சாட்சி சொல்வான். அவர்களுக்கு அவசியமான பணத்தையெல்லாம் நந்தினிதான் கொடுக்கிறாள். இளவரசே! துரதிர்ஷ்டவசமாக நம் சக்கரவர்த்திப் பெருமானும் அந்தப் பாதகியின் வலையில் விழுந்து விட்டதாகக் காண்கிறது. மதுராந்தகத் தேவனுக்குப் பட்டம் கட்டுவது பற்றிச் சக்கரவர்த்தியே யோசித்து வருவதாகத் தெரிகிறது. ஆகையால், சக்கரவர்த்தியின் கட்டளையென்று கருதித் தாங்கள் தஞ்சைக்குப் போவதற்கு இது தருணமல்ல..."

"சேநாதிபதி! தாங்கள் கூறிய செய்திகள் எனக்கு மிக்க வியப்பை உண்டு பண்ணியிருக்கின்றன. ஆயினும் அச்செய்திகளில் நான் செய்த முடிவுதான் உறுதிப்படுகிறது. என் தந்தையை அவ்வளவு பயங்கரமான அபாயங்கள் சூழ்ந்திருக்கும்போது நான் இருக்க வேண்டிய இடம் அவர் அருகிலேதான். இலங்கை அரசு எனக்கு என்னத்திற்கு? அல்லது இந்த உயிர்தான் என்னத்திற்கு? இனி யோசனை ஒன்றுமே தேவையில்லை. என்னைத் தடை செய்வதற்கு யாரும் முயல வேண்டாம்!" என்று இளவரசர் கம்பீரமாகக் கூறினார். பிறகு, சற்றுத் தூரத்தில் தூணில் சாய்ந்து கொண்டு தம்மைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்த பூங்குழலியின் மீது அவர் கண்கள் சென்றன.

"சமுத்திர குமாரி! சற்று இப்படி அருகில் வா!" என்றார்.

பூங்குழலி நெருங்கி வந்தாள்.

"பெண்ணே! நீ கொண்டு வந்த செய்தியின் மூலம் எனக்குப் பெரிய உதவி செய்தாய். இன்னும் ஓர் உப




# அறிமுகப்படுத்துகிறோம் சகலகலா வல்லவரை

# ULIP

வேறு எந்த திட்டத்தாலும் உங்களுக்கும் உங்கள் குடும்பத்திற்கும் இவ்வளவு செய்ய இயலாது.

- ஆயுள் மற்றும் விபத்திற்கான காப்பு
- வருடாந்திர லாபப் பங்கு 13.5%
- திட்ட முதிர்ச்சியின்போது ஊக்கத் தொகை 5% to 7.5%
- வருமான வரி விலக்கு
- உங்கள் பணத்திற்கு முழு பாதுகாப்பு

Rs. 300/- முதல் Rs. 4000/- வரை யூனிட் டிரஸ்டின் யூனிட்டுடன் இணைக்கப்பட்ட காப்பு திட்டத்தில் (Unit Linked Insurance Plan) வருடாந்திர முதலீடு செய்வதால் மேற்கூறிய அனைத்தும் பெறலாம்.

தற்போது 50 வயதுக்கு உட்பட்ட எவரும் இத்திட்டத்தில் சேரலாம்.

உங்களுக்கு அருகாமையில் உள்ள கனரா வங்கியின் கிளையையோ, யூனிட் டிரஸ்டின் முக்கிய பிரதிநிதியையோ அல்லது முகவரையோ உடனே அணுகுங்கள்.



**யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா**

(ஒரு பொதுத்துறை நிதி நிறுவனம்)

தலைமை அலுவலகம் பம்பாய்-400 020.

UNIT TRUST OF INDIA

**Regional Office :** 45, II Line Beach, Post Bag No : 5063, Madras - 600 001 Phone : 27433/20938

**Bangalore Office :** 'World Trade Centre', Chamber of Commerce Building, K.G. Road, Bangalore 560 009. Phone : 28739.

**Hyderabad Office :** 203/204, Moghul Court Complex, II Floor, Basheer Bagh, Hyderabad 500 001.

**Trichur Office :** 12/758, Thekkemadom Road, Trichur 680 001. Phone : 24690.

**Vijayawada Office :** Challapally Bungalow Eluru Road, Governorpet Vijayawada 520 002. Phone : 63964.

## ULIP - அனைத்தும் ஒன்றாய் இணைந்த திட்டம்.

Sista's-UTI.757.87 TM

காரம் எனக்கு நீ செய்ய வேண்டும். செய்வாயா?'' என்று கேட்டார்.

அடடா! இது என்ன? இந்த ஏழைப் படகுக்காரியிடமா இவர் உதவி கோருகிறார்? இவருக்குக் குற்றேவல் செய்யும் பாக்கியத்தை நாடி வந்தேன்; இவர் என்னிடம் உதவி வேண்டும் என்று யாசிக்கிறாரே! கடவுளிடம் வரம் கேட்க வந்தேன்; கடவுள் தம் திருக் கரங்களை நீட்டி என்னிடம் 'பிச்சை போடு' என்று கேட்கிறாரே?—இவ்வாறு மனத்தில் எண்ணி, ''இளவரசே! தாங்கள் இட்ட கட்டளையை நிறைவேற்றக் காத்திருக்கிறேன்!'' என்றாள் பூங்குழலி.

''சமுத்திர குமாரி! என்னைத் தேடிக் கொண்டு இரண்டு மரக்கலங்கள் தொண்டைமான் ஆற்று முகத்துவாரத்தின் அருகில் காத்திருக்கின்றன என்று சொன்னாய் அல்லவா? அந்த இடத்துக்கு நான் அதி சீக்கிரமாகப் போய்ச் சேர வேண்டும். எனக்கு வழிகாட்டி அழைத்துக் கொண்டு போவாயா?''

''பெண்ணே! 'முடியாது' என்று சொல்!'' என்பதாக ஒரு குரல் கர்ஜித்தது. அது சேநாதிபதியின் குரல்தான் என்பதைப் பூங்குழலி உணர்ந்தாள்.

இத்தனை நேரம் ஏதோ ஒரு சொப்பன லோகத்தில் சஞ்சரித்துக் கொண்டிருந்தவளுக்கு இப்போதுதான் தன் நெருக்கடியான நிலைமை தெரிந்தது. எந்த அபாயத்திலிருந்து இளவரசரைத் தப்புவிக்கலாம் என்ற ஆசையுடன் இவள் அவசர அவசரமாக ஓடி வந்தாளோ, அந்த அபாயத்தின் வாயிலேயே கொண்டு சேர்க்கும்படி இளவரசர் இப்போது தன்னைக் கேட்டுக் கொள்கிறார்!

''பெண்ணே! 'முடியாது' என்று சொல்!'' —சேநாதிபதியின் இந்தக் கட்டளையின் பொருள் அவளுக்கு இப்போது புலனாயிற்று. நாலாபுறத்திலிருந்தும் ஆயிரம் குரல்கள் அதே கட்டளையை அவளுக்கு இட்டன. மரங்கள் அவ்வாறு முழங்கின; மண்டபத்தின் தூண்கள் அவ்விதம் அலறின; மரக்கிளைகளின் மேலிருந்து பறவைகள் கதறின.

ஆனால் அந்தப் பேதைப் பெண்ணின் இதயத்தின் உள்ளே ஒரு மெல்லிய குரல் கேட்டது. 'பூங்குழலி! இதோ உன் அதிர்ஷ்டம்! இளவரசருக்கு வழி காட்டி அழைத்துப் போவாயானால் அவருடன் இரண்டு தினங்கள் கழிக்கலாம். அவர் அருகில் நீ இருக்கலாம். அவர் உன்னைப் பாராதபோது அவரை நீ பார்க்கலாம். அவர் மீது பட்டு வரும் காற்று உன் மீதும் படும். அவருடைய குரல் உன் காதில் அடிக்கடி கேட்கும். அடி பெண்ணே! நீ கண்டு வந்த எட்டாத கனவில் ஒரு சிறிது நிறைவேறும். பிறகு எது எப்படியானால் என்ன? பூங்குழலி! ஒத்துக் கொள்!' என்று அந்த மெல்லிய குரல் அவள் மனக் காதில் கூறியது.

"சமுத்திர குமாரி! ஏன் தயங்குகிறாய்? எனக்கு இந்த உதவி நீ செய்ய மாட்டாயா? நானே வழி கண்டு பிடித்துக் கொண்டு போக வேண்டியது தானா?" என்று இளவரசர் கூறியது அவளுடைய மனம் திடமடையக் காரணமாயிற்று.

"இளவரசே! வழி காட்ட நான் வருகிறேன்!" என்றாள்.

சேநாதிபதி பூதி விக்கிரம கேசரி அப்போது தம் தொண்டையைக் கனைத்துக் கொண்ட சப்தம் பூகம்பம் ஏற்படுவதற்கு முன்னால் பூமியின் கர்ப்பத்திலிருந்து எழுகின்ற பயங்கரத் தொனியை நிகர்த்திருந்தது.

அவர் ஓர் அடி முன்னால் வந்து கூறினார்:— "இளவரசே! தங்கள் விருப்பத்துக்குக் குறுக்கே நான் நிற்கமாட்டேன். ஆனாலும் என் வேண்டுகோள் ஒன்றுக்குச் செவி சாய்க்க வேணும். தங்களைச் சிறைப்படுத்த வந்திருப்பவர்களிடம் தங்களை ஒப்படைக்கும் வரையில் தங்களைப் பாதுகாப்பது என் பொறுப்பு. நேற்றிரவு தங்களைக் கொல்ல நடந்த முயற்சிகளைப் பற்றிச் சற்று முன்னால் தங்கள் தோழர்கள் சொன்னார்கள். அந்தக் கொலைகாரர்கள் இன்னும் பிடிபடவில்லை. அவர்கள் யார் என்று தெரியவும் இல்லை. என் மனத்தில் உள்ளதைச் சொல்வதற்காக மன்னியுங்கள். இந்தப் பெண்ணின் பேரிலேயே எனக்குக் கொஞ்சம் சந்தேகம் உண்டு. அந்தக் கொலைகாரர்களுக்கு இவளும் ஒரு வேளை உடந்தையாயிருக்கலாம் அல்லவா? மரக்கலங்களில் தங்களைச் சிறைப்படுத்தி அழைத்துப் போக வந்திருக்கிறார்கள் என்பதே இவளுடைய கற்பனையாயிருக்கலாம் அல்லவா? ஏன் இருக்கக் கூடாது? சற்று முன்னால் இவளுடைய கத்தியைத் தங்கள் தோழர் வந்தியத் தேவர் பிடுங்கி எறிந்த போது, அது யார் பேரிலோ விழுந்து ஓலக் குரல் ஒன்று கேட்டதே? அது யாருடைய குரல்?— இந்தப் பெண் தாராளமாக வழி காட்டிக் கொண்டு வரட்டும். நம்முடைய யானை மேல் ஏறிக் கொண்டு முன்னால் செல்லட்டும். ஆனால் தங்களுடன் நானும் தொண்டைமான் ஆற்றில் உள்ள கப்பல்களைக் காணும் வரையில் வந்தே தீருவேன்! அது என்னுடைய கடமை!"

சேநாதிபதியின் இந்தப் பேச்சைப் புன்னகை பூத்த முகத்துடன் கேட்டுக் கொண்டு நின்ற இளவரசர் "அப்படியேயாகட்டும்! தங்களுடைய கடமையை நிறைவேற்றுவதற்கு நானும் குறுக்கே நிற்கவில்லை!" என்றார்.

(தொடரும்)



அவர்: "என்னது! உங்க வாழ்க்கையின் திருப்பு முனையே டீ. வி. நாடகங்கள்தானா?"

இவர்: "நான் டாக்டருக்குப் படித்துக் கொண்டிருந்தபோது, டீ. வி. நாடகங்களைப் பார்த்த தன் விளைவு... நான் சிறந்த 'அறுவைச் சிகிச்சை' நிபுணராக மாற உதவி புரிந்தது!"

— பி. எல். பாலன்.

சர்ககரை பற்றிய பயத்தை விட்டொழியுங்கள்
சர்க்கரையின் முழுச்சுவையை அனுபவியுங்கள்!

## இப்போது

# சுவீட் அன் லோ

சர்க்கரைக்கு
பதிலாக




SWEET'N LOW
ஆரோக்கியத்தில் அக்கறை
உள்ளவர்களுக்கு தேவை—
''ஸ்வீட் அன்லோ'' சர்க்கரை நோய்
உள்ளவர்களுக்கு அவசியம்
தேவை—''ஸ்வீட் அன் லோ''
உடல் பருமனை குறைப்பதற்கும்
''ஸ்வீட் அன் லோ''



SWEET'N LOW
காபி டீ மற்றும்
அனைத்து பானங்
களிலும் சர்க்கரைக்கு பதிலாக
உபயோகிக்கலாம்.
28 மேலை நாடுகளில்
30 ஆண்டுகளாக பிரசித்தி
பெற்ற ''ஸ்வீட் அன் லோ''
இப்போது தமிழகத்தில்
முக்கிய கடைகளில்
கிடைக்கிறது.



SWEET'N LOW
ஒரு பாக்கெட் ''ஸ்வீட்
அன் லோ''=இரண்டு ஸ்பூன்
சர்க்கரைக்கு சமம்.



*இந்தியாவில் தயாரிப்போர்.*
**இபிஸ் ஹெல்த் எய்ட்ஸ்**
**லிமிடெட்,** தும்கூர், கர்நாடகம்.

*மொத்த விற்பனையாளர்* (தமிழ்நாடு)
**யோக்ராஜ் எண்டர்பிரைசஸ்,**
870, டாக்டர் இராமசாமி சாலை, கே.கே. நகர்,
சென்னை-600 078. தொலைபேசி: 427738

# உலகம் வெளியே இருக்கிறது

சித்ராவுக்குத் தன் கல்யாண ரிசப்ஷனின் போது நெஞ்சு கொள்ளாத சந்தோஷம்.

பின்னே சும்மாவா — இன்றையத் தமிழ் கூறும் நல்லுலகின் தலைசிறந்த இளங் கவிஞன்—'புதிய பாரதி' என்று புகழப்படும் சந்தானத்துடன் வாழ்க்கையைத் தொடங்க இருக்கிறாள்.

ரிசப்ஷனை ஒட்டி ஒரு பாராட்டு விழாவும் கூட. பத்திரிகைக்காரர்களும், புகைப்படக் காரர்களும், ஊரின் பிரபலங்களும் சேர்ந்து அவள் கணவனின் புகழை அவளுக்குப் புரிய வைத்தனர்.

"நான் ரொம்ப சாதாரணமானவன் சித்ரா. என் பலம் எழுத்து, கவிதை. அது சம்பாதித்துக் கொடுத்த பல அன்பு நெஞ்சங்கள் மட்டும் எனக்குச் சொந்தம். என் உலகம் வெளியில் இருக்கிறது. தெருவே என் வீடு. அங்கு நடக்கிற சுக துக்கங்களைக் கவிதையாக்கறேன். இந்தக் கல்யாணத்துக்கு வந்தவங்க எல்லாரும் என் சொந்தக்காரங்க..." என்றான் சந்தானம் நாத் தழுதழுக்க.

சித்ராவுக்கு மிகவும் பெருமையாக இருந்தது.

புகழை, பணத்தைவிட இந்த அன்பு மிகவும் உயர்ந்தது.

ஆண், பெண் என்று வித்தியாசமில்லாமல் எத்தனை பேர் சந்தானத்தின் கவிதைகளைப் படித்து ரசித்து அவனுடன் ஆத்மார்த்தமாகப் பழகுகிறார்கள்!

கவிஞர்கள் உலகம்தான் எத்தனை விரிந்து பரந்தது!

இரவு அறைக்குள் நுழைந்ததும் அவன் அவளையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"ரிசப்ஷன் எப்படி சித்ரா....

"ரொம்ப கிராண்ட்."

"உன்னோட தோழிகள் ரொம்ப பேர் வரலை"

"நான் அதிகம் பழகறதில்லை. மூணு பேர் தான் நெருங்கிய நண்பர்கள். பாக்கி எல்லாம் ஹலோ... ஹலோவோட சரி.." என்றாள்.

"சித்ரா நீ தி. ஜானகிராமனோட மரப்பசு படிச்சிருக்கியா? அதில் ஒரு பெண் காரெக்டர் — அவளுக்கு எல்லாரையும் தொட்டுப் பேசணும்னு ஆசை. கையைப் பிடிச்சுண்டு பேசணும்னு ஆசை! தொடாமல் எப்படிப் புரிஞ்சுக்க முடியும்னு கேப்பா. எனக்கு முதல்ல இது முட்டாள்தனமா இருந்தது. இப்போ அன்போட பாஷை புரியறது சித்ரா!" என்றான்.

அவள் அவனையே பிரமிப்புடன் பார்த்துக் கொண்டிருந்தாள்.

அதிகாலையில் அவள் எழுந்து பார்த்த போது அவன் நிலவையும், தென்றலையும் மொட்டை மாடியில் நின்றபடி ரசித்துக் கொண்டிருந்தான்.

"சித்ரா நிலவொளியில் இந்தத் தென்னை மர இலைகள் எத்தனை அழகா இருக்கு பாரு! உதயமும் அழகுதான், அஸ்தமனமும் அழகு தான்" என்றான்.

அவள் அவனை அணைத்துக் கொண்டாள்.

ஒரு பெண்கள் கல்லூரியில் பாரதியைப் பற்றி — பெண் விடுதலை சம்பந்தமாக பேச அவனை அழைத்திருந்தார்கள்.

அவளையும் கட்டாயம் வர வேண்டும் என்று வற்புறுத்தி அழைத்துச் சென்றான்.

வெள்ளை நிற ஜிப்பாவில் கம்பீரமாக இருந்தான்.

அவன் மேடையில் ஏறி மைக்கைப் பிடித்தபோது உலகமே அவன் வார்த்தைகளில் மயங்கிக் கிடந்தது.

"பேச்சில், எழுத்தில் மட்டும் இல்லை வாழ்க்கையிலும் பெண் விடுதலையைக் கடைப்பிடித்து நடைமுறைப்படுத்திய நல்ல கவிஞன் பாரதி. புதுவை வீதிகளில் மனைவியை அழைத்துக் கொண்டு ஒரு முஸ்லீம் பெரியவரின் கடையில் டீ குடித்தவன்! சிந்தனையில் துணிச்சல் இருந்தது. செயலில் நேர்மை இருந்தது. சிறுமை கண்டு பொங்கியவன் பாரதி.... ஒரு தலைமுறைக்குப் புதிய நம்பிக்கைகளைத் தந்தவன் பாரதி...."

பேசி முடித்து ஐந்து நிமிஷங்கள் ஆன பிறகும் கூட்டம் மெய்மறந்து இருந்தது.

அவனுக்கு மாலை அணிவித்து, கைதட்டி ஆரவாரம் செய்த போது பலர் அவனைச் சூழ்ந்து கொண்டு பேச ஆரம்பித்தார்கள்.

வீடு திரும்ப இரவு பத்து மணி ஆனது.

பிறகு அடிக்கடி பட்டிமன்றங்கள், கவியரங்கம், கவிஞர் மன்றம் என்று கூட்டங்கள் இருந்தன.

பலவற்றிற்கு அவன் சென்று கவிதை பாடிவிட்டு இரவு பத்து, பதினொன்று என்று அசதியுடன் திரும்புவது வழக்கமாகி விட்டது.

கையில் மாலையும், கண்களில் அசதியுமாக வீடு திரும்புகிறவன் பையில் மட்டும் பைசா இல்லை.

அன்பளிப்பாக வந்ததில் புத்தகங்கள் தான் அதிகம்.

"எனக்குப் பணம் முக்கியமில்லை சித்ரா..."

நேரம் கழித்துத் திரும்பியவன் சாப்பிடக்

நா. நாகராஜன்

கூடச் செய்யாமல் அப்படியே படுக்கையில் சாய்ந்தான்.

மறுநாள் காலை டிபன் சாப்பிடும் சமயம் சித்ரா அவனிடம் அதைக் கேட்டாள்.

''நான் ஸ்கூல்ல வேலைக்குப் போகவா... வீட்டில் போரடிக்குது....''

''வேணாம் சித்ரா. சம்பாத்தியத்துக்குப் பெண்கள் வெளியில் வேலைக்குப் போறது எனக்குப் பிடிக்கலை....'' என்றான்.

அவளுக்கு அவனின் இந்தப் பேச்சு அதிர்ச்சியைத் தந்தது. பெண் விடுதலை, பாரதி என்றெல்லாம் பேசிய அதே சந்தானம் தானா....!...?

அவன் அவளின் முகமாற்றத்தையும் ஏமாற்றத்தையும் புரிந்து கொண்டவனாகத் தெரியவில்லை.

பகல் முழுவதும் வேலையில்லாமல் பொழுதைக் கழித்து விட்டுச் சந்தோஷம் நிறைந்திருக்க வேண்டிய சாயங்காலத்தையும் அவனில்லாமல் கழித்துவிட்டு, இரவும் அவன் எப்போது திரும்புவானோ என்று காத்திருப்பது மெள்ள மெள்ள அவளுள் எரிச்சலை, வெறுப்பை வளர்த்தது.

என்ன கண்மூடித்தனமான ஈடுபாடு கவிதையில்...!

வாழ்க்கையை, மனைவியைப் புரிந்து கொள்ளாமல்....

அவளைச் சந்தோஷப் படுத்தாமல்....

வீட்டின் பிரச்னைகள், கவலைகள் தெரியாமல்....

ஏமாந்து விட்டோமோ....? வெளிச்சத்தையும், அவன் புகழையும், பெயரையும், கைதட்டலையும் பார்த்து மயங்கி விட்டோமோ.....?

ஆகாயத்தில் பொன்னூஞ்சல் கட்டலாம்

அதற்கு முன் —

நம் ஊஞ்சலை மாமரத்தில் கட்டுவோம்

என்ற அவன் கவிதை மாதிரி யதார்த்தத்தைச் சிந்திக்காமல் போய் விட்டோமோ....

சம்பாத்தியமும் இல்லாமல், உடம்பையும் கெடுத்துக் கொண்டு, மனைவிக்கும் சந்தோஷம் தராமல்....

என்ன வாழ்க்கை அவன் வாழ்க்கை...

யார் சொல்லி அவனுக்குப் புரிய வைப்பார்கள் இதை!

சித்ராவின் அம்மாவும் அப்பாவும் வந்திருந்தனர்.

அவர்களிடம் இலக்கியம் பற்றிப் பேசிக் கொண்டிருந்தான்.

அவர்கள் அவன் திறமையையும் விரிந்த அறிவையும் கண்டு வியந்தனர்.

அவர்கள் வெற்றிலை பாக்குத் தட்டுடன் வைத்துக் கொடுத்த நூறு ரூபாய் நோட்டு மறுநாள் அவன் ஜிப்பாவுக்குள் அடைக்கலம் ஆனது.

சித்ராவுக்குக் கண்களின் விளிம்பு வரை கண்ணீர்.

நூறு ரூபாய் நோட்டைக் கவிதைப் புத்தகமாகவோ, வேறு எதற்கேனும் சந்தாவாக மாற்றவோ மட்டும்தான் அவனுக்குத் தெரியும்.

வீட்டு வாடகையும், மளிகை பாக்கியும் அவனுக்கு அவசியமில்லாத கவலைகள்...

ஏதாவது ஹோட்டலில் டிபன் முடித்து விட்டு அவளுக்கும் வாங்கி வருவான்.

பணம் வந்த சந்தோஷத்தில்,

''நீ எனது இன்னுயிர் கண்ணம்மா'' பாடுவான்.



கண்டிப்பாக அவன் அன்று இரவு அப்படித்தான் டிபனுடன் வரப் போகிறான்.

இரவு நேரங்கழித்து அவனை எதிர்பார்த்தவள், சாயங்காலம் ஆறு மணி அளவில் அவனை நாலு பேர் அணைத்துத் தூக்கிக் கொண்டு வந்து கட்டிலில் போட்ட போது பதறிப் போனாள்.

முழங்காலில் இரத்தம் கசிந்திருப்பதும் பெரிய பேண்டேஜும் அவளைப் பதற வைத்தன.

"ஐயோ என்ன ஆச்சுங்க அவருக்கு?"

"பதறாதீங்கம்மா... சாருக்குமோட்டார் சைக்கிள் மோதினதுனால் காலில் காயம். மருந்து போட்டிருக்கு. கடவுள் புண்ணியத்தில் பெரிய விபத்து இல்லை..." என்றான் ஒருவன்.

வலியில் பேச்சின்றிக் கிடந்தான் சந்தானம்.

காலையில் அவள் எழுந்து அவனைக் கவனிக்க ஆரம்பித்த போது அவனின் புன்னகை பரிதாபமாக இருந்தது.

அவன் படுக்கையின் பக்கத்தில் ஸ்டூல் வைத்து அதில் அவனுக்குப் பிடித்த கவிதைத் தொகுப்புகள்...

அவள் காய்கறி வாங்கப் போய் விட்டு வருவதை, ரேஷன் கடைக்குப் போய் வருவதை, க்யூவில் நின்று தண்ணீர் பிடித்து வருவதை அவன் படுக்கையிலிருந்தபடியே பார்த்துக் கொண்டிருந்தான்...

"டியர்.... உனக்குத்தான் எவ்வளவு சிரமம்... எத்தனை வேலை செய்யறே நீ... இது போக என்னையும் கவனிச்சு மருந்து கொடுத்து...."

அவனின் பேச்சில், சிந்தனையில் ஒரு மாற்றம் இருப்பதை அவளால் உணர முடிந்தது.

வேலை வாய்ப்பு அலுவலகத்தில் இருந்து அந்தக் கடிதம் அவளுக்கு வந்த போது சித்ரா உண்மையில் அசந்துதான் போனாள்... தனக்கு அரசாங்க வேலையா என்று!

பிரித்துப் படித்த போது இதுதானா விஷயம் என்று மனத்திற்குள் ஒரு வெறுப்பு படிந்தது....

"என்ன சித்ரா... ஏதோ சர்க்கார் கடிதாசு போல...."

அவன் வாங்கிப் படித்தான்.

கிராம முன்னேற்றத்தை விளக்க ஒரு கண்காட்சி நடத்துவதாகவும் அவளுக்கு அதில் ஒரு விரிவுரையாளர் பணி ஒரு வாரத்துக்குத் தருவதாகவும் ஒரு நாளைக்கு இருபத்தைந்து ரூபாய் சம்பளம் என்றும் கறாராகத் தெரிவித்தது அந்தப் பழுப்பு நிறக் காகிதம்...

"வேலைக்குப் போறயா சித்ரா..."

"வேண்டாம்... உங்களை இந்த நிலையில் விட்டுட்டு நான் போக விரும்பலை..."

"இதென்ன சிரமம் சித்ரா. என்னால் சமாளிச்சுக்க முடியும். வாழ்க்கைல அரசாங்க உத்யோகம் பார்க்க ஒரு சந்தர்ப்பம்..." என்றான்.

"இரவு எட்டரை மணி வரைக்கும் வேலை. அப்புறம் பஸ் பிடிச்சு வர இருட்டாயிடும். மணி ஒன்பதரை கூட ஆயிடும்..."

"பரவாயில்லை. உன் சந்தோஷம்தான் முக்கியம். உனக்கும் ஒரு மனமாற்றமாகவும் பொழுது போக்காகவும் இருக்கும், இல்லையா?"

அவள் அவன் சொல்வதை நம்ப முடியாதவள் போலக் கேட்டுக் கொண்டிருந்தாள்.

**வே**லையை ஒப்புக் கொண்டாள்...

விளையாட்டுப் போல் நாலு நாட்கள் நகர்ந்து விட்டன.

ஒவ்வொரு நாளும் நடந்த நிகழ்ச்சிகளை அவன் ஒரு குழந்தைக்கு உண்டான சந்தோஷத்துடன் அவளிடம் இருந்து கேட்டுத் தெரிந்து கொண்டான்.

கடைசி நாளன்று சித்ராவிற்கு வழக்கத்தைவிட அதிக நேரமாகி விட்டது.

மனம் பாதுகாப்புக்காக எல்லாக் கடவுளையும் வேண்டிக் கொண்டது.

அந்தக் கிறிஸ்துவக் கல்லூரி காம்பவுண்ட் சுவரை ஒட்டித் திரும்பும் போது வெளியில் நின்ற ரிக்ஷாவில், சந்தானம் அவள் வருகையை எதிர்பார்த்துக் காத்துக் கொண்டிருந்தான்.

"நீங்களா... இங்கே இந்த நேரத்தில்?"

"சும்மாத்தான்... நீ வர்றதுக்கு வழக்கத்தைவிட நேரமாயிடுத்து இல்லையா... அதான்..." என்றான் ஒரு வருத்தம் கலந்த சிரிப்புடன்.

"சாரி டியர்...." என்றாள்.

"இருக்கட்டும். இதுநாள் வரை நான் உன்னைக் காக்க வைக்கலையா எப்பவும் என் உலகம் வெளில இருக்குன்னு சொன்னேன். இப்போ நீதான் என் உலகம்னு ஆயிடுத்து... அதனால தான் நீயும் வெளியிலேயே இருக்கும்படியா ஆயிடுத்து" என்றான்.

கவலையை மறந்து அவள் சிரித்தாள்.

---



அவன்! "பதவி இழந்த அமைச்சர் ஏன் எரிச்சலா இருக்கார்?"

இவன்: "பதவி போனதற்கு மகிழ்ச்சி தெரிவித்து 1,36,340 கடிதங்கள் வந்திருக்காம்!"

— உ. ராஜாஜி.

# தன்னம்பிக்கை



ஒவ்வொரு மனிதனும் முதலில் தன்னிடம் நம்பிக்கை வைக்க வேண்டும். என்னால் இயலாது என்று ஒரு நாளும் சொல்லாதீர்கள். நீங்கள் வரம்பில்லா வலிமை பெற்றவர்கள். எதையும், எல்லாவற்றையும் சாதிக்கும் ஆற்றல் படைத்தவர்கள் நீங்கள்.

மனித வரலாற்றை முழுவதும் பார்க்கும் போது ஆணோ, பெண்ணோ வரலாற்றில் சிறப்புடன் விளங்கினார்கள் என்றால் அதற்கு முக்கியக் காரணம் அவர்களது தன்னம்பிக்கைதான் என்று சுவாமி விவேகானந்தர் வீர முழக்கமிடுகிறார்.

ஆனால் நம்மில் பலர் ஓரளவு கல்வித் தகுதியிருந்தும் மற்றவர்களிடம் ஆங்கிலத்தில் பேசத் தயங்குகிறார்கள்.

தவறாகப் பேசிவிடுகிறோமோ என்ற பயமும், முறையான பயிற்சியின்மையுமே இத்தயக்கத்திற்கான முக்கியமான காரணங்களாகும்.

உங்களது இத்தயக்கத்தைப் போக்கி நீங்கள் ஆங்கிலத்தில் சரளமாக உரையாட, இலக்கணப் பிழையின்றி கடிதங்கள், கட்டுரைகள் எழுத விவேகானந்தா கல்வி நிலையத்தினர் தபால் மூலம் மிகச் சிறந்த முறையில் பயிற்சியளித்து வருகிறார்கள். நேர்முகப் பயிற்சியும் உண்டு. இப்பயிற்சியைப் பற்றி மேலும் தகவல் அறிய விரும்புவோர் கீழ்க்கண்ட முகவரிக்குக் கடிதம் எழுதி இலவசமாக தகவல் புத்தகத்தைப் பெற்றுப் பயிற்சியில் சேர்ந்து பயன் பெறலாமே!

**விவேகானந்தா கல்வி நிலையம் (Regd)**

9, மேட்லி ரோடு, தி. நகர், சென்னை - 600 017

# வேரில்லாத மரங்கள்

## 14

காற்று 'ஒஷ் ஒஷ்' என்ற சத்தத்தோடு வீசியது.

சற்றே முன்னால் சாய்ந்து ஜன்னல் கம்பிகளில் கன்னத்தைப் பதித்து, அந்தக் காற்றை ரசித்த போது மனசு சந்தோஷமாக இருப்பதைப் புரிந்து கொள்ள முடிந்தது.

சந்தோஷம்தான்....

கடவுளின் ஆசிர்வாதத்தில் அம்மா உடல் நலம் தேறி வீடு திரும்பி விட்ட சந்தோஷம்....



சிவசங்கரி

அவரைக் கிட்டத்தில் இருந்து கவனித்து, நல்ல பிள்ளையாய் லட்சணமாய்க் கடமையைச் செய்த சந்தோஷம்....

பெற்றவர்கள் நடந்து போன எதையும் எண்ணி மனம் கசந்து போகாமல், பழைய அன்புடனேயே பழகும் சந்தோஷம்....

முக்கியமாய், காஞ்சிபுரத்தில் தங்கிவிட்ட பதினாறு நாட்களாய் 'வசுவைத் தனியாகத் தவிக்க விட்டு இப்படி வந்து விட்டோமே' என்று குற்ற உணர்வு எழ முடியாத தினுசில் தக்க துணையாய் அத்தையம்மாவை விட்டோட வசிக்க ஏற்பாடு பண்ணிவிட்ட சந்தோஷம்....

என்ன இருந்தாலும் வசு கெட்டிக்காரி தான்... பேசுகிறவிதமாய்ப் பேசி ஒரே நாளில் அத்தையம்மாவை வரவழைத்து விட்டாளே!

அப்படி அத்தை மட்டும் வந்திராவிட்டால் தினமும் காலையில் காஞ்சிபுரத்துக்கு வந்து, பகலெல்லாம் ஆஸ்பத்திரியில் அம்மாவைக் கவனித்து, மாலையில் மீண்டும் பஸ் பிரயாணம் மேற்கொண்டு, இருட்டின பிறகு ஆய்ந்து, ஓய்ந்து படுக்கையில் விழுவது தானே நடந்திருக்கும்! இந்த அல்லாட்டத்தில் உடம்பு கருண்டு போவதோடு யாருக்கும் உருப்படியாய் எந்த உதவியும் செய்ய முடியாமல் களைத்துப் போவதுதானே நடந்திருக்கும்?

அத்தையை வீட்டோடு வரவழைத்துக் கொண்டுவிட்ட ஏற்பாட்டினால், வசு சொன்ன மாதிரி எத்தனை உபயோகங்கள்!

வாயும், வயிறுமாக இருக்கும் மனைவிக்கு அகாலமாய் வலி எடுத்தால் என்ன செய்வது என்கிற கவலை இல்லை; மாசம் ஆன பிறகும் இப்படி வீட்டு வேலைகளை மாடு மாதிரி செய்கிறாளே என்கிற சங்கடம் இல்லை, தனியாக இருக்கிறோமே, பிரசவத்திற்குப் பிறகு குழந்தையை வளர்ப்பது எப்படி என்கிற அவஸ்தை இல்லை... ஒன்றும் இல்லை...

இதெல்லாவற்றையும்விட அத்தையம்மாவை வீட்டோடு அழைத்துக் கொண்டு வந்துவிட்டதற்கு இவனைப் பெற்றவர்கள் மனப்பூர்வமாகச் சம்மதித்ததுதான் ஆச்சரியத்திலும் ஆச்சர்யமான சமாசாரம்!......

"ஏன் தம்பி... ராவுக்குத் தங்கிடப் போறேன்னு சொல்றியே — அங்கே உன் பெண்டாட்டி தனிச்சு இருப்பாளே, அத நினைச்சுப் பாத்தியா? கர்ப்பிணிப் பொண்ணைத் தன்னந்தனியா விடறது சரியான காரியமா படலியே!" என்று இவன் போய் இறங்கி, அங்கேயே இரவும் கழிக்கப் போவதாகச் சொன்னவுடன், புருவத்தைச் சுருக்கிக் கொண்டு அப்பா கேட்கவே செய்தார்.

கொஞ்சம் தயங்கி, பின் சின்னக் குரலில், வசந்தாவின் அத்தை தங்களோடு நிரந்தரமாய்த் தங்க வந்து விட்டதைக்கூற, ஒரு நிமிஷம் அப்படியே நின்று அவன் சொன்னதைக் காதில் வாங்கியவர், மீண்டும் பேச வாயைத் திறந்தபோது வாஸ்தவமாகவே ஒருவித நிறைவு அவர் கண்களில் வெளிச்சம் போட்டிருப்பதை உணர முடிந்தது.

"நல்ல காரியம் பண்ணே தம்பி... ஆயிரம் இருந்தாலும் இந்தச் சமயத்துல பெத்தவங்களோ, இல்லே இந்த மாதிரி பெரியவங்களோ கூட இருக்கிறதுதான் மொறை... எந்த மதமானா என்ன, ஜாதியானா என்ன? உணர்ச்சின்றது எல்லாருக்கும் பொதுதானே!........

வெறும் பேச்சோடு நிற்காமல் அம்மாவிடமும் இதைக்கூறி அப்பா சந்தோஷப்பட்டதையும், பிற்பாடு அம்மா மருமகளைக் காண வேண்டும் என்று ஆசைப்பட்ட தனால், முதல் நாளே போன் மூலம் வசந்தாவுக்கு விஷயத்தைக்கூறி, மறுநாள் லீவு போட வைத்து, காலையில் தானே புறப்பட்டுப் போய் அவளை அழைத்து வந்து பெற்றவர் முன் மனுறா கலக்கத்தோடு நிறுத்தியதையும் இப்போது மாதவன் நினைத்துப் பார்த்தான்.

எத்தனை பரபரப்பான நிமிஷங்கள் அவை! என்ன சொல்வார்களோ, ஏது பழிப்பார்களோ — என்று அஞ்சியதெல்லாம் பொய்த்துப்போக, எதிரில் நின்றவளின் கையைப் பற்றிக் கொண்டு சன்னமாய் விசித்து விசித்து அம்மா அழுதது தானே கடைசியில் நடந்தது?

எத்தனை பேருக்கு இப்படி அன்பான பெற்றோர் அமைவார்கள்?

எத்தனை பேருக்கு இப்படி நிலைமையைப் புரிந்து கொண்டு பக்குவமாய் நடக்கும் பெரியவர்கள் கிடைப்பார்கள்?

எத்தனை பேருக்கு.....

பஸ் ஒரு குலுக்கலோடு நிற்க, மாதவன் எழுந்தான். கைப்பெட்டியை எடுத்துக் கொண்டு இறங்கி நடந்தான்.

**முன் கதைச் சுருக்கம்:**

வசந்தமேரியும் மாதவனும் காதலித்துக் கலப்பு மணம் புரிந்து கொள்கின்றனர். இருவர் வீட்டிலும் காதல் திருமணத்துக்கு எதிர்ப்பு. எனினும் இருவரும் ஒருவர் மதத்தை மற்றவர் மீது திணிப்பதில்லை என்று உறுதி பூண்டு வாழ்க்கையைத் துவங்குகின்றனர். சில மாதங்களுக்குள் வசந்தா கருவுற்றதும், பொருளாதார ரீதியில் ஒரு குழந்தைக்குத் தயாராயில்லாததால் கருவைக் கலைத்துவிட வேண்டும் என்கிறான் மாதவன். தனது மதக் கோட்பாட்டுக்கு எதிரான இச்செயலுக்கு இசைய மறுக்கிறாள் வசந்தா. இதனால் சிறிது மனஸ்தாபம் ஏற்பட்டாலும் அவர்களிடையே அன்பு குறையவில்லை. வசந்தா நிறைமாதக் கர்ப்பிணியாக உள்ள தருணத்தில் மாதவனின் அம்மாவுக்குக் காஞ்சீபுரத்தில் திடீரென்று மாரடைப்பு ஏற்படுகிறது. அவன் சென்னையில் வசந்தாவை விட்டு விட்டுக் காஞ்சிபுரத்தில் தங்கி அப்பா, அம்மாவுக்கு உதவ வேண்டிய நிர்ப்பந்தம். வசந்தா கர்ப்பமாக இருப்பதை அறிந்ததும் அவன் பெற்றோர் மகிழ்ந்து அவளை வரவேற்கத் தயாராகின்றனர். மாதவன் காஞ்சிபுரத்தில் தங்கும்போது வசந்தாவுக்குத் துணையாக இருக்க அவளது பிறந்தகத்தில் அவளுக்குத் தாயாக இருந்து வளர்த்த அத்தையம்மாவை அழைக்கின்றனர். அத்தையம்மாவோடு கிறிஸ்துவ மதச் சின்னங்கள் அவ்வீட்டுக்குள் நுழைகின்றன.

அம்மாவின் விருப்பப்படி சீக்கிரமே வசந்தாவைக் கூட்டிக் கொண்டு கிராமத்துக் குப் போகும் காட்சி கண்முன் வண்ணத்தில் விரிந்தது.

சர்ரென்று வீட்டு வாசலில் நிற்கும் டாக்ஸி.

தள்ளாமை இருந்தாலும், முகமெல்லாம் சிரிப்பாக இறங்கும் வசந்தா....

பக்கத்தில் தலை நிமிர்ந்தபடி இவன்....

வீட்டு வாசலில் செம்மண் பூசப்பட்ட கோலம், மாவிலை. . .

ஆரத்தித் தட்டுடன் காத்திருக்கும் அம்மா.......

கூடத்திலிருந்து எட்டிப் பார்க்கும் அப்பா.....

கோப தாபத்தை விட்டுவிட்டு மருமகளை வரவேற்கத் தயாராகி விட்டார்கள், பார்த்தாயா? என்கிற பாவனையுடன் தம்தம்வீட்டு வாசலில் வந்து நின்று வேடிக்கை பார்க்கும் அண்டை அசலார்.....

மணமகளே மருமகளே வா... வா...
உன் வலது காலை எடுத்து வைத்து வா....
வா....
குணமிருக்கும் குலமகளே வா... வா...

என்றோ பார்த்த சினிமா படக்காட்சியாய்க் கற்பனை மலர்ந்தது.

"என்ன ஸார்.... கண்ணு தெரிலியா? மேல வந்து எருமை மாட்டுக் கணக்கா விளுவறே?"

கட்டைக் குரல் ஒன்று அதட்ட, மாதவன் திடுக்கிட்டான்.

எதிரில் நின்று முறைத்த வியாபாரியிடம் மன்னிப்பு கேட்கும் சிரிப்பு ஒன்றைச் சிரித்து, ஸாரி என்று முனகி, கால்களை எட்டி வைத்து ஒருவித அவசரத்துடன் அவன் வீட்டுக்கு வந்து சேரும்போது மணி ஏழரை என்றது கடிகாரம்.

மரியாதையுடன் ஒரு பக்கமாய் நின்று அவன் தாய் உடல் நிலை குறித்து விசாரித்த பிறகு இரவு சமையலைக் கவனிக்கவென பரிமளம் உள்ளே போக, மாதவன் மனைவியின் கையைப் பற்றிக் கன்னத்தில் வைத்துக் கொண்டான்.

"எப்படி இருக்கே வசு? உன்னை ரெண்டு வாரமா பிரிஞ்சதுல ரொம்பத்தான் கஷ்டப் பட்டுட்டேன்" என, — அவள் மயக்கத்தோடு சிரித்தாள்.

"ஆமாமா... ரொம்ப கஷ்டம்தான் போங்க... அம்மா கிட்ட கொஞ்சற ஜோர்ல என் ஞாபகமே இருந்திருக்காதுனு எனக்குத் தெரியாதா என்ன? சும்மா காது குத்தாதீங்க சாமி....."

மாதவன் அவள் கையை உதடுகளில் வைத்து முத்தமிட்டான்.

"நம்பினு நம்பு, இல்லாட்டி விடு... நான் பட்ட அவஸ்தை எனக்குத்தான் தெரியும்... அம்மாகூட ஒருதரம் கேட்டுட்டாங்க தெரியுமா? ஏன் தம்பி இப்படி குட்டி போட்ட பூனையாட்டம் தவிக்கறே? வேணு ஒரு நடை போய்ப் பார்த்திட்டு வர்றது தானே—னு?"

வசந்தா திரும்பி அவன் மடியில் தலை வைத்துப் படுத்துக் கொண்டாள்.

"அப்புறம்? அம்மா இன்னும் வேறே என்னென்ன சொன்னாங்க?"

"உன்னைப் பார்த்ததுல அவங்களுக்கு ரொம்ப சந்தோஷம் வசு... அழகா இருக் குறு.... அதான் நீ கண்மண் தெரியாம போய் விழுந்திட்டேன்னு கேலி காட்டி னாங்க...."

வசந்தா யோசனையுடன் அடி உதட்டைக் கடித்தாள். மெள்ளப் பேசினாள்.

"எனக்கொரு சந்தேகம், மாது..."

"என்ன?....."

"இத்தனை ஆசையா இருக்கிறவங்களால எப்படி இத்தனை மாசமா நம்பளத் திரும்பிக் கூடப் பாக்காம இருக்க முடிஞ்சது? 'நீ எப்படி இருக்கே?' னு ஒரு வார்த்தை கூடக் கேக்காம வீம்பா எப்படி முகத்தத் திருப்பிக் கிட முடிஞ்சுது?"

மாதவன் உதட்டைப் பிதுக்கித் தோளைக் குலுக்கினான்.

"காஞ்சிபுரம் போயிட்டு வந்த ஒரு வாரமா எனக்குள்ள இதே கேள்விதான்... பதில்தான் கிடைக்கல...."

மாதவன் குனிந்து அவள் முடியைக் காதோரமாய் ஒதுக்கி விட்டான்.

"எது எப்படி இருந்தா என்ன வசு? இன்னிக்கு அவங்க எல்லாத்தையும் மறந் திட்டுச் சுமுகமா இருக்காங்க. அதானே முக்கியம்? பழசைக் கிளர்றதால யாருக்கு என்ன ஆதாயம்? ம்? அந்தப் பேச்ச விடு... இதைக் கேளு... அம்மா உனக்கு வளைகாப்பு செய்யப் போறாங்களாம்... தெரியுமா?"

வசந்தா எழுந்து உட்கார்ந்தாள்.

"வளைகாப்பா? எதுக்கு?"

"பிள்ளைதாச்சிப் பொண்ணுக்குச் செய்ய வேண்டிய சடங்கெல்லாம் செஞ்சிங்களா டானு கேட்டாங்க... அதெல்லாம் அவங்க மதத்துல செய்யற வழக்கம் இல்லையாம்மானு சொன்னேன்... 'அவங்க செய்யாட்டி என்ன— நாளைக்கு எம்பேரன் குறையில்லாம பொறக்க வேணுமா? நான் வீட்டுக்குப் போனதும் நல்ல நாள் பாத்துச் சொல் றேன் — அழைச்சிட்டு வா... நம்ம வீட்டு லேயே புதுப் புடைவை வாங்கி வளை அடுக் கிட்டா போவுது' னு சொன்னாங்க; எப்படி?"

மனையில் புதுப் புடைவையில் மனைவி உட்கார்ந்திருக்க, கிராமத்துச் சுமங்கலிப் பெண்களுடன் மங்களம் பாடியவாறே அம்மா அவளுக்கு வளை அடுக்கும் கற்பனை தந்த குதூகலத்தோடு வசந்தாவை ஏறிட்ட மாதவன் லேசாகத் திடுக்கிட்டான்.

"என்ன வசு?"

"ஒண்ணுமில்லே...."

"அட, சொல்லுன்னு...."

"இல்ல.... உங்க வீட்டுக்குச் சும்மா போயிட்டு வந்தா போதாதா.... இந்த வளை காப்பு, அது, இதெல்லாம் எதுக்கு மாது?"

"எதுக்கா? 'குழந்தை குறையில்லாம பிறக்க இதெல்லாம் செய்யறது சம்பிரதாயம்'னு அம்மா சொன்னதாச் சொன் னேனே; காதுல விழலியா?"

வசந்தா நமுட்டாய்ச் சிரித்தாள்.

"அப்படின்னு இந்தச் சடங்கெல்லாம்

செய்யாதக் கொண்டு எங்க குழந்தைங்கள் ளாம் கொறையோட பொறக்குதுனு சொல் றீங்க, அதானே?''

''இடக்காகப் பேசாதே வசு... என்னமோ ஆசைப்படறாங்கனு சொல்ல வந்தா... அதப்புரிஞ்சிக்காம மேல மேல பேசறியே! நாம அவங்களை மதிக்காம கட்டிக்கிட்டதை மனசுல வச்சிக்காம, பெருந்தன்மையோட அவங்க நடந்துக்க முன் வந்திருக்கறதை நெனைச்சுப் பாக்காம...''

வாக்கியத்தை முடிக்கு முன் 'சாப்பிட வறீங்களா?' என்று வாசல் படியில் நின்று பரிமளம் குரல் கொடுக்க, பேச்சை அதோடு நிறுத்திக் கொண்டு எழுந்தார்கள்.

சமையல் கட்டில் தட்டுக்கு முன் அமர்ந்து சோற்றையும், குழம்பையும் சேர்த்துப் பிசைந் தவன், அதை உருட்டி வாயில் போடத் தலை நிமிர்ந்த போது பார்வை எதிர் சுவரைத் தடவ, அதிர்ந்தான்.

ஏசுநாதர் படம்....

'உங்களின் நன்மைக்காக நான் ரத்தம் சிந்துகிறேன்' என்கிற அர்த்தத்தில் ரத்தம் வடியும் இருதயத்தோடு காணப்படும் ஏசு வின் படம்....

அருகிலேயே சின்னதாய் மர ஷெல்ஃப் ஒன்றில் மெழுகுவர்த்தியைப் பொருத்த உபயோகிக்கும் ஸ்டாண்ட், ஜபமாலை...

என்ன இதெல்லாம்?

கருகருவென்று கண்களைக் கோபம் சிவக்கச் செய்ய, மாதவன், ''வாட் ஈஸ் திஸ்?'' என்றான் அடிக்குரலில்....

''எது? ஓ! பீடத்தைக் கேக்கறீங்களா? அத்தம்மாவுக்கு ரெண்டு வேளையும் ஜபம் செய்யாட்டி தூக்கம் வராது.... வழிபாட்டுப் பீடத்தை எங்க வக்கலாம்னு கேட்டாங்க... நாதான் சமயல்கட்டுல வச்சுக்கங்க... மாது வுக்குத் தொந்தரவா இருக்காதுனு சொன் னேன்...''

ரொம்ப சர்வசாதாரணமாய் அந்தச் செதியைச் சொல்ல, அவள் குரலில் காணப் பட்ட அலட்சியம் மாதவனின் கோபத்தை அதிகமாக்கியது.

''இதை ஏன் என்கிட்ட நீ சொல்லல?''

''எங்க நேரம் மாது? அன்னிக்குப் போன வங்க இன்னிக்குத்தானே வந்திருக்கீங்க?''

அதற்காக — உன் இஷ்டப்படி எதுவேணு மானாலும் செய்வதா— என்று அதட்ட நினைத் தவன், பரிமளம் எதிரில் நின்ற காரணத் தால் தன் நினைப்பை மாற்றிக் கொண்டு, இரண்டு வாயாகக் குழம்பு கலந்த சோற்றை அள்ளிப் போட்டுக் கொண்டு, 'போதும் — எனக்குப் பசியில்லை' என்றவாறு எழுந்தான்.

கை கழுவிக் கொண்டு அறைக்குச் சென் றவன், சில நிமிஷங்களில் சாப்பிட்டு முடித்து உள்ளே வந்தவளை அழுத்தமாக ஏறிட்டு, கோபம் தணியாத குரலில் வினவினான்.

''என்கிட்ட கேக்காம இப்படி செஞ்சது தப்புன்னு படல?''

''எதைக் கேக்காம செஞ்சேன்?''

''ஏசு படத்தை மாட்டினதைத்தான் சொல்றேன்''

வசந்தா 'ப்ச்' என்று சூள் கொட்டினாள்.

''நீங்க இன்னுமா அத நினைச்சிட்டிருக் கீங்க? அத்தம்மாவுக்குச் சின்னதா சந்தோ ஷம் தர்ற காரியத்தைச் செய்யறத்துக்குக் கூடவா உங்க பர்மிஷன் வேணும்?''

''சின்னதோ, பெரிசோ... மதம் சம்பந் தமா எதையும் செய்யறதில்லேனு முடிவு செஞ்சிருக்கோம், இல்ல?''

''ஒத்துக்கறேன்... ஆனா, அந்தக் கட்டுப் பாடு நம்ம ரெண்டு பேர் விஷயத்துல தானே ஒழிய, அத்தம்மாவுக்கு இல்லே....''

''அப்ப, அவங்க விருப்பப்படி இந்த வீட்டுல எதுவும் நடக்கும்னு சொல்றே?''

''அத்தம்மா, சம்பளம் கொடுக்காத வேலைக்காரியா சமைக்கணும், வீட்டு வேலை செய்யணும், நல்ல துணை யா இருக்கணும்னு எதிர்பார்த்தா, இந்த மாதிரி சின்ன விஷயங்



மகள்: ''அப்பா! நீங்க செய்யறது கொஞ் சம் கூடச் சரியில்லே!''

அப்பா: ''என்னம்மா?''

மகள்: ''மாப்பிள்ளையைப் பொங்கலுக் குக் கூப்பிடாம, மாட்டுப் பொங்கலுக் குக் கூப்பிட்டீங்களாமே!''

— அ.பெ. ரவி.

கள்ல விட்டுக் கொடுத்துத்தான் ஆகணும்...

பெரியவங்க திருப்திக்காக இதைக் கூடச் செய்யாட்டி எப்படி?''

கறாராய்ப் பேசிவிட்டு நான் சொல்றதை சொல்லி விட்டேன், பிறகு உங்கள் இஷ்டம் என்பது போல 'ஸப்பாடா' என்கிற பெருமூச்சுடன் வசந்தா படுத்து, கண்களை மூடிக்கொள்ள, மாதவன் அடங்கிப் போனான்.

ஆனால், அந்த ஞாயிறு காஞ்சிபுரம் சென்று பெற்றவர்களைப் பார்த்து விட்டுத் திரும்பின போது, ஒரு பழனி பஞ்சாமிருத டின், சின்ன விபூதி பொட்டலத்தை டேபிள் மேல் வைத் தவன் ''அம்மா பொழைச்சு எழுந்தா பழனி முருகனுக்குப் பால் அபிஷேகம் செய்யறதா அப்பா நேர்ந்துக்கிட்டிருந்தாராம்... ஆள் மூலம் பணம் அனுப்பி செஞ்சி, பிரசாதம் கொடுத்திருக்காரு'' என்றதோடு நிற்காமல் ''எங்க குல தெய்வம்; சக்தி விநாயகர் படம்.... 'மாட்டிவை தம்பி , நல்லது நடக் கும்'னு அம்மா சொன்னாங்க... பெரியவங்க திருப்திக்காக இதக் கூடச் செய்யாட்டி எப்படி?'' என்று அவள் பக்கம் திரும்பாமல் முணுமுணுத்து, படுக்கை அறை காலெண்ட ரைக் கழற்றிவிட்டு கையிலிருந்த படத்தை மாட்டின நிமிஷத்தில், அவன் வீம்புக்காகச் செயல்படுவதைத் துல்லியமாக வசந்தா வால் புரிந்து கொள்ள முடிந்தது.

(தொடரும்)

**நகைச்சுவைச் சிறுகதைகள், நாடகங்கள் மற்றும் கட்டுரைகள் எழுதுவதை ஊக்குவிக்கும் வகையில் ரூ. 200 சன்மானம் அளிக்கப்படுகிறது.**

காட்சி — 1

இடம்: தவணை மாளிகைக் கடை.

காலம்: பகல்

பாத்திரம்: தனகோடி, தவணை தம்புசாமி.

(தனகோடியின் கடை நடுவில் ஒரு மேஜை. எதிரே ஒரு நாற்காலி. இன்டர்வ்யூ நடைபெறுகிறது. கடைசி ஆளாகத் தம்புசாமி சென்று அமர்கிறான்)

தம்பு: வணக்கம்...!

தன: வணக்கம்... வா... உட்காரு... பேரு....?

தம்பு: தவணை தம்புசாமி!

தன: என்ன தம்பி தவணைக் கடையிலே வேலை கேட்டு வந்தால் தவணை தம்புசாமி... ரொக்க வியாபாரக் கடைக்குப் போனால் ரொக்கம் தம்பு சாமியா?

தம்பு: இல்லீங்க... உண்மையிலேயே எங்க தாத்தா, பாட்டி அப்படித்தான் கூப்பிடுவாங்க...

தன: அதிசயமாயிருக்கே!

தம்பு: எங்க அம்மா வீட்டிலே, பேசின வரதட்சணையைத் தாத்தா மொத்தமாய்க் கொடுக்க முடியலே... அப்பா, அம்மாவைத் தாத்தா வீட்டுக்கு அனுப்பி அனுப்பி ஆறு மாசமோ ஒரு வருஷமோ தங்கச் செய்து வரதட்சணைப் பணத்தை வட்டியோடு வசூலிச்சாராம்... அந்தச் சமயத்திலே நான் பிறந்ததாலே தவணை தம்புசாமின்னுதான் தாத்தா பாட்டி கூப்பிடுவாங்களாம்!

தன: பேஷ்! என்ன படிச்சிருக்கே?

தம்பு: இதோ மார்க் ஷீட்ஸ்... எஸ்.எஸ்.எல்.சி...

தன: என்ன தம்பி இது... பி.காம்., எம்.காம். படிச்சிட்டு ஒரே காகிதத்தைக் காட்டுறாங்க... நீ ஒரு குயர் காகிதம் காட்டுறியே மார்க் ஷீட்டுன்னு...

தம்பு: சார்... நீங்க நடத்தறது தவணைக் கடை... என்னை மாதிரி எஸ்.எஸ்.எல்.சி.யை ஏழு தவணையிலே முடிச்சவனைவிடப் பொருத்தமா ஓர் ஆள் உங்க தவணைக் கடைக்குக் கிடைக்க மாட்டான்.

தன: நல்லாப் பேசறே நீ...

தம்பு: எந்த நடிகை என்ன நாய் வளர்க்கறாங்க... அது என்ன குட்டி போட்டுதுன்னு கேட்காமல் தவணையைப் பற்றிக் கேளுங்க.. சொல்றேன்... திருப்தியானால் வேலை கொடுங்க...

தன: தவணையைப் பற்றி என்ன கேட்கிறது? என்ன சொல்றது...?

தம்பு: என்ன சார் அப்படி சொல்லிட்டீங்க... உலகமே தவணையிலேதான் நடக்குது... மழைகூடத் தவணையிலேதான் பெய்யுது... ஒரு பழத்துக்கு ஒரு சீசன்... பூக்கு ஒரு சீசன்..

தன: பேஷ் பேஷ்....

தம்பு: மனிதனுக்குக் கூடப் பசி, தாகம் தவணையிலேதான் இருக்குது...

தன: போதும்பா போதும்... உன் தவணைதினிசுக்கு டாக்டர் பட்டமே தரலாம்...

தம்பு: எனக்கு வேலை போதும்... டாக்டர் பட்டம் எதுவும் வேண்டாம்... என்னோடு படிச்சவன்... என்னைப் போல படிச்சவன்.. ஆயிரம் ரூபாயை அஞ்சு தவணையிலே கட்டி அமெரிக்க டாக்டர் பட்டத்தை ஒரு ஆள் கிட்டே வாங்கிட்டான்...

தன: அது சரி... ஜாமீன்... அதுதான் டெபாசிட் ஆயிரத்தைந்நூறு நீ கட்டணும்; ரெடியா? இல்லே அதுவும் தவணையா?

தம்பு: மூணு தவணையா தர்றேன்னா என் மாமனார்.... பெரிய மனசு செய்து ஏற்றுக்கணும்...

தன: சரி.. எனக்கு உன்னை ரொம்பப் பிடிச்சுப் போச்சு... ஒரு கண்டிஷன்...

தம்பு: சொல்லுங்க, சார்...

தன: நீதான் தனகோடி தவணைக்கடை... தப்பு... தவணை மாளிகைக்கு மானேஜர். அறுநூறு ரூபாய் சம்பளம்... ஆனால் ஒண்ணாம் தேதி 200 ரூபா... 11 ஆம் தேதி 200 ரூபா... 21 ஆம் தேதி 200 ரூபா; அது கூட உன் டெபாசிட் தொகை முழுவதும் கட்டி முடிச்ச பிறகுதான் முதல் சம்பளம்...

தம்பு: முதல் 'தவணை சம்பளம்'னு சொல்லுங்க..

தன: ப[illegible]டித்தான் வச்சுக்க... இந்தா தனகோடி தவணை மாளிகையின் ஒரு சாவி...

தம்பு: இந்தப் பத்தடிக்குப் பத்தடி கடைக்குத் தவணை மாளிகைன்னு பேர் வச்சிருக்கீங்களே...

தன: ஆமாம்ப்பா.. பத்து ஊரிலே பத்து மாளிகை, கட்டறதுக்கு இது மொதல் தவணை ...

தம்பு: மொதல் தவணைன்னு சொன்னதும் ஒரு ஐடியா சார்... சொல்லட்டுமா?

தன: சொல்லுப்பா... நீ மானேஜர்...

தம்பு: நம்ம தவணைத் திட்டத்திலே சேர்றவங்களுக்கு முதல் தவணை செலுத்தினால் பெண்களுக்குக் குங்குமச் சிமிழ்... ஆண்களுக்கு சிகரெட் கேஸ்... இப்படி ஏதாவது இலவசப் பரிசு கொடுக்கலாம் சார்....

தன: நல்ல ஐடியா.... இனிமேல் முதல் தவணை கட்டினால் பரிசுதான்.... பொருளைக் கூட ஆறும் தவணைதான் கொடுப்போம்'னு சொல்லிடுவோம்! சரி... கடையைப் பார்த்துக்க... வர்றேன்...

தம்பு: கடையில்லே சார்.... மாளிகை... மாளிகையின் முதல் தவணை !

— ஆர். பி. சாரதி —

(போகிறார்)

(நாட்கள் நகர்கின்றன)

### காட்சி — 2

இடம்: தனகோடி தவணை மாளிகை
காலம்: பகல்.
பாத்திரம்: தவணை தம்புசாமி — வாடிக்கையாளர் வாலம்மாள்.

(வாலம்மாள் உள்ளே வருகிறாள்... தம்பு சாமி சுவர்க் கடிகாரத்தைச் சரியான நேரம் காட்டும்படி திருப்பி வைத்து முட்களைச் சரி செய்கிறான்)

வாலம்: கடையிலே யாரு... தம்பு தம்பீ.... தம்பு தம்பீ....

தம்பு: வாங்க! வாங்க! வாலம்மா வாங்க... நம்பர் நூத்திப் பதினெண்ணு... கலர் டி.வி. நாலாந்தவணை ... நானூத்தி அம்பது ரூபா....

வாலம்: தம்பிக்கு ஞாபகம் கம்ப்யூட்டர் கணக்குத்தான்!

தம்பு: எல்லாம் இங்கே வந்த பிறகு தான்! (தனக்குள்) கணக்கும் இங்கிலீஷும் கடைசித் தவணையிலே தான் பாஸ் அப்போ!....

வாலம்: தம்பிக்குக் கடிகார ரிப்பேர் கூடத் தெரியுமா?

தம்பு: ரிப்பேருமில்லே அப்பாருமில்லே...

# தவணை தம்புசாமி





''எஸ்.எஸ்.எல்.சி. கூட பாஸ் பண்ணாத ஒருத்தர் பிரின்ஸ்பால். அவருக்குக் கீழே பத்து 'போஸ்ட் கிரேஜுவேட்' டீச்சர்ஸ்!''

''நம்பவே முடியலையே... எங்கே?''

''ஒரு நர்சரி ஸ்கூல்லேதான்...!''

— அ. தெய்வசிகாமணி.

இதோட மூணுதரம் முள்ளைத் தள்ளி வச்சிட்டேன். நின்னு நின்னு போவுது...

வாலம்: தவணைக் கடை கடிகாரம் தள்ளத் தள்ளத்தான் ஓடும்... நீங்க தந்த கலர் டி.வி. போல...

தம்பு: ஏன்... டீ.வி.யிலே என்ன ட்ரபிள்? பார்ட் பார்ட்டா வாங்கி அக்குவேறு ஆணிவேறா அலசி அசெம்பிள் செய்து கொடுத்ததாச்சே... உங்களுக்குத்தான் மொதல் தவணையிலே பொருள்...

வாலம்: என்ன பிரயோசனம்? படம் அப்பப்ப நின்னு போகுதே...!

தம்பு: படமா? பாட்டா? எது நின்னு போவுது?

வாலம்: படம் தெரிஞ்சா பாட்டு நின்னு போவுது.... பாட்டு கேட்டா படம் போயிடுது.... மாசா மாசம் தவணைத் தொகையோடு ரிப்பேருக்கு வேறே கொடுக்கணும் போல இருக்கு....

தம்பு: நான் மெகானிக்கை அனுப்பறேன்...

வாலம்: நீங்க அனுப்பற மெகானிக் கூட ரிப்பேரைத் தவணையிலே தான் செய்வான் போல இருக்கு... போன வாரம் வந்து பிரிச்சுப் பார்த்துட்டுப் பிறகு வர்றேன்னு போயிட்டான்....

தம்பு: புது ஆளா அனுப்பறேன்... தவணையைக் கட்டுங்க... தவணையிலே பணம் கட்டினால் படமும் தவணையிலே தான் தெரியும்.... ஒவ்வொரு தவணைக்கு ஒரு ஒரு கலர்தான் தெரியும்....!

வாலம்: அய்யய்யோ.... என்ன சொல்றே நீ?

தம்பு: சும்மா வேடிக்கைக்குச் சொன்னேன்.... தவணையைக் கட்டி முடிங்க...

வாலம்: முடிச்சால்?

தம்பு: புதுசா வேறே டீ.வி. தவணையிலே வாங்கலாமே!

வாலம்: புதுசா வாங்கினால் பழைய ட்ரபிள் இருக்காதா?

தம்பு: புது டீ.வி.யிலே புது ட்ரபிள்தான் வரும் (சிரித்து) பழைய டீ.வி.யிலே பழைய ட்ரபிள்!... சரி... சரி... ரசீது போடட்டுமா?

வாலம்: போடுங்க... இந்தாங்க பணம்! (பணம் கொடுத்து, ரசீது பெறுகிறாள்) (தாமதித்து) உங்க முதலாளி எப்ப வருவார்? அவர் வீடு எங்கே?

தம்பு: அவர் வீடெல்லாம் நமக்குத் தெரியாது... அவர் வண்டி கொஞ்சம் ட்ரபிள்... வழியிலே நின்னு நின்னு போகுதாம்...

வாலம்: ஏன், அவர் வண்டி கூடத் தவணை வண்டியா? தள்ளித் தள்ளி விடணுமா?

தம்பு: ரொக்க வண்டி வாங்கினால் முழுசாவே நின்னு போயிடுமாம்.... தவணை வண்டியாவது தள்ளத் தள்ளப் போகுமாம்.... அது கெடக்குது கழுதை... நீங்க போயிட்டு வாங்க... உங்க டீ.வி.க்கு நான் காரண்டி... போங்க மெகானிக்கை அனுப்பறேன்!

(போகிறான்)

## காட்சி — 3

இடம்: தம்பு சாமி வீடு.
காலம்: காலை
பாத்திரம்: தம்புசாமி, மனைவி, தம்புவின் தாய்.

(தம்பு சாமி உற்சாகமாகக் கிளம்ப, மனைவி வழியனுப்ப வருகிறாள்)

மனைவி: என்ன உற்சாகம் கரை புரண்டு ஓடுது....

தம்பு: இன்னைக்கு முதல் சம்பளமாச்சே!

மனைவி: முதல் தவணை சம்பளமாச்சே...

தம்பு: இருக்கட்டுமே... எந்த கலெக்டருக்கு மாசத்திலே மூணு சம்பளம் கிடைக்கும்?

மனைவி: ஏன் எங்க வீட்டுக்காரர் பில் கலெக்டருக்குத்தான்!

தம்பு: நான் பில் கலெக்டரா? தவணை மாளிகை மானேஜர்....

(தம்புவின் அம்மா வருகிறாள்)

அம்: ஏண்டா தம்பு, இன்னும் ஆபீஸ் போகலே?

தம்பு: இதோ கௌம்பிட்டேன்...

அம்: நல்ல ஆபீஸ் உனக்கு... ஏழு மணிக்குப்போனால், பதினொரு மணிக்குவந்துடறே... ஒரு மணிக்குப் போனால் நாலு மணிக்கு வர்றே... ஏழு மணிக்குப் போய்ப் பத்து மணிக்கு வர்றே....

தம்பு: தவணை கம்பெனி.... தவணை வேலை... தவணை சம்பளம்...

அம்: ஏண்டா தம்பு... ஒரு கிரைண்டர் எடுத்துண்டு வாயேன்... தவணையிலே கட்டிடலாம்...

தம்பு: கிரைண்டரா? மாவரைக்கவா? வேண்டாம்.... வேண்டாம்... அதை வாங்கிட்டுப் போனவங்க சொன்னாங்க... குழவி சுத்தலையாம்... தலைதான் சுத்துதாம் கிழவிக்கு...

மனைவி: சரி... கிரைண்டர் வேண்டாம்.... வீட்டு மனை தவணையிலே விற்கப் போறாங்கன்னு சொன்னீங்களே!

தம்பு: சொன்னேன்... ஏரித் தண்ணியை



### அருள்வாக்கு

ருத்ராக்ஷ மாலை என்றால் ருத்ரன் கண்ணிலிருந்து உண்டானதான ருத்ராக்ஷத்தைக் கோத்துச் செய்த மாலை என்று அர்த்தம். 'அக்ஷம்' என்றால் இங்கே 'கண்' என்று பொருள். 'திருக்கண்மணி' என்றே ருத்ராக்ஷத்துக்குத் தமிழில் பேர் உண்டு. அது சரி, வெறுமே அக்ஷ மாலை, ஸ்படிக அக்ஷ மாலை என்றெல்லாம் சொன்னால் என்ன அர்த்தம்? இங்கே 'அக்ஷம்' என்றால் கண் என்று பொருள் கொண்டால் சரியில்லை. ஆகவே இங்கே அக்ஷம் என்றால் அ விலிருந்து க்ஷ வரையிலான அக்ஷரங்கள் என்று அர்த்தம் பண்ணிக் கொள்ள வேண்டும். ஸம்ஸ்கிருதத்துக்கான லிபியில் முதல் எழுத்து அ; கடைசி எழுத்து க்ஷ. இங்கிலீஷில் ஒரு விஷயத்தை அடியோடு நுனி சொல்வதற்கு **A to Z** என்கிற மாதிரி ஸம்ஸ்கிருதத்தில், "அகாராதி க்ஷகாராந்தம்" என்பார்கள். இப்படி உள்ள மொத்த எழுத்துக்கள் 50. அதனால், 50 மணி கொண்ட ஜப மாலைக்கு அக்ஷ மாலை என்று பெயர். 51 வது மணியாக ஒரு பெரிய மணி இருக்கும். அதற்கு மேரு என்று பேர். மேருவைத் தாண்டாமல் ஸூரியன் திரும்பி விடுவதாக ஐதீகம். அம்மாதிரியே ஜபம் செய்கிறவர்கள் இந்த மேரு வந்ததும் திருப்பி உருட்டினால் ஒரு தரம் இப்படி முன்னும் பின்னுமாக ஜபித்து முடிக்க நூறு ஆவிருத்தி மந்திரமாகியிருக்கும்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

எறைக்கத் தவலையிலே ஆளு வச்சு... தண்ணி வடியற போதுதான் கொஞ்சம் கொஞ்சமா வீடு கட்டணும்!

அம்: உங்க கம்பெனியை நீயே மட்டமா பேசலாமாடா தம்பு....? கிரைண்டரும் வேண்டாம் நிலமும் வேண்டாம்... கொஞ்சம் பூவும் பழமும் வாங்கிண்டு வா போதும்...

தம்பு: இந்தத் தவலை சம்பளத்துக்குப் பூ..... அடுத்த தவலைக்குப் பழம்....

## காட்சி — 4

இடம்: தனகோடி தவலை மாளிகை வாசல்.

காலம்: காலை

பாத்திரங்கள்: தம்புசாமி, மக்கள், வாலம்மான், போலீஸ்.

(கடை வாசலில் கூட்டம்... தம்பு சாமி வருகிறான்)

தம்பு: என்ன கூட்டம்? என்ன கலாட்டா இங்கே? ஏதாவது களவா?

மக் 1: வாங்க, மானேஜரா? வாங்க... களவாணிப்பசங்க கடையை மூடிட்டுப் போயிட்டாங்களா?

தம்பு: ராவுலே கடையை மூடாமல் தெறந்து வச்சிட்டுப் போவாங்களா? இதோ சாவி.... நானே திறக்கிறேன்... முதலாளி முன்னாலே வரலையா?

மக் 2: உங்க மொதலாளி ராத்திரியே வந்து கடையைத் திறந்து சாமானை எல்லாம் எடுத்துட்டு லாரியிலே ஓடிட்டாராம்...

தம்பு: லாரியிலே எப்படி ஓட முடியும்? உட்கார்ந்து தானே போக முடியும்... சும்மாயிருங்க... கடையைத் திறந்து பார்ப்போம்... நானே ஆயிரத்தைந்நூறு டெபாசிட் கட்டியிருக்கேன்... இன்னும் ஒரு சம்பளம் வாங்கலை....

மக் 3: கடையைத் திறங்க சீக்கிரம்... உங்க சம்பளம்... டெபாசிட் தொகைக்காவது ஏதாவது இருக்கா பாருங்க....

(கதவைத் திறக்கிறான் தம்புசாமி)

தம்பு: அய்யய்யோ கடை கம்ப்ளீட்டா காலி! மொரமும் தொடப்பமும்தான் மிச்சம்!

மக் 4: மொறத்தாலே மொத்துங்கடா மானேஜரை!

மக் 5: தொடப்பத்தை எடுத்து விளாசுங்கம்மா

(படபடவெனத் தர்ம அடிகள் விழுகின்றன)

தம்பு: அய்யோ! அய்யோ! மூச்சுவிட டயம் கொடுத்து, விட்டு விட்டு அடிங்க அய்யா... தவலைக் கடை மானேஜருக்குச் சம்பளமே தவலையிலேதான்னு சொன்னான்... அடி மட்டும் மொத்தமா விழுதே...

மக் 4: பல் மொத்தமா விழற மாதிரி கொடுங்கடா!

வாலம்: இவருதானே பணத்தை வாங்கி வாங்கிக் கொடுத்தாரு...

மக் 2: அதோ போலீஸ் வந்துட்டுது...

தம்பு: போலீசா... அவங்க யாரும் பணம் கட்டலையே!

வாலம்: உன்னைக் கட்டி இழுத்திட்டுப் போவாரு ஜெயிலுக்கு...

தம்பு: ஜெயிலுக்கா?

மக்: மானேஜராச்சே.... மூணு வருசம் நிச்சயம்...

தம்பு: அய்யய்யோ, மொத்தமாவா...? எம் மனோன்மணியைப் பார்க்க வாரா வாரம் அனுப்பி வச்சு எத்தனை வருசம் போட்டாலும் பரவாயில்லை....

போலீஸ்: ஜெயில் கூடத் தவலை தண்டலையா? நடய்யா ஸ்டேஷனுக்கு!

(போகின்றனர்)



* கோவிலின் உட்புறத் தோற்றம்.

முருகானந்தம் நடத்தி வந்தசிறு தொழிலில்ஏராளமாக நஷ்டம்! மிகுந்த மன வருத்தத்தோடு தொழில் விஷயமாகப் பெங்களூர் சென்றவர், தமது சொந்த ஊரான குடியாத்தத்துக்கு லாரியில் திரும்பிக் கொண்டிருந்தார். லாரி தொண்ணூறு கி. மீ. வேகத்தில் விரைந்து கொண்டிருந்தது. டிரைவரைத் தவிர பத்து நபர்கள் லாரிக்குள் நெருக்கியடித்து உட்கார்ந்திருந்தனர். முன்னால் சென்ற இன்னொரு லாரியை முந்திச் செல்ல முயன்ற போது, முருகானந்தம் பயணம் செய்த லாரியின் டயர் திடீரென்று வெடித்து விடவே, லாரி தறிகெட்டு ஓடியது. 'சரி; இன்று கூண்டோடு கைலாசம்தான்' என்ற முடிவுக்கு வந்துவிட்டார் முருகானந்தம். அதுவரை கடவுள் வழிபாட்டில் சிறிதும் ஈடுபாடில்லாமல் இருந்த அவருக்கு, அந்தச் சமயத்தில் ஏதோ பத்திரிகையில் படித்த மேல் மருவத்தூர் கோவிலைப் பற்றிய ஞாபகம் திடீரென்று வந்தது. 'அம்மா' என்று அடிவயிற்றிலிருந்து குரலெழுப்பினார்.

லாரி ஒரு புளிய மரத்தில் மோதி, ஏகமாகச் சேதம் அடைந்தது. லாரியிலிருந்த முருகானந்தத்தைத் தவிர மற்ற அனைவருக்கும் படுகாயம்! தன்னைக் காப்பாற்றியவள் மேல் மருவத்தூர் ஆதிபராசக்திதான் என்ற அசைக்க முடியாத நம்பிக்கை அன்று முருகானந்தத்துக்கு ஏற்பட்டது. உடனேயே மருவத்தூர் விரைந்தார். அன்னையை வழிபட்டு, பங்காரு அடிகளாரைச் சந்தித்து அவரது ஆசியையும் பெற்றார். முருகானந்தம் ஊர் திரும்பிய போது, மிகச் சிக்கலாக இருக்கும் என்று டாக்டர்கள் எச்சரித்திருந்த அவரது மனைவியின் பிரசவம் சுகப்பிரசவமாக முடிந்திருந்தது. இதையும் அன்னையின் அருளாகவே ஏற்றார். விரைவில், நசிந்த தொழில் நன்கு நடக்க ஆரம்பித்தது. இருள் சூழ்ந்திருந்த அவர் வாழ்க்கை ஆதிபராசக்தியின் அருளால் மீண்டும் பிரகாசிக்க ஆரம்பித்தது.

சமீப காலமாக மிகவும் பிரபலமாகி விட்ட மேல்மருவத்தூருக்கு ஆதிபராசக்தியின் அருளைப் பெற வேண்டி, முருகானந்தத்தைப் போன்ற ஆயிரக்கணக்கான பக்தர்கள் தினமும் வருகிறார்கள். சென்னை — திருச்சி தேசிய நெடுஞ்சாலையில் மதுராந்தகத்தைத் தாண்டி இருக்கும்கோயிலுக்குநாமும் செல்கிறோம்.

கோயிலின் முன்புறம், — சாலையிலேயே — 'ஓம் சக்தி' என்ற மந்திரம் பொறிக்கப்பட்ட மேடை. இந்த மேடையில் அன்னையின் கையில் உள்ள சூலம் நடப்பட்டுள்ளது. பக்தர்கள் இந்தமேடையை வலம் வந்து, கற்பூர ஆரத்தி காட்டுகிறார்கள். மேடையைத் தாண்டிக் கோயிலுக்குள் நுழைந்தால் நான்கு கால் மண்டபம், இதையடுத்து எண் கால் மண்டபம், அதனையடுத்துக் கருவறை. அன்னையின் எதிரே சிம்ஹ வாகனம், பலிபீடம், உருவமற்ற பரிவாரத் தேவதைகள். கருவறைக்குத் தென்புறம், புற்று மண்டபம். அதையடுத்துச் சப்த கன்னியர் கோயில். சப்த கன்னியர் கோயிலில் இருக்கின்ற சப்த மாதர்களும், உருவம் இல்லாத குறியீடுகளாகவே அமைக்கப்பட்டுள்ளனர். இந்தக் கோயிலின் எதிர்ப்புறம், அமைந்துள்ளது அதர்வண பத்ரகாளி கோயில்.

மற்ற கோயில்களில் இல்லாத பல சிறப்புகள் இங்கே இருக்கின்றன என்கிறார்கள். அன்னையின் சிலை அமர்ந்த கோலத்தில் இருக்கிறது. தாமரைப் பீடத்தில் வலது காலை மடித்தும், இடது காலை ஊன்றியும் அமர்ந்திருக்கிறாள் அன்னை. இந்த ஊரில் மட்டும்தான் அமர்ந்த திருக்கோலத்தில் இரண்டு கைகளுடன் அன்னை காட்சி தருகிறாள். (மதுரையில் இரண்டு கைகளுடன் காட்சியளித்தாலும் அங்கு நின்ற கோலம்.)



* அடிகளார், மனைவியுடன்.

# மேல்மருவத்தூர்:

# ஆதிபராசக்தி அருள் பெருகட்டும்!

அன்னை ஆதிபராசக்தி மனித வடிவத்துடன் விளங்கிய இடங்களில் மட்டுமே அவளை இரண்டு கைகளுடன் படைப்பார்களாம்.

ஆகம விதிகளின்படி இந்தக் கோயில் கட்டப்படவில்லைஎன்பதுகுறிப்பிடத்தக்கது. இங்கு முறையாகக் கும்பாபிஷேகமும் செய்விக்கப்படவில்லை. இருப்பினும் தெய்வ சாந்நித்தியம்துலங்குகிறது. அன்னைபராசக்தி காந்தமெனப் பக்தர்களை ஈர்க்கிறாள். அவர்கள் ஒவ்வொருவரும் கோயிலின் சாந்நித்தியத்தை அனுபவித்து உணர்ந்துள்ளனர்.

மரபாக வந்த வேறு பல விஷயங்களும் மேல்மருவத்தூரில் பக்தர்களின் மனநிறைவுக்காக, மீறப்பட்டிருக்கின்றன.

* பெண்கள் எல்லா நாட்களிலும் கருவறைக்குள்ளேயே சென்று அன்னையைத் தொட்டுப் பூஜை, அபிஷேகம், அலங்காரம் செய்யலாம்.
* எந்த மதத்தினரும் கோயிலுக்குள் வரலாம்.
* அர்ச்சனைகள் தமிழில்தான் செய்யப்படுகின்றன.

சிவப்பு ஆடை உடுத்திய பக்தர்கள், சாரி, சாரியாக அன்னையை வழிபட்டுச் செல்கின்றனர். 'ஓம் சக்தி' என்று பக்தர்கள் மனம் விட்டு, வாய்விட்டுக் கூவுவது எங்கும் எதிரொலிக்கிறது. பிராகாரத்தைச் சுற்றி வரும் போது பலர் சிரத்தையுடன் அங்கப் பிரதட்சணம் செய்வதைப் பார்க்கிறோம். பக்தர்கள் ஒருவரையொருவர் சந்தித்துக் கொள்ளும் போது, 'ஓம் சக்தி' என்று முகமன் கூறிவிட்டுத்தான் பேச ஆரம்பிக்கின்றனர். காணிக்கை செலுத்த நின்றிருக்கும் ஈரோடு தங்கவேல் என்பவர் "இன்றுகாலைநினைத்துக் கொண்டேன். புறப்பட்டு வந்துவிட்டேன். மனத்தில் அமைதி ததும்புகிறது. அடுத்தமுறைவரும் வரை இந்த நிம்மதி அப்படியே நிலைத்திருக்கும்" என்கிறார்.

அச்சிறுப்பாக்கம் முன்னாள் எம். எல். ஏ. கணேசன், "தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்தவர்கள் சில கோயில்களுக்குள் அனுமதிக்கப்படுவதில்லை. ஆனால் இந்தக் கோயிலில்தான் கருவறைக்குச் சென்று பூஜை செய்யும் பாக்கியத்தை எல்லோரும் பெறுகின்றனர்" என்று உள்ளார்ந்த சந்தோஷத்தோடு சொல்கிறார்.

கோயில் பிரபலமாகாத காலத்தில் இருந்தே அங்கு வருகிறாராம் கணேசன். சப்த கன்னியர் சன்னதி, ஆதி திராவிட வகுப்பைச் சேர்ந்தவர் கட்டிக் கொடுத்தது தான் என்றும் கூறுகிறார் அவர்.

கோயில் நிர்வாகத்தில் பொறுப்பேற்றிருக்கும் மாரிமுத்துவைச் சந்திக்கிறோம். "இந்தக் கோயிலில் தைப்பூசம், ஆடிப்பூரம், நவராத்திரி ஆகியவை விசேஷமாகக் கொண்டாடப்படும். சித்ரா பௌர்ணமி தமிழ்ப் புத்தாண்டு தவிர ஆங்கிலப் புத்தாண்டு, கிறிஸ்துமஸ், ரம்ஜான் ஆகிய பண்டிகைகளும்இங்கேகொண்டாடப்படுகின்றன" என்கிறார்.

"அன்னையின் சன்னதியைநன்றாகப் பார்த்தீர்களா? அவள் திருவடியில் மயில் தோகை வைத்திருப்பதையும், எதிரில் மெழுகுவர்த்தி ஏற்றி வைக்கப்பட்டிருப்பதையும் கவனித்தீர்களா?" என்று கேட்கிறார்.

நவராத்திரி விழாவில் இன்னொரு புதுமையும் இங்கே உண்டாம். தங்கள் ஊரைத் தவிர வேறு எதையும் பார்க்காத ஏழை மக்களைப்



* கோயில் முன்புள்ள மேடை

* ஹரிஹராம்பாள்

பக்திச் சுற்றுலாவுக்கு பஸ்ஸில் அழைத்துச் செல்கிறார்கள் மேல்மருவத்தூர் கோயில் நிர்வாகத்தினர்.

மாரிமுத்து தொடர்ந்து கூறுகிறார்: "பக்தர்கள் வெகு தொலைவில் இருந்து வருவது மிகவும் கஷ்டமாக இருந்ததால் ஊருக்கு ஊர் வார வழிபாட்டு மன்றங்கள் என்று ஏற்படுத்தியிருக்கிறோம். இந்த மன்றங்கள் ஆன்மீகப் பணியில் மட்டுமல்ல; சமுதாயப் பணியிலும் ஈடுபட்டிருக்கின்றன. மன்றங்கள் — வெறும் பஜனை மடங்களாய் ஆகிவிடக் கூடாது என்பது பங்காரு அடிகளாரின் எண்ணம். அரசாங்கத்தாலும் சமுதாயத்தாலும் புறக்கணிக்கப்படும், ஏழை எளியகுடும்பங்களுக்கு உதவிபுரிவது, அவர்களுக்கு உழைத்துப் பிழைக்க வழி செய்து தருவது ஆகிய பணிகளையும் மன்றங்கள் ஆற்றி வருகின்றன.

"விதவைகளுக்குத் தையல் யந்திரம் தருதல்; கறவை மாடுகள், ஆடுகள் வாங்கித் தருதல்; ஆடை தானம், அன்னதானம் (இவை கட்டாயம் செய்ய வேண்டியது); 'பிடி' அரிசித் திட்டம் மூலம் அரிசி சேமித்துப் புயல், தீவிபத்து போன்ற நாட்களில் பாதிக்கப்பட்டோருக்கு வழங்குதல்; யாருமற்ற அநாதைகள் இறந்தால் மன்றத்தினரே அடக்கத்திற்கான ஏற்பாடுகளைச் செய்தல்; பாழடைந்த கோயில்களுக்குச் சென்று விளக்கேற்றி வைத்தல்; விடுதலை பெற்று மனம் திருந்திய கைதிகளுக்கு உழைத்துப் பிழைக்க வழி செய்து தருதல்; வறுமை காரணமாக விபசாரத்தில் பெண்கள் இறங்கினால், நேர்மையாக, ஒழுக்கமாகப் பிழைக்க, தையல் யந்திரம், தட்டச்சு யந்திரம் வாங்கிக் கொடுத்தல் — என்று மன்றங்களின் நற்பணிகளை அடுக்கிக் கொண்டே போகிறார்.

1500 க்கும் மேற்பட்ட வார வழிபாட்டு மன்றங்கள் இருக்கின்றன என்றும் மலேயா, சிங்கப்பூர், அமெரிக்கா, சைனா என்று அவை உலகெங்கும் பரவியிருக்கின்றன என்றும் அறிகிறோம்.

"ஒவ்வொரு நாளும் கோயில் பணி ஏதேனும் ஒரு வார வழிபாட்டு மன்ற உறுப்பினர்களால் செய்யப்படுகிறது. மறுநாள் கோயில் பணி செய்ய வேண்டிய மன்றத்தினர் முதல் நாள் சன்னதி மூடும் முன்பே வந்து விடுகிறார்கள். பின்னர் கோயில் பிராகாரத்தில் படுத்துக் கொண்டு அதிகாலை இரண்டு மணிக்கெல்லாம் விழித்தெழுந்து கோயிலைச் சுத்தம் செய்து, அன்னைக்கு அபிஷேகம் செய்து, அலங்காரம் செய்கிறார்கள். அன்று முழுவதும் கோயிலுக்கும், கருவறைக்கும் அவர்கள் பொறுப்பாக இருந்து செயல்படுகிறார்கள். அன்று இரவு எட்டு மணி வரை பணி செய்து, அடுத்து எந்த மன்றம் வருகிறதோ அதனிடம் பணியைக் கொடுத்து விட்டுச் செல்கிறார்கள். இதனால் இந்தக் கோயிலுக்கு என்று தனிப்பட்ட ஊழியர்களோ அர்ச்சகர்களோ கிடையாது" என்று சொல்லி நம்மைமேலும்ஆச்சரியத்தில் ஆழ்த்துகிறார் மாரிமுத்து. சபரிமலைக்குச் செல்வது போலவே 'இருமுடி' கட்டிக் கொண்டு இந்தக் கோயிலுக்கு வருபவர்களும் உண்டாம். நாம் செல்லும் தினத்தில் குரோம்பேட்டை மகளிர் மன்றம் கோயிலுக்குப் பொறுப்பாக இருக்கிறது. அந்த மன்றத்தைச் சேர்ந்த ஹரிஹராம்பாள் என்பவரைச் சந்திக்கிறோம். அவர் மிகவும் மகிழ்ச்சியுடன் பேசுகிறார்:

"நான் 1982 இல் இருந்தே இந்தக் கோயிலுக்கு வந்து கொண்டிருக்கிறேன். அன்னையைத் தொட்டு அபிஷேகம், அலங்காரம் செய்யும் பணி, பெண்களாகிய எங்களுக்குக் கொடுக்கப்பட்டது பெரும் பேறு. இதைப் போல மனத்துக்கு நிம்மதியான செயல் வேறு எதுவும் இல்லை. ஆண் — பெண் அனைவரும் சமம் மட்டுமல்ல; சக்தியின் அருளாலேயே இவ்வுலகம் இயங்குகிறது என்பதன் அடையாளமாக இங்கு பெண்களுக்குப் பல அரிய பொறுப்புக்கள் கொடுக்கப்பட்டிருக்கின்றன. வேள்விகள், கலச பூஜைகள் ஆகியவைகளை மகளிரே செய்கிறார்கள்."

ஆதிபராசக்தியின் திருவருள் வல்லமையால் வார வழிபாட்டு மன்ற உறுப்பினர்



* மருத்துவப் பணி



* அன்னதானம், மக்களுடன்.



* பாலிடெக்னிக் வகுப்பறை.

* பொறியியற் கல்லூரி.

களின் எண்ணிக்கை கூடிக் கொண்டே போகிறது என அறிந்து மகிழ்கிறோம்!

மேல்மருவத்தூர் கோயில் வளர்ச்சியடைந்ததற்கு முழுமுதற் காரணமாக இருந்தவர் பங்காரு அடிகளார்தான் என்பது யாவரும் அறிந்ததே. 1970 ன் இறுதிவரை, இன்று கோயில் உள்ள இடத்தில் ஒரு கூரைக் கொட்டகைதான் இருந்ததாம். அதனுள் சுயம்புவாகத் தோன்றிய ஆதிபராசக்தி எளிமையாகக் கொலுவிருந்தாள். பங்காரு அடிகளார் செவ்வாய், வெள்ளி, ஞாயிறு ஆகிய நாட்களில் குறி (அவரது பக்தர்கள் அருள்வாக்கு என்கிறார்கள்.) சொல்லுவார். குறி கேட்க வந்த கூட்டம் கொஞ்சம் கொஞ்சமாகப் பெருகியது. கோயிலுக்கு வந்தவர்களின் எண்ணிக்கையும் கூடிக் கொண்டே போயிற்று. சுயம்புவிற்குப் பின்னால் ஆதிபராசக்தியின் சிலை 1977 இல் பிரதிஷ்டை செய்யப்பட்டது.

பங்காரு அடிகளார் பள்ளி ஆசிரியராக இருந்தவர். அவரது சொந்த ஊர் மேல்மருவத்தூர்தான். கொஞ்சம் வசதியான குடும்பம். சிறு வயதிலேயே பங்காரு அடிகளின் மேல் அன்னை ஆதிபராசக்தி புகுந்து கொண்டு, பல அதிசயங்களை நிகழ்த்தியிருக்கிறாள் என்று சொல்கிறார்கள். ஒருமுறை அடிகளாரின் தந்தை கோபால் நாயக்கரிடம், தான் சுயம்புவாகத் தோன்றப் போவதாகத் தெரிவித்தாளாம் அன்னை. 'என் நிலத்திலேயே நீ சுயம்புவாக வர வேண்டும்' என்று கோபால் நாயக்கர் வேண்டவே, அவருக்குச் சொந்தமான நிலத்திலேயே, முதலில் புற்று வடிவமாகவும், பின்னர் சுயம்புவாகவும் வெளிப்பட்டாளாம் அன்னை.

மேல்மருவத்தூர் சுற்றுவட்டாரமே அந்தக் காலத்தில் பல சித்தர்கள் வசித்த இடமாக இருந்திருக்கிறது. அன்னை ஆதிபராசக்தியே பெண் சித்தர் வடிவத்தில் இங்கு அவதரித்து இருக்கிறாள் என்றும் அந்தப் பெண் சித்தரின் அம்சம்தான் பங்காரு அடிகளார் என்றும் பக்தர்கள் ஆத்மார்த்தமாக நம்புகிறார்கள்.

ஆதிபராசக்தி பக்தர்களால் அன்புடன் 'அம்மா' என்று அழைக்கப்படும் அடிகளாரைச் சந்திக்கிறோம். ''குறி சொல்வதன் மூலம் தான் மனிதர்களைக் கவர்ந்து பின்னர் அவர்களைப் பக்திமார்க்கத்துக்குத் திருப்ப வேண்டுமா?'' என்ற ஐயத்தை எழுப்புகிறோம்.

''அவர்கள் சுயநலத்துக்காகத் தான் வருகிறார்கள் என்றாலும், அவர்கள் குறைகளைத் தீர்த்து ஆன்மீகப் பணிகளிலும், தெய்வப் பணிகளிலும், சமுதாயப் பணிகளிலும் அவர்களைத் திசை திருப்பி விடுகிறேன். மெல்ல, மெல்ல பக்தியை ஊட்டுகிறேன். இன்றைய இயந்திர உலகில் ஆன்மீகம் மெல்ல அழிந்து வருகிறது. அதைத் தடுத்து நிறுத்தியே ஆக வேண்டும்.'' என்கிறார் அடிகளார்.

பெண்களை எல்லா நாட்களிலும் கோயிலுக்கு வர அனுமதிப்பது, அவர்களை அம்மனுக்கு அபிஷேகம், அலங்காரம் செய்ய அனுமதிப்பது போன்ற மரபு மீறல்களை அனுமதிக்கத் துணிந்தது பற்றிக் கேட்கிறோம். ''மகளிரின் அடிமனக் குமுறலைப் புரிந்து கொண்டே இந்த ஏற்பாடு செய்யப்பட்டது. நாடும் வீடும் நன்கு இருக்க வேண்டுமானால், உலகில் ஆன்மீகம் தழைத்தோங்க வேண்டுமானால், பெண்கள் எல்லாவற்றிலும் பங்கு பெற வேண்டும். உடற்கூறு வித்தியாசங்களைப் பாராட்டி அதன் காரணமாக அவர்களை நாம் ஒதுக்கக் கூடாது'' என்று தெளிவாகக் கூறுகிறார் அடிகளார்.

மேல்மருவத்தூரில் சுயம்பு வெளிப்பட்ட பின்னர், ஆதிபராசக்தியின் சிலை பிரதிஷ்டை செய்ய ஏற்பாடு செய்யப்பட்டது. ஓர் ஆலயத்தில் சிலை பிரதிஷ்டை செய்யும் முன் 108 ஊர்களுக்கு ஊர்வலமாக அந்தச் சிலையுடன் செல்ல வேண்டும். அவ்வாறே ஆதிபராசக்தியின் சிலையும் ஊர் ஊராகக் கொண்டு செல்லப்பட்டது. காஞ்சிபுரத்தில் சிலையுடன் பங்காரு அடிகளார் சங்கரமடத்திற்குச் சென்றார். அடிகளாரும் — பரமாச்சாரியாரும் சந்தித்த காட்சி இன்றும் நினைவை விட்டு அகலவில்லை என்று சொல்கிறார்கள் பக்தர்கள். இருவரும் ஒருவரை ஒருவர் பார்த்தவுடன் கை கூப்பி

* அறநிலையம் கட்டித் தரும் இலவச வீடு.

* வெங்கடசாமி



• எம். தங்கவேலு



• கோவிந்தராஜுலு



• சுப்ரமணிய பிள்ளை



• மாரிமுத்து

நின்றூர்கள் என்றும் அந்தக் காட்சியைப் பார்த்த பக்தர்கள் புல்லரித்துப் போய் நின்றூர்கள் என்றும் கூறுகிறூர்கள்.

அடிகளாரின் மனைவி லட்சுமி அம்மையார் ஒரு பள்ளியில் ஆசிரியையாக இருக்கிறூர். அவர்களுக்கு இரண்டு மகன்கள், இரண்டு மகள்கள். அடிகளாரின் வீடு கோயிலுக்கு ஒரு கிலோ மீட்டர் தூரத்தில் இருக்கிறது. வீட்டிலிருந்து கோயிலுக்கு சைக்கிளில் வந்து செல்கிறூர்.

இன்று பங்காரு அடிகளிடம் குறி (அருள் வாக்கு) கேட்க வரும் பல அரசியல் கட்சிக் காரர்கள், நீதிபதிகள், மந்திரிகள், பெரிய தொழிலதிபர்கள், யாவருமே ஆதிபராசக்தியின் அருளுக்குப் பாத்திரமாகி வாழ்க்கையில் பிரகாசித்துக் கொண்டிருக்கிறூர்கள். அடிகளாரின் கோயிலுக்குக் குறி கேட்க வந்த பல நாத்திக அன்பர்கள் மனம் திருந்திப் பக்தி மார்க்கத்தில் இறங்கியிருக்கிறூர்கள். கோயிலில் அர்ச்சனைக்குச் சொல்லப்படும் மந்திரங்கள், மனம் திருந்திய மூன்று நாத்திக அன்பர்கள் எழுதியவை தாம்!

ஆரம்ப காலத்தில் மூன்று முழு நாட்கள் தவிர அமாவாசை, பௌர்ணமி போன்ற நாட்களில் குறி சொல்லி வந்த அடிகளார் தற்போது அதை மிகவும் குறைத்துக் கொண்டிருக்கிறூர். காலம் செல்லச் செல்லக் குறி (அருள்வாக்கு) இல்லாமலே போய் விடும் என்கிறூர்கள் அடிகளாரின் பக்தர்கள்.

எத்தனையோ கோயில்கள் இருக்கின்றன. ஒன்றும் சரியாகப் பராமரிக்கப்படுவதில்லை. அரசாங்கமும் இதைப் பற்றிக் கவலைப்படுவதாகத் தெரியவில்லை. இந்த நிலையில், இந்தக் கோவிலைப் பெரிதாக்கினாலும் மற்ற கோயில்கள் போல் இதைப் பராமரிப்பதும் கஷ்டமாகிவிடும். ஆகவே இதை இருக்கும் நிலையிலேயே விட்டு விட்டு, ஓர் அறக்கட்டளையை நிறுவி, அதன் மூலம் ஏழைகளின் துயர் துடைக்க, சாதி, சமய வேற்றுமைகளைக் கடந்து மருத்துவமனை, கல்விக் கூடங்கள் முதலியன திறக்க வேண்டும் என்பது அடிகளாரின் நெடுநாளைய கருத்து.

அருள்வாக்கின் போது அவரால் மொழியப்பட்ட கட்டளைகளைச் சிரமேற்கொண்டு ஆதிபராசக்தி கல்வி, மருத்துவ, பண்பாட்டு அறநிலையம் உருவாக்கப்பட்டது. குறுகிய காலத்தில் இந்த அறநிலையம் செய்துள்ள சாதனைகளைப் பொருளாளர் ஏ. கே. வெங்கடசாமி விளக்குகிறூர்:

"இன்று மேல்மருவத்தூர் கோயிலின் எதிரில் எழும்பியிருக்கும் கட்டிடங்கள், பின்னல் தெரியும் பொறியியல் கல்லூரி, ஆகியவை அறநிலையத்தின் கட்டுக்கோப்பான பணிக்கு எடுத்துக் காட்டுக்கள்.

"சமுதாயத்தை மறந்து எந்தச் சமயமும் இயங்க முடியாது. இந்து சமயம் இடைக் காலத்தில் இந்த விஷயத்தைக் கவனிக்காமல், இயங்கியதால்தான் பல அவலங்கள் ஏற்பட்டன. இதை உணர்ந்துதான் ஆதி பராசக்தி இயக்கம் அடிகளாரின் கட்டளையின் பேரில் சமுதாயப் பணிக்கு முதலிடம் கொடுக்கிறது."

பாலிடெக்னிக்கைச் சுற்றிப் பார்க்கிறோம். சிவப்பு உடையணிந்த மாணவர்களைப் பார்த்து விட்டு (ரத்தம் ஒரே நிறம் என்பதைக் குறிக்கத்தான் சிவப்பு நிறத்தைத் தேர்ந்தெடுத்துள்ளார்கள் என அறிகிறோம்) முதல்வர் கோவிந்தராஜுலுவிடம் "இங்கு சிவப்பு உடை கட்டாயமா? வேறு சமயத்தவர் வந்தால், ஆதிபராசக்தியை வழிபடக் கட்டாயப்படுத்தப்படுவார்களா?" என்று கேட்கிறோம்.

"நோ.. நோ..." நாங்கள் யாரையும் வற்புறுத்துவதில்லை. மாணவர்களே இந்தச் சூழலுடன் ஒன்றிவிடுகிறூர்கள் என்கிறூர் அவர்.

"காஞ்சிபுரம், கலவைக்குப் பக்கத்தில் ஆயிரம் ஏக்கரில் அமையவிருக்கிறது ஆதி



• கணேசன்

பராசக்தி பல்கலைக் கழகம். விஞ்ஞான, பொறியியல், விவசாயக் கல்லூரிகள் அங்கு வர இருக்கின்றன. இந்தப் பல்கலைக் கழகத்துக்கு முதன் முதலாக நூறு ஏக்கர் நிலத்தைத் தானமாக அளித்துள்ளது காஞ்சி சங்கர மடம்'' என்று கூறிப் பெருமைப்படுகிறார் வெங்கடசாமி.

''தற்போது அவசரத் தேவைக்காக மூன்று படுக்கைகள் கொண்ட மருந்தகம் வைத்திருக்கிறோம். இரண்டாயிரம் படுக்கைகள் கொண்ட மருத்துவ மனையும், மருத்துவக் கல்லூரியும் வர இருக்கின்றன. தற்போது இரண்டு மருத்துவர்கள் நிரந்தரமாக இருந்து சுற்று வட்டார மக்களுக்குச் சேவை செய்து வருகிறார்கள். ஞாயிற்றுக் கிழமைகளில் சென்னையில் இருந்து நிபுணர்கள் வருகிறார்கள். அடிக்கடி, மருத்துவ முகாம்கள் நடக்கின்றன.

''எதிர்காலத் திட்டம் ஏராளமாக உண்டு. பல்கலைக்கழகம் வரப் போவதால், சட்டக் கல்லூரி, செவிலியர் கல்லூரி போன்றவை வர இருக்கின்றன.'' என்று அடுக்கிக் கொண்டே போகிறார் வெங்கடசாமி.

''நிதி வசதி...?'' என்று நாம் சந்தேகம் எழுப்புகிறோம்.

''எந்தப் பணியையும் ஆரம்பிக்கும் போது கையில் காசில்லாமல் தான் ஆரம்பிக்கிறோம். செய்யச் செய்ய, நிதி வந்து குவிந்து விடுகிறது. எல்லாம் 'அவளின் செயல்'' என்று பக்தியுடன் கூறுகிறார் வெங்கடசாமி.

ஆதிபராசக்தி அறநிலையம் செய்து வரும் இன்னொரு சிறப்பான பணி ஏழைகளுக்கு இலவசமாக வீடு கட்டித் தருவது என்று அறிகிறோம். இந்தப் பணிக்குப் பொறுப்பாக இருக்கும் சுப்பிரமணியப் பிள்ளை ''சென்னையிலும் தென்னார்க்காட்டிலும் வீடுகள் கட்டி முடித்து விட்டோம் மற்ற மாவட்டங்களிலும் இந்தப் பணி தொடரும்'' என்கிறார்.

ஏழை மக்களின் வீட்டுத் திருமணங்களை நடத்துவது, கடன்பட்டுள்ள விவசாயிகளின் கடனைத் திருப்பிச் செலுத்த உதவுவது, வெள்ளம் வறட்சி காலங்களில் பாதிக்கப்பட்ட கிராம மக்களுக்கு உதவுவது என்று நீளும் அறப்பணிகளின் பட்டியல் நம்மை அசத்துகிறது.

பராசக்தி கருணையே வடிவமானவள். அந்தக் கருணை விருட்சத்தின் கிளைகளாக இன்று அடிகளாரும், அவர் தலைமையில் அன்னையின் பக்தர்களும் ஆத்மார்த்தமான அன்புடன் சேவைகள் செய்து வருவது போற்றப்பட வேண்டிய விஷயம்.

அன்னை பராசக்தி அருள் பரவட்டும்!

— ப்ரியன்

மேலட்டை வண்ணப்படம்,
புகைப்படங்கள்: யோகா

## அடுத்த இதழ்...



* ஜெயலலிதாவின் எதிர்காலம் என்ன?

— கவர் ஸ்டோரி

* கலெக்டர் மாறினாலும் கவனம் தடைப்படவில்லை!

— புதுக்கோட்டை ரீ–விசிட்



# ஜெய ஜெய துர்கா



ஸ்ரீமத் புவனேஸ்வரி ஸ்வாமிகள்.

ஸர்வமங்களங்களையும் அளிப்பவள் எம்பெருமாட்டி. அகில உலகத்திற்கே தாயானவள் இவள். ராஜராஜேச்வரி, புவனேஸ்வரி, காமாட்சி, துர்க்கை என்ற திருநாமங்களோடு போற்றப்படுகிறாள். கலியுகத்தில் பிரத்யக்ஷ தெய்வமாக விளங்கும் துர்கா பரமேஸ்வரி, பக்தி ஒன்றையே தன் பக்தனிடம் எதிர்பார்க்கிறாள்.

துர்கா தேவி ஆற்றல் வடிவினள். இடையூறுகளைத் தவிர்த்து, புயல் போல் பாய்ந்து, கனல் போல் பரவி பாபத்தைப் பொசுக்கி பக்தனை மல்லுக்கட்டாக லட்சியத்தை அடையச் செய்பவள். சோம்பல் அலட்சியம் இவைகளைப் பொறுக்க மாட்டாள். பயங்கரமானவள் என்றாலும் தாயின் கருணை உள்ளம் படைத்தவள். இவளிடம் அன்பு கொண்டவர்களுக்குப் பயம் என்பதே இல்லை. எல்லா தேவதைகளின் சக்தியும் ஒன்று திரண்டு உருவானவள் இத்தேவி. நிலைத்து நிற்கும் பேரழகு, அனைத்தையும் வசீகரித்து தெய்வ ஸ்ருதியுடன் இசையச் செய்தல் ஆகியவை இவளின் ஆற்றல்கள். மனித மனதை மயக்கும் மோகினி இவள். இவள் நிலைபெற வனப்பு, தூய்மை, வாக்கு, செயல்களில் அந்தரங்க சுத்தி, சத்தம், அழகு, இவை அவசியம். ஏதாவது ஒன்று குறைந்தாலும் அகன்று விடுவாள். இவள் அருள் வாழ்வை பரிமளிக்கச் செய்யும்.

அமுதவாரியாக விளங்கும் துர்கா பரமேஸ்வரியின் அருட்சேயாய் விளங்கும் பரமஹம்ஸ ஸ்ரீமத் புவனேஸ்வரி ஸ்வாமிகள் அவர்கள் நாள்தோறும் தமது இல்லத்தில் துர்கா ஸஹஸ்ரநாமத்தை கோடிக்கணக்கில் அர்ச்சனை செய்த அருளாளர். அன்னையின் அருள் பூஜை செய்து காந்தி ஏறித் திகழும் சிவந்த திருமேனி. கருணை அலையெறிந்து திகழும் கண்கள் பரிவுடன் முகிழ்க்கும் பார்வை. மந்தஹாஸம் திகழும் வதனம். கலங்க வேண்டாம் அம்பாளின் அருளால் கஷ்டங்கள் தீரும் என்று அருளும் அமுத மொழிகள். இரும்பை காந்தம் கவர்வது போல் நம் மனம் சுவாமிகள் பால் ஈர்க்கும்.

திருக்குற்றாலம் சித்தேஸ்வரி பீடாதிபதி ஸ்ரீ மௌன ஸ்வாமிகள் தேர்ந்தெடுத்த அருட்சீடர். குருவருளும் திருவருளும் நிரம்பப் பெற்றுத் தன்னை நாடி வரும் அன்பர்களின் குறை களைந்து அவர்களை ஆன்மீகத் துறையில் ஆற்றுப்படுத்தி எல்லோரும் இன்புற்றுவாழ அனவரதமும் தவமியற்றும் புவனேஸ்வரி சுவாமிகள்பால் நம் உள்ளம் ஈர்க்கப்படுவதில் வியப்பென்ன?

சுவாமிகள் பாரததேசமெங்கும் முன்னூற்றுக்கும் மேற்பட்ட கும்பாபிஷேகங்களை நடத்தியிருக்கிறார்கள். கும்பாபிஷேகம் நான்கு வகைப்படும். மூர்த்திகளையும் ஆலயத்தையும் புதிதாக அமைத்தல் — இது ஆவர்த்தம். ஆலயமோ அல்லது அதிலுள்ள மூர்த்திகளோ வெள்ளத்தில் போய்விட்டால் அவற்றை மறுபடியும் ஆலயம் எழுப்பி மூர்த்தியை ஸ்தாபித்தல்— இது அனுவர்த்தம். ஆலயம் ஜீர்ணமாகி அஷ்டபந்தன மருந்து சாத்தி ஜீர்ணமானதை மீண்டும் புதுப்பித்தல்— இது புனஸ்வர்த்தம். திருடர்களால் அபகரித்துப் போன மூர்த்திகளை மீண்டும் பிரதிஷ்டை செய்தல்— இது அந்தரிதம் எனப்படும். கும்பாபிஷேகமென்பது, கும்பத்தை சகலவித உபசாரங்களுடன் பிரகாரத்தில் வலமாகக் கொண்டு வந்து யாக சாலையில் பிரதிஷ்டை செய்து பூஜை ஹோமம் செய்து, கும்பத்தைச் சுற்றி முறுக்கிய தர்ப்பையை யாக சாலைக்கும் தொடர்பைச் செய்து, மந்திரங்களை ஏற்றி புனிதத் தன்மையும், மந்திரச் சக்தியும் ஏற்றப்பட்ட கும்ப ஜலத்தை, ஆலயத்தில் நிர்மாணிக்கப்படும். பிம்பத்தின் மீது அதாவது மூர்த்தியின் மீது விடுவது கும்பாபிஷேகம் ஆகும். இந்த முறைப்படி, சுவாமிகள் கும்பாபிஷேகத்தையும், பிரதிஷ்டையையும் நடத்தி வருகிறார்கள்.

புவனேஸ்வரி சுவாமிகள் அவர்கள் உலக நன்மையைக் கருதி, 'துர்கா விஜய ஸ்தம்பம்' என்ற ஸ்தம்பத்தை மதுரை ஸ்ரீ பத்திரகாளியம்மன் சந்நிதியில் நிறுவ இருக்கிறார்கள். ஸ்தம்பமானது உள்ளே வெற்றிடமாக இல்லாமல், 'ஜெய ஜெய துர்கா' என்று கோடிக்கணக்கில் பக்தர்கள் எழுதிய புனித நோட்டுகளை ஸ்தம்பத்தினுள் போட இருக்கிறார்கள். இதற்கு முன் சென்னை கீழ்பாக்கத்தில் கனக துர்கா திருக்கோயிலில் இதுபோல அமைத்துள்ளார்கள்.

துர்காவின் நாமமானது நாட்டில் சுபிட்சத்தை பெருக்கும். அன்னையின் அருள் அமுதமாகப் பெருகும். என்று நெக்குருகு சுவாமிகள் கூறுகிறார். எண்ணிக்கையிட்டு பக்தியுடன் 'ஜெய ஜெய துர்கா' என்று ஐம்பத்து ஓராயிரம் தடவை நல்ல நோட்புக்கில் முத்து முத்தாக எழுதி, எழுதிய நோட்புக்கை நன்ருக பார்சல் செய்து, தங்கள் சுயவிலாஸத்துடன் ஒரு ரூபாய் தபால்தலை ஒட்டி, சுவரை இணைத்து அனுப்புவர்களுக்கு துர்கா பரமேஸ்வரியின் திருவுருவம் பதித்த டாலரையும், அர்ச்சனை செய்த குங்கும பிரசாதத்தையும் அனுப்பி வைப்பார்கள்.

வரும் ஏப்ரல் மாத இறுதிக்குள் ஸ்ரீ புவனேஸ்வரி சுவாமிகள், 23, அனுமந்தராயன் கோயில் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை—5. என்ற விலாஸத்திற்கு 'ஜெய ஜெய துர்கா' என்ற திருநாமத்தை எழுதி அனுப்பலாம்.



* குடமுழுக்கு வைபவம்.

* சிரசில் கும்பத்தைத் தாங்குதல்.





* மேற்பாக்கம் கனக துர்கா கோவில் விஜய ஸ்தம்ப பிரதிஷ்டை.

இறைவனைப் பூஜிக்க பல முறைகள் இருக்கின்றன. அவற்றுள் நாம பாராயணம் சிறந்தது. 'ராமராம' என்று கூறியே வால்மீகி, முனிச்ரேஷ்டர் ஆன கதை நமக்குத் தெரியும். நாம ஜபத்துக்கு அதனுல் மகிமை அதிகம். துன்பத்தில் நினைத்தால் துக்கத்தையும் பயத்தையும் போக்கியும், இன்பத்தில் தியானித்தால் செல்வத்தையும், வீரத்தையும் அருளுகின்ற துர்காதேவி ஆனவள், வறுமை, வியாதி, விரோதிகளின் தொல்லையை நீக்கி, வெற்றியையும், கல்வியையும் அருளுகின்ற உதார குணத்தோடு இருக்கிறுளாம். இதை துர்கா சப்தசதியானது விளக்குகிறது. அன்னை துர்கா பரமேஸ்வரியின் திருநாமமான 'ஜெய ஜெய துர்கா' என்று எழுதி எம்பெருமாட்டியின் கடைக்கண் வீச்சுக்கு பாத்திரமாகலாமே.

ஜெய ஜெய துர்கா

ராமகிருஷ்ண பரத்வாஜ்,
ஸ்ரீ புவனேஸ்வரி மந்த்ரம்,
23, அனுமந்தராயன் கோயில் தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை — 600 005.

# மேலதிகாரியைச் சமாளிப்பது எப்படி?



மனைவி அமைவது மட்டுமல்ல, மேலதிகாரி அமைவதும் இறைவன் கொடுத்த வரம்தான்! வீட்டிலாவது ஊடலும் கூடலும் வாழ்க்கைக்குச் சுவை சேர்க்கின்றன. ஆனால் அலுவலகத்தில் மேலதிகாரியோடு தகராறு வந்துவிட்டால் அன்றாடச் சில்லறைப் பிரச்னைகளைச் சமாளிக்க வேண்டியிருப்பதோடு பிரமோஷன், டிரான்ஸ்ஃபர், சம்பள உயர்வு என்று பல விஷயங்களில் மோசமாகப் பாதிக்கப்படுவதற்கு வாய்ப்பு இருக்கிறது. எனவே மேலதிகாரிகளைச் சமாளிக்கக் கற்றுக் கொள்வது அவசியம்தானே! இதோ சில எளிமையான அடிப்படை விதிகள்... இவற்றைக் கடைப்பிடித்தால் பிரச்னைகளைத் தவிர்க்கலாம்:

### விதி ஒன்று: மேலதிகாரியிடம் அனாவசியமான தொடர்பு வேண்டாம்!

நீங்கள் உங்கள் அலுவலகத்தில் கடுமையாக உழைக்கிறீர்கள் என்பதை உங்கள் மேலதிகாரிக்கு அடிக்கடி நினைவூட்ட விரும்புவது இயல்பு. ஆனால், இதைத் தவிர்ப்பதுதான் அறிவுடைமை. அனாவசியமாகக் குறுக்கும் நெடுக்கும் நடப்பதோ, மானேஜரிடம் இருபது கையெழுத்துக்களைப் பெற இருபது முறை அவர் அறைக்குச் சென்று வருவதோ அவரது எரிச்சலைத்தான் கிளப்புமேயொழிய உங்களுடைய சுறுசுறுப்பையோ உழைப்பையோ அவருக்கு உணர்த்தாது. அவருக்கு ஆயிரம் அன்றாடப் பிரச்னைகள் இருக்கும். உங்களுடைய செயல் திறன் மட்டுமே அவருடைய கவலையல்ல. எனவே வலியச் சென்று, மேலதிகாரியைச் சந்திப்பதைத் தவிர்ப்பதே உத்தமம். இதனால் இரு தரப்புக்குமே சௌகரியம்.

### விதி இரண்டு: மேலதிகாரியின் உழைப்பை அவ்வப்போது போற்றுங்கள்.



மேலதிகாரியும் உங்களைப் போன்ற ஓர் ஊழியர்தான். — எல்லா ஊழியர்களையும் போல் அவர்களும் தாங்கள்தான் மிகக் கடுமையாக உழைப்பதாக நினைத்துக்கொண்டிருப்பார்கள். உங்களைப் போலவே 'நாம் இந்தக் கம்பெனிக்கு உழைத்து என்ன சுகத்தைக் கண்டோம்' என்ற உணர்வு அவர் மனத்திலும் அவ்வப்போது தோன்றும்! எனவே, தக்க சந்தர்ப்பத்தில் அவருடைய உழைப்பைப் பாராட்டுங்கள். இதில்









இரண்டு விஷயங்களைக் கவனத்தில் கொள்ள வேண்டும். ஒன்று — உங்கள் பாராட்டு அப்பட்டமான பொய்யாக இருந்து விடக் கூடாது. சில மேலதிகாரிகளுக்கு உண்மையில் வேலையே இருக்காது. அதன் பயனுக மனத்தில் குற்ற உணர்வு அரித்துக் கொண்டே இருக்கும். அத்தகையவரிடம் போய், ''சார்! நீங்கள் எப்படித்தான் இவ்வளவு ஃபைல்களையும் ஒரே நாளில் பார்க்கிறீர்களோ?'' என்று 'ஐஸ்' வைக்காதீர்கள். ஒரு நாளைக்கு ஒரு ஃபைலை மட்டுமே பார்த்து விட்டு மீதி நேரத்தை ஓட்ட அவஸ்தைப் படும் அதிகாரிக்கு அது எரிச்சலைத்தான் மூட்டும்.

இரண்டு—தக்கசந்தர்ப்பத்துக்காகக்காத்திருந்து பாராட்டுங்கள். பெரும்பாலும் அவரே அதை உருவாக்கித் தருவார். எப்போதாவது அதிக வேலை வரும்போது, ''இதைப் பாருங்க ராமசாமி, என் மேஜையை... ஒரே சுந்திரகோளம்... எதை எங்கே வைத்தேன் என்றே புரியவில்லை'' என்பார்.

அப்போது எடுத்து விடுங்கள் உங்கள் சரக்கை:

''உண்மையிலேயே நான் ரொம்ப ஆச்சரியப்படறேன் சார். உங்களால்தான் இப்படி ஒரே நாளில் இருபது ஃபைல்களைப் பார்த்துத் தேவையான நடவடிக்கைகளுக்கு உத்தரவுகளைப் பிறப்பிக்க முடியும்.''

தன்னைப் புரிந்து கொள்ளவும் ஒரு ஜென்மம் இருக்கிறது என்ற உணர்வு யாரைத்தான் சந்தோஷப்படுத்தாது...? மேலதிகாரியும் இதற்கு விதிவிலக்கு அல்லவே!

**விதி மூன்று: எச்சரிக்கை! சொந்த விஷயங்களை நட்புரிமையோடு பேசாதீர்கள்!**

மேலதிகாரியிடம் சொந்த விஷயங்களைப் பேசுவது விபரீதமாக முடியக் கூடும். நீங்கள் உங்களைப் பற்றி வெளிப்படுத்தும் உண்மைகளை அலுவலகம் தொடர்பான விஷயங்களில் உங்களுக்கு எதிராக அமைந்து விடும் வாய்ப்பு உண்டு. எனவே மேலதிகாரியே வலிய வந்து பேசினாலும் சொந்த விஷயங்களை நீங்கள் பகிரங்கமாகப் பேசாமலிருப்பதே நல்லது.

உதாரணமாக:

மேலதிகாரி: உன் பாடு தேவலைப்பா. இன்னும் கல்யாணமாகலை. பிரச்னைகள் கிடையாது... என்னைப் பாரு... தினமும் எங்க வீட்ல 'அவளு'க்கும் எங்கம்மாவுக்கும் தகராறு... இதே தலைவலி... உனக்கென்ன... ஹூம்!

இந்த இடத்தில் மே. அ. உங்களை ஆழம் பார்ப்பார். எனக்கு மட்டும் பிரச்னைகள் இல்லையா சார்... வீட்ல அப்பா மட்டும் தான். தினமும் காலையில் தண்ணி புடிக்கறதுல ஆரம்பிச்சு, சமையல், சாப்பாடுன்னு வரிசையா எல்லாத்தையும் நான்தான் செய்யணும்... இந்த முகரைக்கும் இந்தச் சம்பளத்துக்கும் எவனும் பெண் கொடுக்க மாட்டேங்கறான்... என்ற ரீதியில் புலம்பினால் சப்புக் கொட்டிக் கொண்டு கேட்கத் தயாராவார்.

பிரிதொரு சமயம் உங்களின் இந்தக் கையாலாகாத்தனத்தை அலுவலக விஷயத்தில் மறக்காமல் பயன்படுத்தி உங்கள் வளர்ச்சிக்கு அவர் குந்தகம் விளைவிக்கக் கூடும்.

நீங்கள் உண்மையிலேயே பிரச்னைகளற்றவராய் இருந்து அதைப் பற்றி மே. அ. விடம், ''ஆமாம் சார்! எனக்கு இப்போதைக்குப் பிக்கல் பிடுங்கல் இல்லை. நேடிவ் பிளேஸ்ல



அத்தைப் பொண்ணு இருக்கா. இந்த வருஷம் பிளஸ் டூ முடிக்கிறா. அப்புறம் எங்க கல்யாணம். அடக்கமான பொண்ணு. எங்கம்மாவுக்குக் கூட அவளை ரொம்பப் பிடிக்கும்'' என்று பெருமையடித்துக் கொண்டாலோ, அவரது மனம் பொறாமையால் வெந்துவிடும்.

பிறகு என்னதான் பதில் சொல்வது என்கிறீர்களா?

''ஏதோ உங்க ஆசீர்வாதத்துல தற்சமயம் ஒண்ணும் பிரச்னை இல்லை சார்...! எதிர் காலத்துலயும் அப்படித்தான் இருக்கும்னு நம்பறேன்'' என்று அவரது 'ஆசீர்வாதத்துக்கு' நன்றி சொல்லி, ''நாளை மீட்டிங்குக்குத் தேவையான பேப்பர்ஸ் இதுல இருக்கு...'' என்று பேச்சை மாற்றி விடுங்கள்.

**விதி நான்கு: உங்கள் இலாகாதான் அலுவலகத்தின் மிக முக்கியமான அங்கம் என்பது போல் 'நடந்து கொள்ளுங்கள்!**

உண்மையில் ஓர் அலுவலகத்தின் ஒவ்வோர் இலாகாவும் முக்கியமானதே. ஆனால், ஒவ்வோர் இலாகாவினரும், குறிப்பாக இலாகா தலைவர்கள் — மேலதிகாரிகள், தங்கள் இலாகாதான் அலுவலகத்தின் ஆதாரத் தூண் என்று நினைத்துக் கொள்வது இயற்கை. இவ்வெண்ணம் ஓரளவுக்கு வேலையில் உள்ள ஈடுபாட்டையும் செயல்திறனையும் அதிகரிக்கவே செய்யும். எனவே இந்த எண்ணம் உங்களுக்கு இருப்பதை அடிக்கடி மேலதிகாரிக்குத் தெரியப்படுத்துங்கள். அது அவருக்கு மகிழ்ச்சியையும் தன்னம்பிக்கையையும் அளிப்பதோடு உங்களைப் பற்றிய ஒரு நன்மதிப்பையும் நிச்சயம் ஏற்படுத்தும்.

**விதி ஐந்து: உங்கள் மேலதிகாரி உங்களுக்கு அளித்து வரும் ஊக்கத்துக்கும், ஆதரவுக்கும் வழிகாட்டலுக்கும் அடிக்கடி நன்றி கூறுங்கள்.**

தக்க தருணத்தில் இதைச் செய்வது மிக அவசியம்.

''நீங்க மட்டும் உதவியிருக்கலேன்னா இந்த ஸ்டேட்மென்டை என்னால் போட்டே இருக்க முடியாது சார்!''

அல்லது:

''சார்! உங்க டிபார்ட்மென்ட்ல வேலை செய்யறது மனத்துக்கு ரொம்ப திருப்தியா இருக்கு சார். இந்தத் திருப்தி வேறே எங்கேயும் கிடைக்குமாங்கறது சந்தேகம்தான்.''

என்பது போன்ற புகழுரைகள் மே. அ. காரியின் உச்சியைக் குளிர்விக்கும். ஆனால் இத்தகைய புகழாரங்களைச் சூட்டும் போது அதில் துளிக்கூட ஏளனத்தின் சாயலோ, பொய்யின் வாடையோ இருக்கக் கூடாது. வஞ்சப் புகழ்ச்சி உங்களை நிச்சயம் வீழ்த்திவிடும். ஜாக்கிரதை!

**விதி ஆறு: வாக்குவாதங்கள் வேண்டாம்!**

நீங்கள் ஜயிக்க முடியாது. அதனால் அனாவசியமாக வாதாடி அவப்பெயரைச் சம்பாதித்துக் கொள்வானேன்? அதுவும் மேல் அதிகாரி கோபமான 'மூட்' இல் இருந்தால் அந்த நேரத்தில் நிச்சயம் வாக்குவாதங்களைத் தவிர்க்க வேண்டும்.

மே. அ.: ஏன்யா? இந்த ராமசாமியோட ஃபைலை இன்னும் 'க்ளோஸ்' பண்ணாம இருக்கிறீர்? எத்தனை முறை சொல்லியாச்சு உங்களுக்கு...?

நீங்கள்: சார்! அது ஜி. எம். பார்வைக்குப் போகணுமே சார்! அவர் அடுத்த வாரம் தானே 'டூர்'லேயிருந்து திரும்பறார்?

மே. அ. காரிக்கு நீங்கள் இப்படி பதில் அளித்தால் நிச்சயம் ஆபத்துதான். உங்களுக்குத் தெரியும்...... ராமசாமி ஃபைலில் மே. அ. காரிக்குத் தனிப்பட்ட ஆர்வம் உண்டு — அவர் மனைவிக்குத் தூரத்துச் சொந்தம் ராமசாமி.

இந்தச் சூழ்நிலையில் நீங்கள் எழுத்துப் பிசகாமல் விதிமுறைகளைச் சுட்டிக்காட்டுவது அவசியமா? ஜி. எம். பார்த்தாலும் ஃபைலை நிச்சயம் ஓ. கே. செய்வார் என்று உங்களுக்கே தெரியும். எனவே,

''ஆமாம் சார்! இதோ கொண்டு வர்றேன். நீங்கள் கையெழுத்துப் போட்டதும் அனுப்பிடுவோம்.''

என்று நீங்கள் பதில் சொல்வதுதான் நடைமுறைக்கு ஏற்றதாக அமையும்.

இதுவே, உங்கள் கொள்கைக்கு ஒவ்வாத விஷயமாக இருந்தால், பதிலை ஒத்திப்போடுங்கள் — மேல் அதிகாரியின் கோபம் தணியும் வரை: —

''சரி சார். அதைக் கவனிக்கிறேன். இந்த ஆயுத பூஜைக்கு வொர்க்கர்ஸுக்கு என்ன ஸ்வீட் ஆர்டர் செய்யலாம்?'' என்று பிரச்னை

யில்லாத விஷயத்துக்குத் தாவுங்கள்.

**விதி ஏழு: மேலதிகாரி உங்களைக் கடிந்து கொள்ளும் போது மறுத்துக் கூறுதீர்கள்.**

இத்தகைய தருணங்களில் நீங்கள் உணர்ச்சி வசப்படுவது இயற்கை. ஆனால் அந்த உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்திக் கொள்வது மிக மிக அவசியம். உங்கள் மீது அபாண்டமான, அவப்பெயர் விளைவிக்கும் பழி சுமத்தப்பட்டாலொழிய இவ்விதியைத் தவறாமல் கடைப்பிடிப்பதுதான் நல்லது.

கோபமாக இருப்பவரைப் பேச விடுங்கள். இது அவர் கோபத்தை ஓரளவு தணிக்கும். பிறகு மிகப் பொறுமையாகப் பதில் சொல்லுங்கள்:

மே. அ.: ராமசாமி! எப்படி இந்த ஏ.ஜி.எம். ரிப்போர்ட்டை இருபத்தஞ்சு தப்போட பிரிண்ட் ஆக அனுமதிச்சீங்க...? நம்ப கம்பெனி மானமே கப்பலேறிடுச்சு...

நீங்கள்: ரிப்போர்ட்டை ஓ. கே. பண்ணி அனுப்பினது பஞ்சு சார். அன்னைக்கு நான் ஆபீஸுக்கு வரலே, லீவு!

மே. அ.: ஏன்யா, அன்னிக்கு இந்த ரிப்போர்ட் ஃபைனலைஸ் ஆகுதுன்னு தெரியுமில்லே... அன்னிக்குப் போய் லீவு போடுவானேன்?

— இதற்கு நீங்கள், "ஏன் சார், நீங்க தானே லீவை சாங்ஷன் பண்ணினீங்க!" என்று பதில் பேசினால், மேலதிகாரிக்கு மேலும் ஆத்திரம் கிளம்பும். வார்த்தைகள் தான் வளரும்.

நடந்த தவறுக்கு நீங்கள் பொறுப்பாகா விட்டாலும் தவறு நடந்துள்ளதையும் அதனால் நிறுவனத்துக்கு அவப்பெயர் வந்துள்ளதையும் மறுக்க முடியாது அல்லவா? அதனால், உங்கள் பதில் இப்படித்தான் இருக்க வேண்டும்:

"சாரி சார்! தவறு எப்படி நேர்ந்ததுன்னு தெரியலே. உடனே கவனிக்கிறேன். இனி மேல் இதுமாதிரி நடக்காது."

— இப்படி சொல்வதால், நீங்கள் தவறுக்கு முழுப் பொறுப்பு ஏற்காத அதே நேரத்தில் மேலதிகாரியின் கோபம் தணியவும் சந்தர்ப்பம் ஏற்படுத்தித் தருகிறீர்கள். பொறுப்புக்களைத் தட்டிக் கழிக்காமல் இழுத்துப் போட்டுக்கொள்ளும் குணத்தையும் வெளிப் படுத்துகிறீர்கள்.

இவ்வாறு செய்ததால் உங்கள் கௌரவத்துக்குக் குறைவு நேர்ந்து விட்டதாக நீங்கள் எண்ணினால் அது முட்டாள்தனம். உங்கள் கட்டுப்பாட்டில் இல்லாத ஒரு விஷயத்தைக் குறித்து வருந்துவானேன்?

**விதி எட்டு: 'இல்லை,' 'மாட்டேன்,' முடியாது' போன்ற 'நெகடிவ்' சொற்களை உபயோகிக்காதீர்கள்.**

'நெகடிவ்' வார்த்தைகளால்நிச்சயம்வம்பு வளரும். 'முடியாது,' 'எனக்குப் பிடிக்காது,' 'இல்லை' போன்றசொற்களைப்பொதுவாக யாருமே விரும்ப மாட்டார்கள். இதற்கு இரண்டு காரணங்கள் உண்டு. ஒன்று: இச்சொற்கள் எதிரே உள்ளவரிடம் ஒருவிதத் தாழ்வு மனப்பான்மையைத் தூண்டும். அதிலும் ஒரு நிறுவனத்தை முன் நின்று நடத்திச் செல்லும் மேலதிகாரிக்கு இவை தன்னம்பிக்கையைக் குலைக்கும்.

இரண்டு: குழந்தைப் பருவம் தொட்டே 'இதைச் செய்யாதே.' அதைச் செய்யக் கூடாது' என்று 'நெகடிவ்' சொற்களால் திட்டி வளர்க்கப்படுகிறோம் நாம். அதனால் வளர்ந்து, அதிகாரம் பிரயோகிக்கும் நிலையை அடையும்போது இது போன்ற 'நெகடிவ்' சொற்களைக் கேட்டதுமே எரிச்சல் கிளம்புவது இயல்பு. இதனை மனோதத்துவ நிபுணர்களும் உறுதிப்படுத்துகின்றனர்.

எனவே 'நெகடிவ்' சொற்கள் 'வேண்டாம்!' நெகடிவ்வை எப்படி பாஸிடிவ் ஆக்குவது என்று பார்ப்போமா...?

"சார்! இந்தக் குப்புசாமியைப் போல ஒரு வடிகட்டின முட்டாள் டைப்பிஸ்டை நான் பார்த்ததேயில்லே. அவனை மாத்திடணும் சார்!"

— இது தவறு.

"சார், குப்புசாமி ரொம்ப நல்லவர்; உழைப்பாளி; ஆனால் நிறைய தப்பு பண்றார் சார்... அவருக்கு வேறு வேலை கொடுத்தால் நல்லாயிருக்கும்னு நினைக்கறேன்."

— இது சரி.

"இந்த ரிப்போர்ட் வெறும் குப்பை சார்! பைசா பெறாது!"

— இது தவறு.

"இந்த ரிப்போர்ட்டுல சில நல்ல விஷயங்கள் இருக்கு. ஆனால் கொஞ்சம் திருத்தி, மாற்றி எழுதணும்."

— இது சரி.

"உங்க லெட்டரைப் படிச்சுப் பார்த்தேன் சார். இப்படி எழுதினாக் காரியம் நடக்காது."

— இது தவறு.

"உங்க லெட்டர்ல சில மைனர் கரெக்ஷன்ஸ் பண்ணியிருக்கேன் சார். உங்களுக்குப் பிடிக்கும்னு நினைக்கறேன்."

— இது சரி.



நெகடிவ் வார்த்தைகளை உபயோகிக்காமலே இருப்பது இயலாதுதான். ஆனல் எப்போதேனும் அவற்றைப் பயன்படுத்தினலும் வெறுப்பை வெளிப்படுத்தாதீர்கள். உற்சாகத்துடனேயே பேசுங்கள். நிறுவனத்தின் நஷ்டத்துக்கு உங்கள் மேலதிகாரியே காரணமாக இருந்தாலும் அவருடன் பேசும்போது உங்கள் உற்சாகம் குன்றவிடக் கூடாது.

**விதி ஒன்பது: உங்கள் மேலதிகாரி கொடுக்கும் பணிகளை முதலில் செய்து முடியுங்கள்.**

நீங்கள் பெரிய நிறுவனத்தில் பணியாற்றுகிறவராக இருந்தால் பல பேருக்குக் கீழ் நீங்கள் வேலை செய்ய வேண்டி வரும். உங்கள் மேலதிகாரிக்குப் பல உயர் அதிகாரிகள் இருப்பார்கள். இவர்கள் எல்லோருமே உங்களுக்குப் பணியிடக் கூடும். ஆனல், நீங்கள் முக்கியத்துவம் தந்து உடனே கவனிக்க வேண்டியது உங்கள் நேரடி மேலதிகாரி தரும் வேலைகளைத்தான்.



அவரைக் காட்டிலும் உயர் பதவியில் இருப்போரைத் திருப்திப்படுத்த எண்ணி நீங்கள் உங்களுடைய உடனடி மேலதிகாரிக்கு இரண்டாம் பட்ச முக்கியத்துவமே அளித்தால் அது அரசனை நம்பிப் புருஷனைக் கைவிட்ட கதையாகத்தான் முடியும். மிகப் பெரிய அதிகாரிகளுக்கு உங்களைப் போன்ற 'சிறியவர்களை' நினைவு வைத்துக் கொள்ள வேண்டிய அவசியம் கிடையாது. உங்களுக்குப் பதவி உயர்வோ சம்பள உயர்வோ தருவதையும் மறுப்பதையும் உங்களுடைய நேரடி மேலதிகாரியால் தடுத்து நிறுத்திவிட முடியும் என்பதை மறந்து விடாதீர்கள்.

**விதி பத்து: மறுபேச்சுக்கிடமில்லாமல் செய்து விடாதீர்கள்.**

மேல் அதிகாரிகளுக்கு முடிவெடுக்க வேண்டிய பிரச்னைகள் ஏராளமாக இருக்கும். அதனல் நீங்கள் ஒரு புதிய திட்டத்துடனே யுக்தியுடனே அவரை அணுகினல் யோசிக்காமல் அதற்கு மறுப்பு தெரிவிப்பது தான் அவருக்குச் சுலபமாகத் தோன்றும். அதனல் அவ்வாறு மறுப்பதற்கு அவருக்கு ஒரு வாய்ப்பு அளிக்காமல் படிப்படியாக, பல முறைகளில் உங்கள் திட்டத்தை அவர் முன் வையுங்கள். ஒவ்வொரு கட்டத்திலும் அவர் உங்களுக்கு ஆதரவாக இருப்பதாகத் தோன்றினல் அடுத்த கட்டத்துக்கு முன்னேறுங்கள். இறுதியில்,

"சார் நீங்கள் யோசனை சொன்னபடி செய்திருக்கேன் பார்த்துக் கையெழுத்துப் போட்டுடுங்க" என்று அவர் யோசனையாக அதை வழங்குங்கள். வழிக்கு வந்து விடுவார். அதே சமயத்தில் அது தாம் பொறுப்பேற்க வேண்டிய விஷயம் என்பதால் கூர்ந்து கவனித்து, திறமையுடன் உங்கள் திட்டத்தை மேம்படுத்தியும் தருவார்.

கடைசி கட்டத்தில் மட்டும், "சரியா இல்லையா, பாருங்க"; "பிரச்னை சரியாகிட்டதா தோணுது"; "உங்களுக்குப் பிடிக்கும்னு நினைக்கிறேன்" போன்ற சந்தேகம் தொனிக்கும் சொற்றொடர்களைப் பயன்படுத்தாமல் துணிவுடன் அவரை அணுகுவது அவசியம்.

**விதி பதினென்று: தேவைக்கு அதிகமாகக் கவனத்தைக் கவராதீர்கள்.**

உங்கள் வேலைத் திறனும், திறமையும் மேலதிகாரிக்கு அவ்வப்போது உணர்த்தப் படவேண்டியது அவசியம்தான். ஆனல் அதை அளவோடு, சமயமறிந்து செய்ய வேண்டும். சமீப காலமாக உங்களுக்கும் மேலதிகாரிக்கும் இடையே உறவு அவ்வளவாகச் சுமுகமாயில்லை என்ற நிலையில் நீங்கள் அலுவலக டேபிள் டென்னிஸ் போட்டியில் முதலாவதாக வந்ததைப் போய் அவரிடம் பெருமையடித்துக் கொண்டால்,

"ஓகோ! டேபிள் டென்னிஸ்ல தான் கவனமெல்லாம் இருக்கிறப்பல இருக்கு... அதுதான் ஒரு ஸ்டேட்மெண்ட் ரெடி பண்ண ஒரு வாரம் ஆகுதோ..." என்பார் எரிச்சலுடன்.

இதற்கு ஒரு சந்தர்ப்பத்தை உருவாக்கித் தரவே கூடாது.

**விதி பன்னிரண்டு: வாய்ப்புக் கிடைக்கும் போதெல்லாம் மேலதிகாரியைப் புகழ்ந்து பேசுங்கள்; அவர் உங்களைப் புகழ்ந்தால் பெருமையைப் பகிர்ந்து கொள்ளுங்கள்.**

ஒரு சாதனையைப் புரிந்ததற்காக நமக்குக் கிடைக்கும் புகழையும் பெருமையையும் அலுவலகத்தில் உள்ள மற்றவர்களுடன் எதற்காகப் பகிர்ந்து கொள்ள வேண்டும் என்று தோன்றுவது சகஜம். ஆனல் இது தவறான, முட்டாள்தனமான கருத்து. உங்கள் வெற்றிக்கோ, சாதனைக்கோ நீங்கள் மட்டுமே காரணமல்ல, பிறருக்கும் அதில் பங்கு உண்டு என்று வெளிப்படையாக ஒப்புக் கொள்வதன் மூலம் பெருந்தன்மை, சீரிய சிந்தனை, மனமுதிர்ச்சி என்று பல நற்குணங்களையுடையவராகப் பெயர் பெறுகிறீர்கள்.

# சத்யா

பிரபல எழுத்தாளர்களின் கைவண்ணத்தில் மாதந்தோறும் வெளிவருகிறது....

## ராஜேஷ் குமாரின் உன்னைத் தா! உன் உயிரைத் தா!



கையடக்கமான அளவில் பளபளக்கும் கண்ணாடி உறை 'அரஸின்' அட்டகாசமான படங்களுடன்....

விலை ரூ.3

ஏஜென்சி விபரங்களுக்கு
சுஜாதா மாத இதழ்,
பார்வதி பப்ளிகேஷன்ஸ்
15, சண்முகமுதலி தெரு
சென்னை-1



பாடசாலை வித்யார்த்திகளின் ஒரு பகுதி

மஹான் ஸ்ரீ.கோவிந்த தீக்ஷிதரவர்களால் 1542ல் ஸ்தாபிக்கப்பட்டு தொடர்ந்து நடந்து வரும் வேத பாடசாலையை மேற்படி ஸமிதியானது தாய் போல் இயங்கிக் காப்பாற்றி வருகிறது. தற்போது பாடசாலையில் 85 மாணுக்கர்கள் வேதாத்யயனம் செய்து வருகின்றனர். அவர்களுக்கு ஒரு நாள் உணவளிக்க சுமார் ரூ 250/— ஆகிறது. இந்த தர்மம் நிரந்தரமாய் நடக்க ரூ 2500/— மூலதனம் ஏற்படுத்தியோ அல்லது அவ்வப்போது ரூ 250/— அனுப்பியோ ஒரு குறிப்பிட்ட தினத்தில் உணவளிக்கும் கைங்கர்யத்தில் பங்கு கொள்ளக் கோருகிறோம்.

நன்கொடை அனுப்ப வேண்டிய பெயரும் முகவரியும்:

அத்வைத வித்யாசார்யா மஹா ராஜா ஸாஹேப்
ஸ்ரீ கோவிந்த தீக்ஷிதர் புண்ய ஸ்மரண ஸமிதி
D—76, மூன்றுவது கிராஸ் தெரு, ஸ்ரீநகர் காலனி,
கும்பகோணம்—612 001.

இந்த நன்கொடைக்கு 80G விதியின்படி வருமான வரிவிலக்கு உண்டு.



அது மட்டுமல்ல, பிறருக்குப் பெருமைகளில் பங்களிப்பதால் அதிகம் பேர் உங்களைப் பற்றிப் பேசுகிறார்கள். ஆரோக்கியமான ஒத்துழைப்பை நல்கக் கூடியவர் என்று உங்களைப் பற்றிய கணிப்பு மேலதிகாரியிடம் ஏற்படுகிறது. பிற்காலத்தில் இது உங்களுக்கு மிகவும் உபயோகமாய் இருக்கும்.

குறிப்பாக உங்கள் வெற்றிப் பெருமைகளை உங்கள் மேலதிகாரிக்கும் உரித்தாக்குவது மேலும் நல்லெண்ணத்தை வளர்க்கும். அதற்கு ஏற்ற சந்தர்ப்பங்கள் அமையக் காத்திருந்தால் அவை வராமலே போகக் கூடும். அதனால் மேலதிகாரியைப் புகழ நீங்களே சந்தர்ப்பங்களை உருவாக்கிக் கொள்ளலாம்.

டெஸ்பாட்ச் ராமநாதன் உங்களிடம் வருகிறார்—"ஐயோ! இந்தச் சிடுமூஞ்சி மானேஜரோட ரொம்ப ரோதனையா போச்சப்பா. இத்தனை நாளா மெய்லிங் லிஸ்டைத் தம்பிட்டமே வைச்சுக்கிட்டு ஊறுகாய்ப் போட்டுட்டு இப்ப ஞாயிற்றுக் கிழமை வந்து வேலை செய்னு கழுத்தை அறுக்கிறார்" என்று பேசுகிறார்.

நீங்களும் உங்கள் டிபார்ட்மெண்டைப் பற்றி இதே ரீதியில்,

"ஆமாய்யா! இங்கே மட்டும் என்ன வாழுது. மேலதிகாரிங்க அடிக்கற கூத்துலை தினமும் ஏழு மணி ஏழரை மணி வரை இங்கே கணக்கெழுத உட்கார வேண்டியிருக்கு" என்று குறை சொல்வீர்கள் என்ற ஆவலான எதிர்பார்ப்பு ராமநாதனிடம் இருக்கும்.

இந்த ஆவலைப் பூர்த்தி செய்து ஆபத்தில் மாட்டிக் கொள்ளக் கூடாது. எச்சரிக்கையுடன் இருக்க வேண்டும். உங்கள் மேலதிகாரியை விட்டுக் கொடுக்காமல் பேச வேண்டும். இந்த வாய்ப்பை மேலதிகாரியைப் பற்றி நல்ல வார்த்தைகள் பேசப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

"எங்களுக்கு ஒண்ணும் பிரச்னையில்லைப்பா. குருசாமி மாதிரி ஒரு மானேஜர் இருந்தா எல்லா டிபார்ட்மெண்டும் கச்சிதமா இருக்கும்." என்று நீங்கள் கொஞ்சம் மிகைப்படுத்திப்பேசினாலும்கூடப்பாதகமில்லை.

இதிலும் ஓர் எச்சரிக்கை: உங்கள் மேலதிகாரி ஒரு வடிகட்டின முட்டாளாக இருப்பின் அவரைச் செயற்கையாகப் புகழ வேண்டாம். அது வஞ்சப் புகழ்ச்சியாகத் தோன்றும்! மிதமாகப் புகழலாம்; ஆனால் விட்டுக் கொடுத்துப் பேசவே கூடாது.

**விதி பதின்மூன்று: மேலதிகாரியின் விருப்பு வெறுப்புகளை அறிந்து அவற்றை உங்களுக்குச் சாதகமாக்கிக் கொள்ளுங்கள்:**

எல்லா மேலதிகாரிகளுக்கும் தொழில் ரீதியான விருப்பு வெறுப்புகள் சில இருக்கும். சிலருக்கு ஜப்பானிய நிர்வாக முறைகளின்பால் ஒரு பாசம்; வேறு சிலருக்குத் தரக் கட்டுப்பாடு; மேலும் சிலருக்கு அரசாங்கத்தின் புதிய கொள்கைத் திட்டம்... இப்படி ஏதேனும் ஒன்று இராமல் போகாது. சமீப காலமாக அனேக மேலதிகாரிகளை ஆட்கொண்டுள்ள ஒன்று — கம்ப்யூட்டர் மோகம்.

உங்கள் மேலதிகாரிக்கு எதனிடத்தில் ஒரு பலவீனமான பற்றுதல் இருக்கிறதோ அதைப் பற்றி அதிகம் தெரிந்து கொண்டு நிறையப் பேசுங்கள் (எச்சரிக்கை — அலுவலக விஷயங்களைப் பற்றி மட்டுமே — சொந்த விஷயங்களைப் பற்றி அல்ல).

உதாரணமாக கம்ப்யூட்டர் காதல் கொண்ட மேலதிகாரியானால் நீங்கள் ஆறு மாதங்களுக்கு முன் திட்டமிட்டு உருவாக்கிய கோப்புகளுக்கான அட்டவணைக்கு ஒப்புதல் பெற, அவருடைய கம்ப்யூட்டர் காதலைச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ளுங்கள். ஏஸி. யில் கம்ப்யூட்டருடன் கொஞ்சிக் கொண்டிருப்பவரை அணுகி,

"குட் மார்னிங் சார்! ரொம்ப வேகமாக முன்னேறிக்கிட்டு இருக்காப்போல இருக்கே....?" என்று நீங்கள் கேட்டால்,

"ஆமாம் ராமசாமி! இது என்ன தூள் கிளப்பறது தெரியுமோ. சரியான யமனா இருக்கு. இத்தனூண்டு இருந்துண்டு இதுக்கு இருக்கிற சாமர்த்தியத்தைப் பாரேன்... என்று உற்சாகமாய் ஓர் உயிருள்ள ஜீவனை மெச்சுவது போல் அவர் தம் கம்ப்யூட்டரை மெச்சிக் கொள்வார்.

அப்போது மெள்ள எடுத்து விடுங்கள்.

"ஏன் சார்! நாம ஃபைலிங் இன்டெக்ஸை ரொம்ப நாளா மாத்திச் சரி பண்ணணும்னு நினைச்சுக்கிட்டிருக்கோம். அதை உங்க கம்ப்யூட்டர்ல செஞ்சு பார்த்தா என்ன...?"

"ஓய் நாட் ராமசாமி! நீங்ககூட ஏதோ ஏற்கெனவே தயார் பண்ணியிருக்கேன்னு சொன்னீங்க இல்லை... அதைக் கொண்டு வாங்களேன்; இதுகிட்டக் கொடுத்துக் கச்சிதப்படுத்திடுவோம்."

— ஆயிற்று. ஆறு மாதங்களாய்க் கிடப்பில் கிடந்த உங்கள் திட்டத்துக்குச் சுலபமான ஒப்புதல் கிடைத்து விட்டது!



**விதி பதினொன்று: வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்று பேசாதீர்கள்.**

மனத்தில் தோன்றுவதைப் பளிச்சென்று பேசிவிடுவதுதான் சரி என்று பல சந்தர்ப்பங்களில் தோன்றும். வெட்டு ஒன்று துண்டு இரண்டு என்று பேசாமல் நயமாக உங்கள் கருத்தைச் சொன்னால் பரவாயில்லை. உங்கள் மேலதிகாரியே உங்களைக் கருத்துத் தெரிவிக்கும்படி கேட்டுக் கொண்டாலும் நீங்கள் வார்த்தைகளை அளந்து நிறுத்துத் தான் பேச வேண்டும்.

"என்ன ராமசாமி... ரொம்ப பிஸியா? இந்த ரிப்போர்ட்டைக் கொஞ்சம் படிச்சுப் பார்த்து அபிப்பிராயம் சொல்லுங்க..." என்று மேலதிகாரி உங்களை அணுகும் போது, நீங்கள் ஏற்கெனவே அந்த ரிப்போர்ட்டைப் படித்து, அது பல விதங்களிலும் அபத்தமானது என்ற தீர்மானத்துக்கு வந்திருக்கக் கூடும்.

"நான் ஏற்கெனவே படிச்சுட்டேன். ஹோப்லெஸ் சார்! எல்லாத்தையும் மாத்தி எழுதணும்" என்று படபடக்காதீர்கள்.

"பார்க்கிறேன் சார்... நேத்து ஒரு கண் பார்த்தேன். இன்னும் கொஞ்சம் கவனமாப் படிக்கணும். பார்த்த வரையில்... பரவாயில்லை.... கொஞ்சம் மாறுதல்கள் செய்யலாம்னு தோணுது யோசிச்சுச் சாயந்திரம் உங்களுக்கு ஒரு நோட் தரேன் சார்..."

— இப்படிப் பதில் சொல்வதால் நீங்கள் எந்த விதத்திலும் குறைந்து போக மாட்டீர்கள். உங்கள் மேலதிகாரியோ மகிழ்ச்சிக் கடலில் மிதக்காவிட்டாலும், வருத்தப்பட நேராது.

**விதி பதினைந்து: உங்கள் அலுவலகப் பணியாளர்களின் வேலைத் தரத்தை எப்போதும் போற்றுங்கள்:**

உங்களுக்குக் கீழ் சிலர் பணியாற்றிக் கொண்டிருந்தால் அவர்களைப் பற்றிய புகார்களுடன் உங்கள் மேலதிகாரியை அணுகாதீர்கள். கூடியவரை சில்லறைப் பிரச்னைகளை நீங்களே சமாளியுங்கள். விஷயம் மிதமிஞ்சிப் போனால் மட்டுமே மேலதிகாரியிடம் எடுத்துச் செல்லுங்கள்; அதுவும் உரிய தீர்வுடனேயே செல்லுங்கள். அத் தீர்வுக்கு அவர் வாயால் சம்மதம் பெற்றுச் செயல்படுத்துங்கள். மாறாக, சின்னச் சின்னப் பிரச்னைகளுடன் அவரிடம் ஓடினால், அவர் எரிச்சல் அடைந்து, அதை நீங்களே சமாளித்துக் கொள்ளும்படி சொல்வார்; அதைச் சமாளித்ீர்களா என்று உங்களைத் துளைத் தெடுத்துக் கொண்டுமிருப்பார்!

கடந்த இரண்டு மாதங்களாக உங்கள் டைபிஸ்ட்டின் நடத்தை சரியில்லை. லேட்டாக வருகிறார். அடிக்கடி விடுப்பு எடுக்கிறார். போன வாரம் ஐந்து நாட்களில் இரண்டு நாள் மட்டும். இரண்டு நாள் பதினொரு மணிக்கு வந்தார்.

"சார்... குப்புசாமி கொஞ்சம் நாளா சரியில்லை சார். அவரைத் தூக்கிடணும்" என்று உங்கள் மேலதிகாரியிடம் புகார் செய்யாதீர்கள்.

"டிபார்ட்மெண்ட்ல எல்லாம் நல்லா தான் சார் இருக்கு... ஆனால் நம்ம குப்புசாமிக்கு என்ன பிரச்னையோ தெரியலே—கொஞ்சம் நாளா ஒழுங்கா ஆபிஸ் வரதில்லே. வேலைத் தரமும் ரொம்பக் குறைஞ்சு போச்சு. பல முறை எடுத்துச் சொல்லிட்டேன்; கேட்க மாட்டேன் என்கிறார். இவரைப் போல நாலு பேர் இருந்தா ஆபிசுக்கு நல்லதில்லே சார்...."

— இது பக்குவமான அணுகுமுறை.

**விதி பதினாறு: உங்களுக்குச் சம்பந்தமில்லாத விஷயங்களைப் பற்றி மேலதிகாரியிடம் பேசாதீர்கள்:**

விதி ஒன்று நினைவிருக்கிறதா...? "மேலதிகாரியிடம் அனாவசியமான தொடர்பு வேண்டாம்!" அதே போல் உங்களுக்குச் சம்பந்தமில்லாத விஷயங்களில் அனாவசியமாகத் தலையிட்டு வம்பை விலைக்கு வாங்கிக் கொள்ளாதீர்கள்.

உங்கள் வழக்கமான வாராந்திரச் சந்திப்பின் முடிவில் மேலதிகாரி, "சரி! அடுத்த வாரம் பார்ப்போம்" என்று முடிக்கும் போது, "சார் அந்தப் புது ஆர்டர் ஒண்ணு 'பெண்டிங்'ல இருக்குப் போல இருக்கே..." என்று நீங்கள் இழுத்தால், போச்சு!

"ஆமாம் ராமசாமி நாளைக்குக் கொஞ்சம் வந்து அதை நீங்க கவனிச்சு லெட்டர் எல்லாம் ரெடி பண்ணிடுங்க" என்பார்.

நாளைக்கு ஞாயிற்றுக் கிழமை — உங்கள் விடுமுறை அம்போ!

அதே போல் ஆபிஸ் வம்பையும் நிச்சயமாக மேலதிகாரியிடம் பேசக் கூடாது! கூடாது! கூடாது!

"நாளைக்கு ரிடயர் ஆகிறாரே கோவிந்தசாமி... அவருக்குப் பிரிவுபசார உரை படிக்க டைப்பிஸ்ட் பிரமீளாவை ஏற்பாடு பண்ணியிருக்கேன்" என்று நீங்கள் சொல்கிறீர்கள்.

"பிரமீளாவா...? அவங்களுக்கு இந்த டிபார்ட்மெண்ட்ல என்ன சம்பந்தம்...?"

— இது மேலதிகாரி.

"என்ன சார்! தெரியாதா உங்களுக்கு?

அவங்களுக்கும் கோவிந்தசாமிக்கும் இடையிலே ரொம்ப நானா ஒரு... இது....

மேலதிகாரியின் முகம் சிவந்தால் முழிக்காதீர்கள். பிரமீளா இல்லாவிட்டால் ஒரு விமலாவுடன் அவருக்கேகூட நீங்கள் குறிப்பிடும் ஒரு 'இது...' இருக்கலாம். எனவே மேலதிகாரியின் கேள்விக்கு உங்கள் பதில் இவ்வாறு அமையலாம்:

''எல்லாருமே கோவிந்தசாமி பேர்ல ரொம்ப மரியாதை வைச்சிருக்காங்க சார்... எந்த டிபார்ட்மெண்டா இருந்தா என்ன...?''

இவ்வாறு நீங்கள் பேசினுல் மேலதிகாரியின் முடிவு 'ஓ.கே.' என்பதாகத்தான் இருக்கும்.

**விதி பதினேழு: மேலதிகாரி இருக்கும்போது அவரைக் கடந்து அவரினும் உயர் அதிகாரியின் உதவியை நாட வேண்டாம்:**

இந்த ஒரு விதியை மீறினுலே போதும் உங்கள் அலுவலக வாழ்க்கை சர்வ நாசமாகிவிடும்! உங்கள் மேலதிகாரி மனம் புண்படுவதோடு உயர் அதிகாரிகளும் உங்கள்பால் நம்பிக்கை இழந்து விடுவார்கள். ''ஏன் இதை உங்கள் மேலதிகாரியிடமே நீங்கள் பேசி முடிவெடுத்திருக்கலாமே'' என்ற மூக்குடைப்பு பதில்தான் உங்களுக்குக் கிடைக்கும். மேலும், ஒவ்வொருத்தரும் இப்படித் தமது வட்டத்தைக் கடந்து சிறு சிறு விஷயங்களுக்கும் மேலிடத்துக்கு ஓடிக் கொண்டிருந்தால் அலுவலகம் உருப்பட்டாற்போல்தான்!

**விதி பதினெட்டு: உங்கள் இலாகா பற்றியோ மேலதிகாரி சம்பந்தமாகவோ ஏதேனும் புகாரோ கெட்ட செய்தியோ இருப்பின் அதை நீங்களே வலியப் போய் மேலதிகாரியிடம் கூறுதீர்கள்:**

முக்கியமான செய்தியாய் இருப்பின் அது தானே உரிய நேரத்தில் மேலதிகாரியை வந்து அடையும். அவரைப் பற்றிப் பிறர் கூறும் புகார்களை நீங்கள் எடுத்துச் சொன்னுல் அது உங்கள் புகாராகவே தொனிக்கும். உடனடியாக உங்கள் பால் கோபம் வெடிக்கும்.

ஆனுல் புகாருக்கோ தவறுக்கோ தப்பித் தவறி நீங்களே காரணமாக இருந்தால் அதைப் பெருந்தன்மையுடன் ஒப்புக் கொள்வது நல்லது.

வேறு ஓர் இலாகா அதன் தலைவர் பற்றிய புகாரையும் உங்கள் மேலதிகாரியிடம் போய் முந்திரிக் கொட்டைத்தனமாகச் சொல்ல வேண்டாம். 'கோழி மூட்டி' என்ற பட்டம்தான் மிஞ்சும்.

**விதி பத்தொன்பது: பிறரை மிதித்து முன்னேற முயற்சி செய்யாதீர்கள்:**

மேலதிகாரிக்கும் மே. அ. உண்டு. மறவாதீர்கள். உங்கள் மேலதிகாரியின் கீழ் பணிபுரியும் ஒவ்வோர் ஊழியனும் சிறப்பாக வேலை செய்தால்தான், அவரால் தமது மேலதிகாரியின் மதிப்பில் உயர முடியும். இப்படியிருக்கையில் உங்கள் சகா ஒருவர் உதவாக்கரை என்று மறைமுகமாகவோ நேரடியாகவோ நிரூபிக்க முயன்று அதனுல் உங்கள் யோக்யதையை உயர்த்திக் கொள்ள நீங்கள் முயன்ருல், அது ஒரு வகையில் உங்கள் மேலதிகாரியின் கையாலாகாத் தனத்தையேதான் சுட்டிக் காட்டும் — அவரது மேற்பார்வையில் ஓர் உதவாக்கரை இருக்கிருன் என்றுதான் அர்த்தமாகும். அதனுல் உங்கள் சக ஊழியர் உண்மையிலேயே உதவாக்கரையாக இருந்தால்கூட அவரை ஓரங்கட்டிவிட்டு நீங்கள் முன்னேற முயற்சி செய்ய வேண்டாம். இது பலருடைய நல்லெண்ணத்தை நீங்கள் இழக்கக் காரணமாகும். நீங்கள் முன்னேறிய பிறகு அவர்களுடைய நல்லெண்ணமும் அதன் பயனுன ஒத்துழைப்பும் இல்லாமல் உங்களால் எதையுமே சாதிக்க முடியாது!

— எஸ். ஆர்.

**Conduct Expected** என்ற புத்தகம் வழக்கமான ''முன்னேறுவது எப்படி?'' நூல்களிலிருந்து வித்தியாசமாகத் திகழ்கிறது. அருமையான இந்த நூலின் ஒரு பகுதியே இங்கு சுருக்கித் தரப்பட்டுள்ளது என்பதோடு உள்ளூர் நிலவரங்களுக்கு ஏற்பத் தழுவி எழுதப்பட்டுள்ளது. முழு நூலையும் படிப்பது மிகுந்த பயன் அளிக்கும். நூலாசிரியர்: **William Lareau.** பதிப்பாளர்: **New Century Publishers, 220, Old New Bruswick Rd., Piscataway, NJ. 08854, U.S.A.** விலை: **$ 12.95.**



## வட்டமேஜை

* தலையங்கத்தைப் படிக்கப் படிக்க மனம் நெகிழ்ந்து, கண்ணில் நீர் துளித்தது. 'கல்கி'யில் உள்ள பிறவற்றைப் பிறகு படித்துக் கொள்ளலாம் என்று மூடி வைத்து விட்டேன்.

சென்னை — 33, எஸ். ராம்கோபால்.

* எம். ஜி. ஆர். வாழ்க்கை — புகைப்பட ஆல்பம் ஒவ்வொருவரும் பாதுகாக்க வேண்டிய ஒன்று! முதல் அட்டை வண்ணப்படத்தை வெட்டி அட்டையில் ஒட்டி என் அஞ்சலியைச் செலுத்திவிட்டேன்! தலையங்கத்தில் புரட்சித்தலைவரின் சாதனைகளைக் கூறியுள்ள பாங்கு பாராட்டுதற்குரியது! நிச்சயமாக நாமெல்லாம் இப்படிப்பட்ட ஒரு பாரி வள்ளலைப் பெற்றதற்குத் தலைநிமிர்ந்துதான் நிற்க வேண்டும்.

விழுப்புரம், வி. கே. சாந்தகுமாரி.

* எம். ஜி. ஆரின் புகைப்பட ஆல்பம் கண்டேன். அவர் வாழ்க்கையில் நடந்த முக்கியமான சம்பவங்களை 'பிளாஷ் பேக்'கில் பார்ப்பதைப் போல் இருந்தது.

சீர்காழி, எல். ஜி. ரவிச்சந்தர்.




* கண்ணீர் விட்டுக் கதறும் தமிழகம். இப்படிப்பட்ட ஒரு தலைப் புதல்வனைப் பெற்றதற்காகத் தலை நிமிர்ந்து நிற்கிறது' என்ற 'பொன்மனச் செம்மல்' தலையங்கத்தின் கடைசி வரிகள் என்னை மெய்சிலிர்க்க வைத்தது மட்டுமல்ல, கண்ணீர் விடவும் வைத்தது. இப்படிப்பட்ட ஒரு மகத்தான தலைவர் வாழ்ந்த காலத்தில் வாழ்ந்தோம் என்று இந்த நேரத்தில் பூரிப்பு அடைகிறேன்.

ஆத்துப்பாலம், புரட்சிப்பித்தன்.

* 'சாதனைத் தலைவன்' தமிழக முதல்வர் எம். ஜி. ஆரின் அந்த நாள் நினைவுகளை நெஞ்சில் நிழலாடச் செய்த புகைப்பட ஆல்பம் கண்களை மட்டுமல்ல, நெஞ்சத்தையும் நெகிழ வைத்தது. அந்தப் பொன் மனத்தின் புகழுக்கு மகுடம் வைத்தது போலிருந்தது 'கல்கி'யின் பொருள் பொதிந்த சிறப்புத் தலையங்கம்!

திண்டுக்கல், — 1, வே. சோமன்.

* அமரர் எம். ஜி. ஆரின் அட்டைப்படமும், மற்றும் புகைப்பட ஆல்பமும் பார்த்தேன். இதுவரை எந்தப் பத்திரிகையும் போடாத பழைய, படங்களை அளித்த கல்கிக்கு எங்களது மனமார்ந்த நன்றி!

தென்காசி, பழனிகதிர்.

* எங்கள் ஊரில் பணத்தைப் பறிகொடுத்ததோடல்லாமல், தன் சிறுநீரகத்தையே விற்று, தனக்கு நேர்ந்த அவப்பெயரைப் போக்கிட நினைக்கும் நவநீதகிருஷ்ணனைப் பார்த்தால் பரிதாபமாய் இருக்கிறது. அதே நேரத்தில், எங்கள் ஈரோடு பஸ் நிலையத்தில், ஒரு நிமிடம் ஏமாந்தால், ஆளையே அபேஸ் செய்யும் அவல நிலை. இந்த லட்சணத்தில் — பஸ் நிலையத்திற்குள்ளேயே காவல் நிலையம் வேறு! இனியாவது விமோசனம் கிடைக்குமா?

ஈரோடு, சரவணன்.

* "87 - இல் இவர்களைப் பாதித்தவை" — தொகுப்பில் வந்த கருத்துக்களில் ஈழத்துப் பெண் கவிஞர்களின் 'சொல்லாத சேதி' பற்றிச் சொன்ன கவிஞர் இன்குலாப்பின் கருத்து என்னை மிகவும் பாதித்தது. 'முனைப்பு' கவிதை மிகவும் அருமை.

திருமருகல், சுவாதி. எஸ். செந்தில்குமார்.

* கோவை மாவட்டத்தில் அதிகாரிகள் அக்கறையோடு இயங்குவது குறித்து மகிழ்ச்சிதான். ஆனால் படித்த ஒரு துணை வேந்தர், தட்டிக் கேட்டால் எரிந்து விழுகிறாரே? அவரை என்ன செய்ய?

குத்தாலம், — 1, எஸ். ராஜா.

* துருவங்கள் இணைய முடியாதுதான். ஆனாலும் எதிர்த் துருவங்களுக்கிடையே ஓர் ஈர்ப்பு உண்டு. இல்லாவிட்டால் இருபத்தைந்து ஆண்டுகள் தாம்பத்திய வாழ்க்கையில் ஈடுபட்டிருப்பார்களா? இருந்தும் தாம்பத்திய வாழ்க்கையில் கணவன் மனைவிக்கிடையில் ஏற்படும் பிரச்னைகளின் வகைகளையும், உபத்திரவங்களையும் பெண்கள் மட்டுமே தீர்வுக்க வேண்டியிருக்கிறது என்பதை மனம் கனக்கும் வகையில் 'அன்னம்' 'துருவங்கள்' கதையில் காண்பித்துள்ளார்.

விருத்தாசலம், இரா. துரையப்பன்.

* தமிழன்பனின் 'ஒரு நல்ல ஆரம்பம் தொடருமா?' ஜீவனுள்ள கவிதை! அதன் ஒவ்வோர் அடியிலும் உயிரோட்டத்தைக் காண முடிந்தது!

திருச்சி — 16, எஸ். ராஜகோபால்.

* உலக மக்களின் ஒட்டுமொத்தச் சந்தேகம்தான் கவிஞர் தமிழன்பன் அவர்களின் கவிதையிலும் இழையோடுகிறது. "ஏவுகணைச் செலவுகளில் எல்லோர்க்கும் ரொட்டி கட்டித் தர வல்லரசுகள் முன் வருமா?" என்ற கவிஞரின் எதிர்பார்ப்புதான் இன்று எல்லோரது எதிர்பார்ப்புமாகும்.

பையூர், இரா. சேகர்.

* தங்களின் 03.01.88 இதழில் வெளிவந்த கேள்வி — பதில் பகுதி மிகவும் பிரமாதம். கேள்விகளின் தேர்வு, அதற்குப் பதில்கள் அளித்த விதம், இரண்டும் மனத்தைக் கவர்ந்தன. இப்பகுதி கல்கியின் தரத்துக்கு அத்தாட்சி.

வெம்பாக்கம், கு. கன்னியப்பன்.

தளபதி திடமதி:

# டாக்டர் பட்டம் மட்டும் போதுமா?







"ஆசிய அளவிலான விளையாட்டுப் போட்டிகளில் நமது நாடு நிறைய பதக்கங்களைக் குவிக்கிறது; ஆனால் ஒலிம்பிக்கில் பதக்கங்கள் பெற முடிவதில்லை. எனவே ஒலிம்பிக்கை ஆசிய அளவில் நடத்த திட்டமிட வேண்டும் என்று இங்கு வருகை தந்துள்ள விளையாட்டுத் துறை அமைச்சருக்கு வேண்டுகோள் விடுக்கிறேன்!"

— சு. இளங்கோவன், முகாசமசம்பட்டி

"எங்கள் தலைவருக்கு டாக்டர் பட்டம் மட்டும் போதுமா? அவரது அறிவு, ஆற்றல், சாதனை இவற்றைப் பாராட்டி, அவ்வப்போது வக்கீல், இன்ஜினியர், விஞ்ஞானி ஆகியோருக்குத் தரப்படும் பட்டங்களையும் வழங்கி, பல்கலைக் கழகம் பெருமை தேடிக் கொள்ள வேண்டும் என்று துணைவேந்தருக்கு யோசனை கூறுகிறேன்!"

— இரா. சம்பத்குமார், இராசிபுரம்.

திடமதி: "தலைவரே! ஐந்தில் திருந்தாதது பதினைந்தில் திருந்துமா?"

அமைச்சர்: "திருந்தாதுதான், அதுக்கென்ன இப்போ?"

திடமதி: "அப்படின்னு பிளஸ் டூ வில் காப்பி அடித்தால் சிறைத் தண்டனைங்கிறதை மாற்றி எல்.கே.ஜியில் காப்பி அடித்தால் சிறைத் தண்டனைன்னு சட்டம் கொண்டு வர வேண்டியது தானே!"

— ஆ. நல்லமுத்து, பாளையங்கோட்டை.

"விலைவாசி உயர்ந்து விட்டது, வறட்சி நிலவுகிறது; லஞ்ச ஊழல் அதிகரித்து விட்டது என்று புலம்பும் எதிர்க்கட்சியினருக்கு நான் கூறிக் கொள்கிறேன்... இதையெல்லாம் எண்ணி வருந்தக் கூடிய மக்களின் கண்ணீரைத் துடைக்கத்தானே எங்கள் அரசு இலவசத் துண்டுகளை வழங்குகிறது! இதை எண்ணிப் பார்த்தீர்களா? என்று கேட்கிறேன்!"

— ப. பொ. அசோகன், கொசவம்பட்டி.

பரதன் அச்சகத்தில் அச்சிட்டவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிட்டவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
நிர்வாகக் காரியாலயம்: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: 431543, 434157.
ஆசிரியர் குழு அலுவலகம்: 28, ஐந்தாவது தெரு, ஏரி வட்டம், நுங்கம்பாக்கம், சென்னை — 600 034. போன்: 473389.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/-; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 280/-; விமானத் தபால் ரூ. 680/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/-; வெளி நாடு: கப்பல் தபால் ரூ. 140/-; விமானத் தபால் ரூ. 340/-.



**"என் மகளுக்கு கேர்ஃப்ரீ வாங்கித்தர நான் முடிவுசெய்தது ஏனென்றால்."**

அந்த நாட்கள் எனக்கு இன்னும் நினைவிருக்கு. அப்போது எனக்கு என் மகள் வயதிருக்கும். மாதத்தில் அந்த 5 நாட்களை எத்தனை கடினமாக கடந்தேன்... சங்கடம், தொல்லை, சிரமம். அதைவிட மோசம் என்னவென்றால் எங்கள் காலத்தில் வீட்டுத் தயாரிப்புகளையே உபயோகித்தோம். அது தர்மசங்கடமாயிருக்கும். அதைத் துவைத்து காயப் போட்டு போதும் போதும் என்றாகிவிடும். ஆனால், இப்போது காலம் மாறிவிட்டது.

நான் வாழ்ந்த காலம் வேறு. அதிலிருந்து முற்றிலும் மாறுபட்ட காலத்தில் வாழ்கிறாள் என் மகள். இக்கால பெண்கள் மாதத்தின் அந்த 5 நாட்களில் கூட மிகத் துடிப்போடு செயல்பட வேண்டியுள்ளது. எங்கள் காலத்தை விட இப்போது, மாறிவரும் உலகிற்கேற்ப பன்மடங்கு சுறுசுறுப்புடன் இயங்க வேண்டியுள்ளது. ஆகவேதான், என் மகளுக்கு நான் கேர்ஃப்ரீ தேர்ந்தெடுத்தேன். காரணம், நான் இளம் பெண்ணாக இருந்தபோது அனுபவப்பட்டதைப் போல், என் மகளும் சிரமப்படக் கூடாதல்லவா.

முக்கியமான அம்சம் என்னவென்றால் கேர்ஃப்ரீ ஒரு ரெடிமேட் நாப்கின். நான் அந்தக் காலத்தில் செய்தது போல் என் மகள் துவைத்துக் காயப் போட்டு சங்கடப்பட வேண்டியதில்லை. தேவையானபோது ஒவ்வொரு முறையும் புத்தம் புதிய சுத்தமான ஒரு நாப்கினை எடுத்து அவள் உபயோகிக்கலாம். ஒரு தாயாகிய எனக்கு எது முக்கியம் என்றால், கேர்ஃப்ரீ மிகமிக சுகாதாரமானது என்பதுதான்.

உள்ளும் சுகமும்

அது, கனமில்லாமல் மெல்லியதாக அடக்கமாக இருந்தாலும் என் மகளுக்கு தேவையான பாதுகாப்பைத் தருகிறது. மாத விலக்கை நாப்கினுள் விரைவாக உறிஞ்சிக் கொள்ளக்கூடிய அது, நன்கு அதிகம் உறிஞ்சும் அடுக்குகள் கொண்டது. அது எப்போதுமே உலர்வான உணர்வோடும் வசதியாகவும் வைத்துக் கொள்வதாக என் மகளே கூறுகிறாள். அது மட்டுமா, கேர்ஃப்ரீ எக்ஸ்ட்ரா லார்ஜும் (கூடுதலான பெரிய நாப்கின்) உள்ளது. நீண்ட, அகன்ற, தடிப்பான கேர்ஃப்ரீ எக்ஸ்ட்ரா லார்ஜ், அவளுக்கு கூடுதல் பாதுகாப்பையும் பத்திரமான உணர்வையும் அளிக்கிறது— அந்த சங்கடமான நாட்களில் அல்லது அவளுக்கு



அது தேவைப்பட்டபோது.

கேர்ஃப்ரீ உபயோகிப்பதால் வெளியில் சென்று சுற்றி வந்தாலும்கூட அவள் பாதுகாப்பாகவும், பத்திரமாகவும் உணர்கிறாள்.

ஆகவேதான், எங்கள் காலத்தில் கிடைக்காத ஒன்றை என் மகளுக்குத் தர முடிவதை எண்ணி பூரிப்படைகிறேன்··· அதுதான் கேர்ஃப்ரீ வசதி...கேர்ஃப்ரீ பாதுகாப்பு. மாறிவரும் காலத்தோடு நாமும் மாற வேண்டாமா!

கேர்ஃப்ரீ சானிட்டரி நாப்கின் - இன்றைய மாறிவரும் உலகிற்கேற்ற முழுமையான சுகம், முழுமையான பாதுகாப்பு







**கேர்ஃப்ரீ. காரணம், காலம் மாறுவதற்கேற்ப அவளும் மாறுகிறாள்.**

